# திருமுறை இலக்கியம்

முனைவர் சோ. ந. கந்தசாமி
பேராசிரியர் & தலைவர்
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி. டி. டி. ஐ. (அஞ்சல்), தரமணி, சென்னை - 600 113.

தாமரைத் திரு. வ. சுப்பையாபிள்ளை
அறக்கட்டளைச் சொற்பொழிவு—7
(25,26-4-'94)
Padmasri. V. Subbiah Pillai Endowment Lecture, No-7

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | **Thirumurai Ilakkiam** |
| Author | : | Dr. S. N. KANDASAMY<br>Professor & Head, Department of Literature, Tamil University, Thanjavur. |
| Puplication & Copyright | : | International Institute of Tamil Studies, C. I. T. Campus, Taramani, Madras-600113. |
| Publication No | : | 218 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | December 1995 |
| Edition | : | First |
| Paper Used | : | 16 kg White Printing paper |
| Size | : | 21 × 14 cms |
| Printing types | : | 10, '10', 18, pts |
| No. of copies | | 1200 |
| No. of pages | : | VIII + 256 |
| Price | : | Rs. 50/- (Rupees Fifty only) |
| Printers | | N. D. S. Printers,<br>42, Vellala Street,<br>Aminjikarai, Madras-600 029. |
| Artist | : | S. Sathiya |
| Subject | : | Studies of Saiva Literature |



* வெள்ளி விழா வெளியீடு.

டாக்டர் ச. சு. இராமர் இளங்கோ
இயக்குனர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

# அணிந்துரை

தாமரைத் திரு. வ. சுப்பையா பிள்ளை அறக்கட்டளை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1983-இல் நிறுவப் பட்டது. சைவ சமய சிந்தனைகளை ஆய்வு செய்தல் இதன் நோக்கம். இந்நோக்க நிறைவேற்றலின், 7-வது சொற்பொழி வாக அமைந்தது 'திருமுறை இலக்கியம்'. 25, 26-4-94 இரண்டு நாட்கள் நடந்த இச்சொற்பொழிவை நிகழ்த்தியவர் பேராசிரியர் சோ. ந. கந்தசாமி.

தமிழ் இலக்கியம் கற்ற பேராசிரியர்கள் இன்று பிறதுறை சார்ந்தும் பல்வேறு ஆய்வுகளை நடத்தி வருகின்றனர். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் முனைவர் சோ.ந. கந்தசாமி. தத்துவம், மொழியியல், மொழிபெயர்ப்பு போன்ற பல்துறைகளையும் தொட்டுத் துலக்கியுள்ளார் இவர்.

பாரதி பாட்டுப் பாதையில் தோன்றிய புரட்சிக் கவிஞர் புரட்சிதாசனைப் பற்றி, பிற மொழியாளர்கள் கற்று உணர் வதற்கு ஏற்ற ஆங்கில நூல் ஒன்றேனும் வரவில்லையே என்ற தமிழ் ஆர்வலரின் ஏக்கத்தைத் துடைக்க, 'Bharathidasan As a Romantic Poet' என்ற திறனாய்வு நூலினைத் தந்தவர் இவர். 'தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்' என

யாப்புத் தொடர்பாக நூல் தந்தவர். இவர் தம் தத்துவத் துறை ஈடுபாடு மிகவும் சிறப்புடையது. இந்தியத் தத்துவ மரபையும், ஐரோப்பியத் தத்துவ மரபையும் ஆய்ந்து நூல்எழுதி, கற்றோர் மத்தியில் விழிப்புணர்ச்சியைத் தோற்றுவித்த ராகுல் சாங்கிருத்தியாயன் போன்று தத்துவத் துறைக்கு அரும்பெரும் தொண்டு செய்தவர்.

இந்தியத் தத்துவ மரபில் 'உலகாய்தம்' பற்றி நூல்கள் உள. ஆயின் தமிழில் சாங்கியத் தத்துவம் பற்றி விளக்கமாக நூல் இல்லை. இச்சூழலில் இந்தியத் தத்துவ மரபை நன்கு கற்றுணர்ந்து 'தமிழும் தத்துவமும்' என்ற நூலை அளித்தவர் சோ.ந. கந்தசாமி. இவரது 'Buddhism as expounded in Manimekalai' 'பௌத்தம்' நூல்களும் குறிப்பிடத்தக்கவை. அண்மையில் எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் இவர்தம் ''புறத்திணை வாழ்வியல்'' என்ற ஆய்வு நூல் வெளியிடப் பெற்றது.

''ஒண்டமிழ்த் தாய்ச் சிலம்படியின்
முன்னேற்றம் ஒவ்வொன்றும்
உன் முன்னேற்றம்!
கண்டறிவாய்! எழுந்திரு நீ!
இளந்தமிழா! கண் விழிப்பாய்!
இறந்தொழிந்த
பண்டை நலம் புதுப்புலமை
பழம் பெருமை அனைத்தையும் நீ
படைப்பாய்! இந்நாள்
தொண்டு செய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித் தெழுந்தே!''

என்ற பாரதிதாசன் பாட்டை அடியொற்றிச் செயல்படுபவர் பேராசிரியர் என்றால் அது மிகையாகாது.

புகழ் பூத்த அப்பேராசிரியர் ஆற்றிய 'திருமுறை இலக்கியம்' நூலாக வெளிவருகிறது. இந்நூலை வெளியிடு வதில் நிறுவனம் மகிழ்ச்சி கொள்கிறது. பேராசிரியரின் பெருமைக்கு மேலும் பெருமை சேர்க்கும் விதமாக இந்நூல் அமைகிறது.

இந்த அறக்கட்டளையை நிறுவிய திருவாளர் இரா. முத்துக்குமாரசாமி அவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரித்து. நிறுவனப் பணிகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறைச் செயலாளர் அவர்களுக்கும் நிறுவனத்தின் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறோம்.

சிறந்த முறையில் நூலினை அச்சிட்டுத்தந்த 'என்.டி.எஸ்.' அச்சகத்தினருக்கும், நல்ல முறையில் மெய்ப்புத் திருத்திய டாக்டர் ஆர். ஆளவந்தார் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

அன்புடன்
**இயக்குனர்**

*12-12-95*

**முனைவர் சோ. ந. கந்தசாமி**
பேராசிரியர் & தலைவர்,
இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் — 613005.

# முன்னுரை

தமிழில் தோன்றிய மூல இலக்கியங்களில் (Original Literatures) சங்க இலக்கியத்தைப் போலவே திருமுறை இலக்கியமும் சிறப்பாகச் சுட்டுதற்கு உரியது. சங்க கால மக்களின் வாழ்வியலை அறிதற்குச் சங்க இலக்கியம் ஆவண மாதப் பயன்படுதல் போல், இடைக்காலத் தமிழ்மக்களின் சமுதாய வரலாற்றினை விளங்கிக்கொள்ளுதற்குத் திருமுறை இலக்கியம் கருத்துக் கருவூலமாகப் பயன்படுகிறது. சங்கப் புலவர்களைப் போலவே திருமுறை ஆசிரியர்கள் பல ஊரினர்; பல தொழிலினர்; பல குலத்தவர்; வேந்தரும் உளர். இவர்கள் பல காலத்தவர். கி. பி. 5ஆம் நூற்றாண்டினராகக் கருதப் பெறும் காரைக்காலம்மையார் முதல், கி. பி. 12ஆம் நூற்றாண் டினராகிய சேக்கிழார் முடிய அருளாசிரியர்கள் இருபத் தெழுவர் பாடிய பதினெண் ஆயிரத்திற்கும் மேற்பட்ட செந்தமிழ்ப் பாடல்கள் பன்னிரு திருமுறைகளாகத் தொகை வகை செய்யப்பெற்றன. நம்பியாண்டார் நம்பியின் உதவியால் திருமுறையின் பெரும்பகுதியைத் தில்லைக் கோயிலில் கண் டெடுத்துத் தமிழகத்திலும், தன்னாட்சி பரவியிருந்த தென் கிழக்காசிய நாடுகளிலும் பரப்பிய பெருமைக்குரியவன் மாமன்னன் முதலாம்இராசராசசோழன் (கி.பி. 985 - 1044) ஆவான். திருமுறைகளின் தோற்றமும், மீண்டும் அவற்றைக் கண்டெடுத்துப் பரப்பிய சூழலும் தமிழர் வரலாற்றில் ஒரு மறுமலர்ச்சியை (Renaisance) உண்டாக்கியது எனலாம்.

திருமுறைகள் தமிழிசையை வளர்த்தன. கோயிற்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை முதலிய அருங்கலைகளின் வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைந்தன. தமிழர் வாழ்வியலில் நம்பிக்கை பாய்ச்சிய சுடர்மணிகளாகத் திருமுறைப் பாசுரங்கள் திகழ்ந் துள்ளன. திருமுறை ஆசிரியர்கள் தமிழ்ப்பற்றையும் தமிழர் பண்பாட்டையும் வளர்த்தவர்கள். தமிழில் விருந்தாய பல

இலக்கிய வகைகளைப் படைத்த சிறப்புக்குரியவர்கள். கருத்துப்புலப்பாட்டிற்கு ஆற்றலும் இனிமையும் சேர்க்கும் பல புதிய பாவடிவங்களை வழங்கிய பெருமையும் இவர்களுக்கு உண்டு. இயற்கையில் ஈடுபாடும் கற்பனை வளமும் வாய்ந்த அருளாளர்கள் ஆகிய திருமுறை ஆசிரியர்கள் தம் படைப்புக் களை இலக்கியச்சுவை பயப்பதற்காக மட்டும் பாடினாரல்லர். மனித நேயமும், தொண்டுள்ளமும் மிக்க இச்சான்றோர்கள் மனிதகுலம் மேம்படுதற்குரிய நெறிகளையும், குறிக்கோள் களையும் தம் பாடல்களில் போதிய அளவில் புலப்படுத்தி யுள்ளனர்.

திருமுறைகளின் மாட்சியையும் சிவநெறியின் சிறப்பினை யும் யாவரும் அறிந்து போற்றுதல் வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சி யாளராக விளங்கித் தமிழுக்கும், சைவத்திற்கும் பெருந் தொண்டாற்றிய தாமரைத் திருவினார் வ. சுப்பையா பிள்ளை அவர்களின் பெயரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப் பெற்றுள்ள அறக்கட்டளையின் சார்பில் 1994, ஏப்பிரல் திங்களில் ''திருமுறை இலக்கியம்'' என்ற தலைப்பில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் இப்பொழுது நூல்வடிவம் பெறுதல் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெள்ளிவிழா வெளியீடாக இந்நூலினை அச்சிட்டுவக்கும் நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் ச. சு. இராமர் இளங்கோ அவர்கட்கும், அறக்கட்டளை நிறுவிய திருமிகு இரா. முத்துக்குமாரசாமி எம். ஏ., அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைப் புலப் படுத்துகிறேன். அறக்கட்டளைச் சொற்பொழிவு அமைப்பாளர் முனைவர் (திருமதி) ச. சிவகாமி அவர்களுக்கும் இந்நூலினை நன்முறையில் அச்சிட்ட என். டி. எஸ். அச்சகத்தார்க்கும், மெய்ப்புத்திருத்தப் பணியினைச் செய்த முனைவர் ஆர். ஆளவந்தார் அவர்கட்கும் என் நன்றி உரியது.

**சோ. ந. கந்தசாமி**

11-12-95

# உள்ளே

# திருமுறைப் பொருண்மை

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சைவத் திருமுறைகளின் தோற்றம் பலவகையாலும் சிறப்பு வாய்ந்தது. சங்கம் மருவிய காலத் தமிழகத்தில் சமண, பௌத்தச் சமயங்களின் ஆதிக்கம் ஓங்கியது. நீதிபோதனை ஓதுவதற்காக வந்த புறச்சமயத்தவர்கள் தமிழகத்திற்கே உரிய சமயநெறிகள் பாதிப்படையும்படி பழகிவிட்டனர். தமிழர்கள் வளர்த்த கலைகள் காமச் சுவையினை வளர்ப்பன என்று கருதினர். இல்லறத்தை இழித்தும் பழித்தும் பேசியவர்கள் துறவறமே வீட்டின்பம் பயக்கும் என்றனர். பெண்களுக்கு வீடுபேறு இல்லை என்றும் ஆண்பிறவி எடுத்தே முத்திக்கு முயலவேண்டும் என்றும் மொழிந்தனர். வினைக்கொள்கைக்கு முதன்மை கொடுத்தனர். எனவே, ஒருவரின் உயர்வு தாழ்வு, நன்மை தீமை என்பன முன்பே தீர்மானிக்கப்பட்டு விட்டமையால் வினைப்பயனிலிருந்தும் மீட்சியில்லை என்றனர். இதனால் துன்புறும் மாந்தரின் துன்ப நீக்கத்திற்கு வழியின்றி வாழ்க்கையில் நம்பிக்கைத் தளர்ச்சி தோன்றஏதுவாயிற்று. எனின், பரம்பொருளின் திருவருளினைப் பத்தி செய்து பெறமுடியும் என்றும், அதனால் துன்பம் நீங்கி என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம் என்றும் தமிழ் ஞானிகள் உணர்ந்து உணர்த்தும் சூழல் உருவாகியது. இதன் பயனாக வாழ்க்கையில் நம்பிக்கையும் திருவருளில் ஈடுபாடும் அமைந்தன.

தமிழர் பண்பாட்டிற்கு இடுக்கண் ஏற்பட்ட போதும் தமிழ்க் கலைகளுக்கு ஊறு நேரிட்ட போதும் தமிழர் தம் பண்பாட்டினையும் கலைச் செல்வங்களையும் இறைக் கொள்கைகளையும் பேணிக் காக்கும் பெருநோக்கில் பத்தி இயக்கம் தோன்றியது. பத்தி இயக்கமே பத்தி இலக்கியம் தோன்ற வழிவகுத்தது.

இந்த இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாக வளர்ச்சி பெற்றது. எனவே, மக்கள் மொழியாகிய தமிழுக்கு முதன்மை வழங்கப் பெற்றது. இவ்விலக்கியத்தின் விளைவாகத் திருமுறைகள் தோன்றின.

## திருமுறைகளின் தோற்றம்

சமயத் தலைவர்களைத் தெய்வநிலைக்கு உயர்த்திய சமண, பௌத்த நெறிகளைச் சைவர்கள் ஏற்க உடன்படவில்லை. முழுமுதற்கடவுள், பிறவா இறவாப் பெரியோன் என்று பேசினர். முழுமுதற்கடவுள் எப்பொருளிலும் கலந்தும், கடந்தும் விளங்கும் திறனை உணர்த்தினர். சைவசமயம் தழைத்தோங்கவும் தமிழ்மொழி சிறந்தோங்கவும் தமிழ்க்கலைகள் வளம் பெறவும் அருள்நெறி எங்கும் பரவவும் சமயக் குறவர்கள் பணியாற்றினர். இவர்கள் ஆற்றிய இறைபணி மக்கட்பணியாகப் பொலிவுற்றது. இவர்கள் உள்ளத்தாலும் உணர்வாலும் செயலாலும் மாசற்ற மாண்பினர். பூசும் நீறுபோல் உள்ளமும் புனிதர். சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர். இவர்கள் பாடியவை பண்சுமந்த பாடல்கள். இவை பசு கரணங்கள் எல்லாம் பதி கரணங்களாக உருமாற்றம் பெற்ற நிலையில் **''எனதுரை தனதுரை''** (திருஞான. 1.76) என்றபடி இறைவனே உண்ணின்று உணர்த்தப் பெருகிய உருக்கத்தால் பாடப்பெற்றவை. அற்புதங்கள் பலவற்றை விளைத்தவை, இறைவனையே ஏவல் கொண்டவை. கல் போன்ற உள்ளத்தையும் கனிவிக்கும் ஆற்றல் படைத்தவை. கற்போரை அருள்நெறியில் நிற்கச் செய்பவை. தமிழில் தோன்றிய மறைமொழிகள். இவர்தம் அருளிச் செயல்களைத் திருமுறை என்ற பெயரினால் வழங்குவது சைவ மரபு ஆகும்.

திருஞானசம்பந்தப் பெருமான் முதலாகச் சேக்கிழார் பெருமான் உள்ளிட்ட அருள்ஞானச் செல்வர்கள் இருபத்து எழுவர் தேனினும் இனிய தீந்தமிழில் பாடியுள்ளனவற்றுள் இப்போது கிடைக்கின்ற 18,346 பாடல்களைப் பன்னிரு திருமுறைகளாகத் தொகை வகை செய்து சான்றோர் வழங்கி வருகின்றனர். இவர்தம் அருளிச் செயல்கள், திருமுறைகளின் அடைவு, காலம் முதலிய விவரங்களைப் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

| வ. எண் | திருமுறையாசிரியர் | பாடிய பதிகங்கள்/ பிரபந்தம் | எண்ணிக்கை | திருமுறை | காலம் (கி.பி.) |
|---|---|---|---|---|---|
| 1. | திருஞானசம்பந்தர் | 384 | 4158 | 1,2,3, திருக்கடைக்காப்பு | 7 நூ. |
| 2. | திருநாவுக்கரசர் | 312 | 3066 | 4,5,6, தேவாரம் | 575—656 |
| 3. | சுந்தரர் | 100 | 1026 | 7 திருப்பாட்டு | 8 நூ. முற்பகுதி |
| 4. | மாணிக்கவாசகர் | 51 | 658 | 8 திருவாசகம் | 8 நூ. பிற்பகுதி |
| | ,, | | 400 | 8 திருச்சிற்றம்பலக் கோவையார் | ,, |
| 5. | திருமாளிகைத்தேவர் | 4 | 45 | 9 திருவிசைப்பா | 9 நூ. பிற்பகுதியும் 10 நூ. முற்பகுதியும் |
| 6. | சேந்தனார் | 3 | 34 | 9 ,, | ,, |
| | ,, | 1 | 13 | 9 திருப்பல்லாண்டு | ,, |
| 7. | கருவூர்த்தேவர் | 10 | 105 | 9 திருவிசைப்பா | 10 நூ. பிற்பகுதியும் 11 நூ. முற்பகுதியும் |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 8. | பூந்துருத்திநம்பிகாடநம்பி | 2 | 12 (2+10) | ,, ,, | ,, |
| 9. | கண்டராதித்தர் | 1 | 10 | ,, | 950—957 |
| 10. | வேணாட்டடிகள் | 1 | 10 | ,, ,, | 10 நூ. பிற்பகுதி |
| 11. | திருவாலியமுதனார் | 4 | 42 | ,, | 10 நூ. |
| 12. | புருடோத்தமநம்பி | 2 | 22 | ,, | ,, |
| 13. | சேதிராயர் | 1 | 10 | ,, | 11 நூ. முற்பகுதி |
| 14. | திருமூலர் | | 3047 | 10 திருமந்திரமாலை | 500 |
| 15. | திருவாலவாயுடையார் | 1 | 1 | 11 பிரபந்தமாலை | 8, 9 நூ. |
| 16. | காரைக்காலம்மையார் | 4 | 143 | ,, | 5, 6 நூ. |
| 17. | ஐயடிகள்காடவர்கோன் | 1 | 24 | ,, | 7 நூ. |
| 18. | சேரமான்பெருமாள் நாயனார் | 3 | 130 +1 | ,, | 8 நூ. |
| 19. | நக்கீரதேவநாயனார் | 10 | 199 | ,, | 600 |
| 20. | கல்லாடதேவநாயனார் | 1 | 1 | 11 பிரபந்தமாலை | 650 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 21. | கபிலதேவநாயனார் | 3 | 157 | ,, | ,, |
| 22. | பரணதேவநாயனார் | 1 | 100 | ,, | ,, |
| 23. | இளம்பெருமான் அடிகள் | 1 | 30 | ,, | 9 நூ. |
| 24. | அதிராவடிகள் | 1 | 23 | ,, | ,, |
| 25. | பட்டினத்துப்பிள்ளையார் | 5 | 210 | ,, | 875—950 |
| 26. | நம்பியாண்டார்நம்பி | 10 | 383 | ,, | 970—1040 |
| 27. | சேக்கிழார் | 1 | 4286 | 12 திருத்தொண்டர் புராணம் | 12 நூ. பிற்பகுதி |

திருமுறைகண்ட புராணத்தில் திருஞானசம்பந்தரின் 384 பதிகங்கள் கூட்டப் பெற்றுள்ளன [25]. எனின், சுவடிகளின் வழி 383 பதிகங்களே அறியப் பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றன. பின்னர், திருவிடைவாய் என்ற தலத்துக் கோயிற் கல்வெட்டில் அவ்வூர்க்குரிய சம்பந்தரின் பதிகம் கண்டெடுக்கப் பெற்று அதுவே, திருமுறை கண்ட புராணம் சுட்டும் 384 ஆம் பதிக மாகும் என்றும் திருமுறை ஆராய்ச்சி அறிஞர்களால் கொள்ளப் பெற்றது. பின்னர், சுவடி மூலம் கிடைக்கப்பெற்ற கிளியன்ன ஊர்ப்பதிகமும், ''பொன்னார் இதழி விரைமத்தம்'' எனத் தொடங்கும் சுந்தரர் பதிகமும் வெள்ளிப்பாடல்கள் என்று விலக்கப் பெற்றன என்பது நோக்கத்தக்கது

## திருமுறை—விளக்கம்

திருமுறை என்ற சொல் திருமந்திரத்தில் காணப்படுகிறது (1067). இச்சொல்லிற்குத் தெய்வத்தன்மையும் அழகும் அருட் செல்வமும் பொருந்திய பனுவல் என்பது பொருளாகும். பரம் பொருளை உள்ளத்தாலும், உணர்வாலும் கண்டு அனுபவித்த மகான்களின் அனுபவ மொழிகளாக ஒளிவீசும் திருமுறைப் பாடல்கள் தெய்வத்தன்மை பொருந்தியவை என்பதும் பயில் வாரால் விரும்பப்பெறும் வனப்பு வாய்ந்தவை என்பதும் தெளிவு. ஏனைய நூல்களுக்கு இல்லாத அழகு திருமுறை களுக்கு உண்டு. செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே என்று அருட்செல்வத்தை வற்புறுத்தும் அருமறையாகத் திருமுறை திகழ்கிறது.

முறை என்ற சொல் நூல் என்ற பொருளைக் குறிக்கும். கந்தபுராணத்தின் பாயிரப்பகுதியில்,

''இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேன்என முயல்வ தொக்குமால்''

என்று வரும் பகுதி காணத்தக்கது. இப்பாடலில் முறை என்ற சொல் பனுவல் என்ற பொருளில் வழங்கியுள்ளது.

ஆண்டவனை நோக்கிய முறையீடு என்ற பொருளிலும் இச்சொல்லைக் கருதலாம். இவ்வகையில் முறை என்ற சொல் தோத்திரம் என்ற பொருளிலும் வழங்கியது. திருஞான சம்பந்தர்,

''முறையாயின பலசொல்லி ஒண்மலர் சாந்தவை
கொண்டு
முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்
றடைவோமே'' (1.12.5)

என்று குறிப்பிடுதல் இங்கு எண்ணத்தக்கது. முறை என்ற சொல்லிற்கு ஒழுங்கு, நீதி, அறம் என்ற பொருளும் உண்டு. திருவள்ளுவர் 'முறை செய்து காப்பாற்று மன்னவன்' எனப் பயின்றமை காணலாம். வாழ்வியலுக்குப் பயன்படும் முறைமை களைக் கூறுதலின் திருமறை என்ற பெயர் சைவஞானிகளின் பாடல் தொகுதிக்குச் சூட்டப் பெற்றிருக்கலாம். இத்தகைய முறைகளை இறைவனே அருளாளர்களின் வழியாக அமைத்து வழங்கின அறத்தின் விழுப்பத்தினை,

''முறை முறை நெறிகள் வைத்தார்'' (4 : 38,7)

என்று திருநாவுக்கரசர் மொழிவதால் உணரலாகும். முறைப் படுத்தப் பெற்றமையால் முறை என்பது காரணப் பெயராக அமைந்தது என்றும் கருத இடம் உள்ளது. முறை-வரிசை, கிரமம் ஆகும். மூன்றாம் அகவையில் அம்மை அளித்த ஞானப் பாலினைப் பருகித், ''தோடுடைய செவியன்'' என்று தொடங்கித் திருநெறிய தமிழ் பாடிய திருஞானசம்பந்தரின் பதிகப்பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாக முறைப்படுத் தினர். இவர் அருளிச் செய்துள்ள பதிகப்பாடல்களில் ஓர் அமைப் பொழுங்கினைக் காணலாம். ஒவ்வொரு பதிகத்தின் எட்டாம் பாடலில் இராவணானுக்கிரக மூர்த்தத்தையும் ஒன்பதாவது பாடலில் இலிங்கோற்பவ மூர்த்தத்தையும் பத்தாம் பாடலில் சமண, பௌத்தக் கண்டனத்தையும் திருக்கடைக்காப்பாகிய பதினோராம் பாடலில் பதிகப் பயனையும் பாடிய தன் பெயரை யும் சுட்டுதல் நோக்கத்தக்கது. சில பதிகங்களில் பிறழ்ச்சியும் மாற்றமும் காணப்படுதலின், இவ்வமைப்பொழுங்கு பெரும் பான்மை நோக்கியே சேக்கிழாரால் சுட்டப்பெற்றது எனலாம்,

(பெரிய 28.77-80).

சூலைநோயினால் துயருற்றுச் சமண் நெறியினின்றும் சைவநெறிக்குத் திரும்பிய திருநாவுக்கரசர் அருளிச் செய்த பாடல்கள் அனைத்தும் 4, 5, 6-ஆம் திருமுறைகளாக முறைப்படுத்தப்பெற்றன. இவற்றுள் ஐந்தாம் திருமறை திருக் குறுந்தொகை என்றும், ஆறாம் திருமறை திருத்தாண்டகம் என்றும் யாப்பின் அடிப்படையில் வழங்கப் பெறுவன. இறைவனால் தடுத்தாட்கொள்ளப் பெற்ற நம்பி ஆரூரரால் அருளிச் செய்யப்பெற்ற பாடல்கள் 7-ஆம் திருமுறையாக முறைப்படுத்தப் பெற்றன. இறைவனே ஊழித்தனிமை கழிக்க வேண்டித் திருக்கரத்தால் எழுதிக்கொண்ட சீர்மைமிக்க மாணிக்க வாசகரின்

பாடல்கள் 8-ஆம் திருமுறையாக எண்ணப்பெற்றன. இவை திருவாசகம், திருக்கோவையார் என்ற இரு பெரும் பனுவல்களாக இலங்குவன. திருமாளிகைத்தேவர் முதல் சேதிராயர் முடிய உள்ள அருட்செல்வர் ஒன்பதின்மர் பாடியவை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற பெயரில் 9-ஆம் திருமுறையாக முறைப்படுத்தப்பெற்றன. இத்திருமுறைக்குத் திருவிசைப்பா மாலை என்ற பெயரும் உண்டு. திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் 10-ஆம் திருமறையாக எண்ணப் பெற்றது. இறையனார், காரைக்கால் அம்மையார் உள்ளிட்ட பன்னிருவர் பாடிய பிரபந்தங்கள் 11-ஆம் திருமுறை என்று முறைப்படுத்தப்பெற்றன. இத்திருமுறையினைப் பிரபந்தமாலை என்ற பெயரினாலும் வழங்கி வருதல் நோக்கத்தக்கது. தொண்டர்களின் வரலாற்றை விரித்துக்கூறும் சேக்கிழார் பெருமானின் அருளிச் செயலாகிய பெரியபுராணம் 12-ஆம் திருமுறையாக வைக்கப் பெற்றது. இதனைத் திருத்தொண்டர் புராணம் என்று கூறுவதும் உண்டு. இங்ஙனம் அருளாளர்களின் பாடல்கள் யாவும் பன்னிரு திருமுறைகளாக முறைப்படுத்தப் பெற்றமையால் திரு என்ற அடை கொடுத்து இவற்றைத் திருமுறை என்று தமிழ்ப் பெருமக்கள் வழங்கி வருகின்றனர். சேக்கிழார் தேவாரத் திருபதிகங்களைத் திருமுறை என்றே சுட்டியிருத்தல் காணத்தக்கது. திருமுறை என்ற சொல் வழக்கு சேக்கிழார் காலத்தவனாக எண்ணப்பெறும் மூன்றாங் குலோத் துங்கனின் கல்வெட்டுகளில்தான் முதன்முதல் காணப்படுகிறது.

திருஞானசம்பந்தரின் பதிகங்களில் சில பன்னிரு பாடல்கள் கொண்டவை. அவற்றுள் பன்னிரண்டாம் பாடல் திருக்கடைக் காப்பாக அமைதல் போல், பன்னிரு திருமுறைகளில் திருத் தொண்டர் புராணம், முதல் பதினொரு திருமுறைகளின் ஞானச் சாரமாக அமைந்திலங்கும் திருக்கடைக் காப்புத் திருமுறையாகப் போற்றத் தகுவது. இத்திருமுறையினைப் பயில்வதால் முன்னைய பதினொரு திருமுறைகளையும் பயில்வதற்குரிய அனுபவமும் அறிவும் ஒருவர்க்கு உண்டாகும். திருமுறைகளை ஓதி ஒழுகுவதன் மூலமே ஒருவர் ஆன்ம ஈடேற்றம் அடைய முடியும் என்பது சைவர்களின் நம்பிக்கை.

### தொகுப்புப்பணி

திருமுறைகளைப் பாடிய காலத்திலேயே அவற்றை முறைப் படுத்தும் பணி தொடங்கிவிட்டதாகத் தெரியவில்லை. ஆனாலும் அப்பாடல்கள் அவை தோன்றியவுடன் காலத்திலேயே கோயில்களில் ஓதப்பெற்றன. திருஞானசம்பந்தர் காலத்தவர்

என மதிக்கப்பெறும் கணநாதர் திருமுறைப்பாடல்களில் ஈடுபாட்டினை உண்டாக்கும் வகையில் மக்களுக்குப் பயிற்சி கொடுக்கும் பணியினை ஆற்றிவந்தவர் என்றும், அதனைச் சாதனமாகக் கொண்டு வீடுபெற்றவர் என்றும் அறிகிறோம். சேக்கிழார்,

"......................
எல்லையில் விளக்கெரிப்பவர் திருமுறை எழுதுவோர்
வாசிப்போர் (3)

......................
அனைய அத்திறம் புரிதலில் தொண்டதை ஆக்கி
அன்புறு வாய்மை
மனையறம் புரிந்தடிய வர்க்கின்புற வழிபடும் தொழில்
மிக்கார்" (4)

என்று கணநாதர் புராணத்தில் இயம்புதல் இங்கு எண்ணத் தக்கது. எனவே, திருவருட்பேற்றிற்குரிய சாதனமாகத் திருப்பதிகங்களைப் பண்ணுடன் பயிலும் பழக்கம் திருமுறை எழுந்த காலத்தில் இருந்தமை புலனாகும். இதனால் முதலிருவர் பதிகங்களையும் திருமுறை எனக்கூறும் மரபு கணநாதர் காலத்தில் விளங்கியமை புலனாகும்.

முதல் ஏழு திருமுறைகளையும் நம்பியாண்டார் நம்பி முதலில் தொகுத்தனர் என்று எண்ணுவோர் பலர்.[1] முதல் பதினொரு திருமறைகளையும் நம்பியாண்டார் நம்பியே தொகுத்தனர் என்பர் சிலர்.[2] சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தைத் தில்லைப்பெருமன்றில் அரங்கேற்றிய பொழுது அனபாய குலோத்துங்கனும் அவையோரும் மதித்துப் போற்றி அதனை 12-ஆம் திருமுறையாக ஏற்றுக் கொண்டனர் என்பர். உமாபதி சிவம் அருளிச்செய்த திருமுறை கண்ட புராணமும் சேக்கிழார் புராணமும் திருமுறைகளின் வரலாற்றினை அறிதற்குப் பெரிதும் உதவுவன.

## தேவாரத் திருமுறை

திருமுறைகள் தொகுப்பினைக் குறித்து ஊன்றிநோக்கின் முதல் ஏழு திருமுறைகளும் ஒரு காலத்தில் தொகை செய்யப்

---

1. பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பாகம், ப. 29.

2. ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, ப. 7-11.

பெற்றிருத்தல் வேண்டும் என்பது ஆராய்ச்சியாற் புலனாகும். இவை மூவர் முதலிகள் பாடியவை. பக்தி இயக்கத்தின் தொடக்க காலத்தைச் சேர்ந்தவை. திருஞானசம்பந்தர் அருளிச் செய்தவற்றைத் திருக்கடைக்காப்பு என்றும் அப்பர் அடிகளின் பாடல்களைத் தேவாரம் என்றும் சுந்தரரின் பாடல்களைத் திருப்பாட்டு என்றும் கூறும் மரபு குறிப்பிடத்தக்கது. சைவ நெறியின் புண்ணியக்கண்களாகப் போற்றப்பெறும் முதல் இருவர் பாடல்களின் அருமைபெருமைகளை அவர்களைத் தொடர்ந்து வந்த சுந்தரர்.

''நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய
நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை''

என்று போற்றுவதால் புலனாகும். இவ்விருவரையும் ''**பெரு மக்கள்**'' என்றும் இவர்தம் பாடலின் பாங்கறிந்து வீழிமிழலை இறைவன் பரிசிலாகப் பொற்காசு வழங்கினன் என்றும் சேந்தனார் திருவிசைப்பாவில்,

''பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந்
தமிழ்மலர் சூடி
நீடலங் காரத் தெம்பெரு **மக்கள்** நெஞ்சினுள்
நிறைந்துநின் றானை
வேடலங் காரக் கோலத்தின் அமுதைத் திருவீழி
மிழலையூ ராளும்
கேடிலங் கீர்த்திக் கனககற் பகத்தைக் கெழுமுதற்
கெவ்விடத் தேனே''

எனப் பாடியிருத்தல் அறிந்தின்புறத்தக்கது

மெய்கண்ட சந்தானக்குரவரில் நாலாமவராகிய
உமாபதி சிவம்,

''ஞானசம் பந்தர்திரு நாவரையர் வன்தொண்டர்
பானிகரும் **தேவாரப் பூமாலை**''

என்று மூவர் பாடல்களையும் அமுதமாகிய பால்போல் இனிமையும், ஆற்றலும் அளிக்கும் பாமாலை என்று போற்றினார். மூவர் பாமாலைக்கும் '**தேவாரம்**' என்ற பெயரினையும் குறித்தனர். இரட்டைப்புலவர் தாம் பாடிய **ஏகாம்பர நாதர் உலாவில்,**

''மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த **திருப்பாட்டும்**''

என்று பாராட்டினர்.

தேவார ஆசிரியர்கள் மூவரும் அருளிச்செய்த பாசுரங்கள் சொல்லுக்குச் சொல் இனிமை பொதிந்து இறைவன் திருச் செவிக்குத் தித்திப்பாகத் திகழும் பாங்கினைத் தாயுமானவர்,

''தேவரெலாம் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே! மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலும் தமிழ்கேட்கும் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்று மோதான்!''

என்று போற்றிப் பரவுதல் நோக்கத்தக்கது. பிற்காலத்துத் தோன்றிய ஔவைப்பிராட்டியும் **''மூவர்தமிழ்''** என்றே தேவா ரத்தைப் போற்றுதல் காணலாம். தேவர்குறள், நான்மறையின் முடிவாகிய உபநிடதம், கோவைத் திருவாசகம், திருமந்திரம் என்பனவற்றுடன் மூவர் தமிழும் நிகராக வைத்து மதித்தற்குரிய சிறப்பினை ஔவையார் **'தேவர் குறளும்'** எனத் தொடங்கும் பாடலில் குறித்துள்ளார்

தொடக்க காலத்தில் அப்பர் பதிகங்களைத் தேவாரம் என்று குறித்தனர். காலப்போக்கில் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய அருளாளர் மூவரும் பாடியுள்ள பதிகங்களை **''தேவாரம் செய்த திருப்பாட்டு''** என்று சுட்டிய நிலையினை இரட்டைப் புலவரின் ஏகாம்பரநாதர் உலாக் குறிப்பினால் உணரலாம்.

### திருக்கோயிலில் தேவாரம்

தேவாரத்திருப்பதிகங்கள் அவை தோன்றிய காலம் முத லாகவே திருக்கோயில்களில் வழிபாட்டின் பொழுது பண்ணுடன் பாடப்பெற்று வருவன. எனின், கி.பி. 9 ஆம் நூற்றாண்டு முதல் கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கின்றன. மூன்றாம் நந்தி வர்மபல்லவனின் 17-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டினால் (கி.பி. 847) தேவாரத்திருப்பதிகங்கள் கோயில்களில் ஓதப் பெற்றமை அறியப்பெறுகிறது. முதலாம் ஆதித்த சோழன் (கி.பி. 873, 876), முதற் பராந்தக சோழன் (கி.பி. 910, கி.பி. 911, கி.பி. 944), உத்தம சோழன் (கி.பி. 984) ஆகியோர் ஆட்சிக்காலங்களில் பல்வேறு திருக்கோயில்களில் திருப்பதிகங் களைப் பாடுவோர்க்கு நிவந்தங்கள் வழங்கப்பெற்ற செய்தி யினைத் திருமுறைச் செல்வர் க. வெள்ளை வாரணனார் நிறுவி யுள்ளார். முதலாம் இராசராசன் (கி.பி. 985-1014) திருமுறைப்பணிக்குக் கூடுதலான நிவந்தங்களைக் கொடுத்தவன் என்பது அறியத்தக்கது. முதலாம் இராசேந்திரன் காலத்தை ஒட்டித் திருவாசகப் பாடல்களும் திருக்கோயில்களில் ஓதப்

பெற்றுவந்தன. முதல் ஒன்பது திருமுறைகளில் வரும் அருந் தொடர்களை மக்களுக்குப் பெயராகச் சூட்டித்தமிழ்ப் பெரு மக்கள் மகிழ்ந்தனர் என்பதும் கல்வெட்டுக்களினால் அறியப் பெறும் செய்தியாகும்.

## தேவாரம்-பொருள் விளக்கம்

தேவாரம் என்ற சொற்பொருள் குறித்து அறிஞர் களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. வாரம் என்ற சொல் மெய்யன்பினைக் குறிக்கும். சுந்தரர், ''வாரமாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர்'' என்று சுட்டுதலை இங்குக் குறிப்பிடுதல் தகும் [7.5.9].

சிலப்பதிகாரத்தில்,

''வாங்கிய வாரத்து யாழும் குழலும்
ஏங்கிய மிடறும் இசைவன கேட்ப'' (3.50-51)
''வார நிலத்தைக் கேடின்று வளர்த்தாங்கு''
(3-67)
''வாரம் இரண்டும் வரிசையிற் பாட'' (3-136)
''பாடிய வாரத்து ஈற்றினின் றிசைக்கும்''
(3-137)
''தோரிய மடந்தை வாரம் பாடலும்'' (6-19)
''வாரம் பாடும் தோரிய மடந்தையும்'' (14-155)

என்று வாரப்பாட்டின் வரன்முறை சுட்டப்பெற்றது. தெய்வம் சுட்டிய வரிப்பாட்டுக்களில் வாரம் என்பது ஒருவகை என்பதை அரும்பத உரையாசிரியர் குறித்துள்ளார். அன்றியும்

''வாரம் என்பது வகுக்குங் காலை
நடையினும் ஒலியினும் எழுத்தினும் நோக்கித்
தொடையமைந் தொழுகும் தொன்மைத் தென்ப''
(7.12-6 உரை)

என்று வரும் பழைய இசையிலக்கண நூற்பாவினை மேற்கோள் காட்டியுள்ளார். ஆதலின் இசையியக்கம் நான்கனுள் இடை நடை தழுவியதாய், ஒலியொழுங்கும் அதற்குத்தக வரிவடிவில் எழுத்தொழுங்கும் பெற்றதாய், இசைநலம் பொருந்தித் தொன்றுதொட்டுப் பாடப் பெற்றுவரும் இசை யாப்பினை வாரம் என்று கூறுதல் மரபாகும். வாரம் என்பதற்குத் தெய்வப் பாடல் என்று சிலப்பதிகாரத்தின் பழைய உரையாசிரியர் இருவரும் பொருள் கூறியுள்ளனர். (3.136)

அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் முதல் நடை, வாரம், கூடை, திரள் என்று இசையியக்கம் நால்வகைப் படும் என்று விளக்கியுள்ளனர். அரும்பதவுரையாசிரியர்,

''முதனடை மிகவும் தாழ்ந்த செலவினையுடைத்
தாதலானும்,
திரள் மிகவும் முடுகிய நடையினையுடைத் தாத லானும்,
இவை தவிர்த்து இடைப்பட்ட வாரப்பாடல் சொல்
லொழுக்கமும்
இசையொழுக்கமும் உடைத்தாதலானும், கூடைப்பாடல்
சொற்செறிவும் இசைச் செறிவும் உடைத்ததாலும்,
சிறப்பு நோக்கி
இவ்விரண்டினுள்ளும் வாரப்பாடலை அளவு நிரம்ப
நிறுத்தவல்லனாய்''

என்று வரையும் உரைப்பகுதி ஊன்றி நோக்கத்தக்கது. அடியார்க்கு நல்லாரும் இதனை வழிமொழிந்தனர். மந்த நடையிற் செல்லும் இசையியக்கம் முதனடை என்றும் மிகவும் முடுகிச் செல்லும் விரைநடை திரள் என்றும் அறிகிறோம். மந்தகதியும் துரிதகதியுமன்றி இவ்விரண்டற்கும் இடைப்பட்ட கதியுவடயதும் சொல்லொழுக்கம் இசையொழுக்கம் பொருந்தி யதும் ஆகிய இசைப்பாடல் வாரப்பாடல் என்று வழங்கப்பெற்ற உண்மை புலனாகிறது.

எனவே, வாரம் என்ற சொல் தமிழிசைப் பாடல்களின் ஒரு வகையினைக் குறிப்பது என்பது தெளிவு. 'தே' என்ற சொல் இனிமை, இறை என்ற பொருள் பயப்பது, ஆதலின், இறைவன் பெயரில் பாடப்பெற்ற இனிய இசைப்பாடல்களைத் 'தேவாரம்' என்று வழங்கினர் எனலாம்.

தொல்காப்பியர் சுட்டியுள்ள கலிப்பாக்களில், 'தேவர்ப் பராஅய ஒத்தாழிசைக்கலி' என்பதும் ஒன்றாகும். இவ்வகைப் பாவின் சுரிதக உறுப்பினை மட்டுமே 'வாரம்' என்று குறித்தனர். பிறவகைக் கலிப்பாக்களின் சுரிதகத்தினை இச்சொல்லினால் சுட்டமையும் சிந்தித்தற்குரியது. இறைவனை முன்னிலைப் படுத்திப் பாடும் ஒத்தாழிசைக்கலியின் அடக்கியல் உறுப்பினை (சுரிதக உறுப்பினை) முற்காலத்தில் சுட்டிய 'வாரம்' என்ற சொல், பொருள் விரிவு பெற்றுப் பிற்காலத்தில் பதிகப் பாடல் களையும் சுட்டியது என்று கொள்ளுதல் கூடும்.

தொல்காப்பியர்,

''வல்லோன் புணரா வாரம் போன்றே'

(பொருள் நூ. 653)

என்று குறித்தல் நோக்கத்தக்கது. இயலிசைத் துறையில் புலமை முற்றியவனை 'வல்லோன்' (—expert, specialist) என்றும், அவனால் மட்டுமே நிறம்பட இசைத்துப் பாடுதற் குரியது வாரப்பாடல் என்றும், வல்லமை இல்லாதவன் பாடின் அது சிதைவுபடும் என்றும் தொல்காப்பியர் கருதினர் என்பது தெளிவு.

பழந்தமிழ் மரபின்படி வாரம் என்ற சொல் இசையியக்கம் நான்கனுள் ஒன்று என்னும் பொதுப் பொருளிலும் **தெய்வப் பாடல்** என்ற சிறப்புப் பொருளிலும் வழங்கியது என்பர் திரு முறைச்செல்வர் க. வெள்ளைவாரணனார்.[3] வரி என்ற வேர்ச் சொல்லினின்றும் வாரம் என்ற சொல் தோன்றியது என நினைத்தற்கு இடம் உண்டு. மக்கள் யாப்பாகிய வரிப்பாடலின் பல்வகை வடிவங்களாகத் தேவாரப் பாடல்களைக் கருதலாம். திருநாவுக்கரசர் தம் பாடல்களை வரி, முரி என்று சுட்டியிருத்தல் நோக்கத்தக்கது.

இறைவனின் திருவுருவினைத் **தேவார தேவர்** என்றும், வழிபாடு புரிதற்குரிய பூசையிடத்தினைத் **தேவாரச்சுற்றுக் கல்லூரி** என்றும், திருப்பதிகம் விண்ணப்பிக்கும் இசைஞானம் பெற்றவரைத் தேவாரநாயகம் என்றும் வழிபாட்டினைத் 'தேவாரம்' என்றும் முதலாம் இராசராசன், அவன் மகன் முதலாம் இராசேந்திரன் ஆகியோரின் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெறுதலைக் கல்வெட்டாராய்ச்சி அறிஞர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் ஆராய்ந்து கூறியுள்ளார்.[4] 'வாரம்' என்ற சொல் வழிபாட்டிற்கு அடிப்படையாக ஈசன்பால் கொண்ட அன்பினைப் புலப்படுத்துதலின் பின்னர் அச்சொல் வழி பாட்டினைக் குறித்துள்ளது எனலாம், அன்புக்குரிய இறைவனைத் தேவார தேவர் என்று குறித்ததும் பொருத்தமே. பத்திப் பெருக்கே பாடலாக வெளிப்படுதலின் வாரம் என்ற சொல் துதிப்பாடலையும் குறித்தது.

---

3. பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பாகம், ப. 558.

4. i. **செந்தமிழ்**, தொகுதி 45. ப. 121-128.
   ii. **இலக்கியமும் கல்வெட்டுகளும்**, ப. 63-72.
   iii. The Religion and Philosophy of Tevaram, Book I, P. 24-35.

இரண்டாம் இராசராசன் காலத்துக் கல்வெட்டுக்களில், **''திருமுறைத் தேவாரச் செல்வன்மடம்'', ''திருமுறைத் தேவாரச் செல்வன் குகை''** எனவரும் வழக்காறுகளை எடுத்துக்காட்டித் தேவாரம் என்ற சொல் மூவரின் திருமுறைப் பதிகங்களைச் சுட்டும் என்பதை அறிஞர்கள் நிறுவியுள்ளனர். கி.பி. 13-ஆம் நூற்றாண்டினராகிய சாரங்கதேவர் தமிழ்ப்பண்கள் சில வற்றைத் **'தேவார வர்த்தினி'** என்று சங்கீத ரத்னாகரம் என்ற தம் இசை நாடக வடமொழி நூலில் குறித்துள்ளமையால், தேவார இசை வடமொழிவாணர்களையும் கவர்ந்துள்ளது என்பது புலனாகும்.[5]

தேவார ஆசிரியர்கள் காட்டிய நெறி **பதிகப்பெருவழி** என்று நம்பியாண்டார்நம்பி முதலிய பெரியோர்களால் சுட்டப் பெறுவது. அன்றாட இறைவழிபாட்டில் திருப்பதிங்களை விண்ணப்பம் செய்யும் ஓதுவார்களுக்கும், பக்கவாத்தியம் வாசிப் பவர்க்கும் பொருளமைதி தோன்றத் தேவுற்று ஆடல் புரியும் விறலியர்க்கும் முதலாம் இராசராசன் காலம் முதல் இறையிலி நிலங்கள் விடப்பெற்றிருந்த செய்திகளும் கல்வெட்டுக்களினால் புலனாகின்றன. பதிகங்களைப் பாடிய அருளாளர்களின் பெயர் களையும் அவர்தம் பாடல்களில் இடம்பெறும் அரிய தொடர்ப் பெயர்களையும் மக்கட்கு இட்டு வழங்கும் மரபும் அறியப்படு கிறது. இதனால் தமிழ்ப் பெருமக்கள் தேவாரத் திருமுறைகளில் கொண்டிருந்த ஈடுபாடும் பேரன்பும் புலனாதல் தெளிவு.

தேவாரப் பதிகங்களைப் பண்முறையாகத் தொகுத்து வழங்குதல் பழைய மரபாக விளங்குகிறது. ''கோயில் திருவேட்களம்'' முதலாகத் **''திருப்பதிக் கோவை''**யில் குறித்த முறையில் தல அடிப்படையில் பதிகங்களை அடைவு செய்து தொகுத்த முறையும்காணப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட தலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனை ஏத்துவதற்குரிய பதிகங்கள் அனைத்தையும் ஒருங்கோதுவதற்கு இத்தகைய தலமுறைத் தொகுப்பு பயன் தரும். அடங்கன்முறை என்ற பொருளாலும் தேவாரத் திருமுறைகள் வழங்கப்படுதல் சுட்டத்தக்கது. **அகத்தியர் தேவாரத்திரட்டு** என்ற பெயரிலும் ஒரு சில பதிகங்களுக்கு முதன்மை கொடுக்கப்பெற்று அன்றாட வழி பாட்டிற்குரியனவாகப் பயிலப்பெற்று வருகின்றன.

---

5. i. யாழ் நூல், ப. 208, 268.

ii. பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பகுதி, ப. 591—2.

சம்பந்தர் தேவாரத்தில் 10 பதிகங்கள், அப்பர் தேவாரத்தில் 8 பதிகங்கள், சுந்தரர் தேவாரத்தில் 7 பதிகங்கள் ஆக 25 பதிகங்கள் இத்திரட்டில் தொகுக்கப் பெற்றுள்ளன. மூவர் தேவாரத்தையும் முழுமையாக நாள்தோறும் ஓத இயலாமை கருதி, சிவாலய முனிவர் என்னும் அன்பரின் நித்திய பாராயணத்தை முன்னிட்டுப் பிற்காலத்தவராக எண்ணப் பெறும் அகத்திய முனிவர் ஒருவர் இத்திரட்டினைத் தொகுத்துதவினர் என்பர். குருவுரு, திருவெண்ணீறு, கோயில், அரன்உரு, திருவடிச்சிறப்பு, சிவார்ச்சனை, தொண்டு ஆகிய எட்டுப் பொருண்மையினையும் தெளிய உணர்த்தும் வகையில் இப்பதிகங்கள் திரட்டப்பெற்றுள்ளன. இதனை நாள்தோறும் ஓதி வருபவர் மூவர் தேவாரம் முழுவதையும் ஓதும் பயனைப் பெறுவர் என்பது நம்பிக்கை.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் விளங்கிய கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறிவுநெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைந்தோர் தன்மை என்ற பத்துத் தலைப்புக்களில் பத்து அதிகாரங்களாகத் தொகுத்துள்ள தேவாரத் திருமுறைப் பாடல்கள் **தேவார அருண்முறைத்திரட்டு** என்று வழங்கி வருகிறது. இப்பத்துப் பொருண்மையில் இவர் பாடியுள்ள **திருவருட் பயன்** என்ற மெய்கண்ட சாத்திர நூலும் அமைந்திருத்தல் சுட்டத்தக்கது. எனவே திருமுறையின் சாரம் சித்தாந்த சாத்திரமாக உருப்பெற்ற உண்மை புலனாகும்.

**மூவரின் அவதாரம்**

பல்லவர் காலத்தில் தமிழகமெங்கும் தழைத்தோங்கிப் பரவிய சமணமும், சாக்கியமும் அருமறை வழக்கத்தையும், திருநீற்று நெறியையும் அறவே மறைத்த அவலத்தைக் காணப் பெறாத அந்தணப் பெரியார் சிவபாதவிருதயரும், அவர்தம் அருமைத் துணைவியார் பகவதியாரும் அவ்விரு புறச்சமயங்களை வெல்லும் ஆற்றலும், வீரஅறிவும் மிக்க மைந்தனைப் பெறும் பொருட்டுத் திருத்தோணியப்பரிடம் முறையிட்டுத் தவம் புரிந்தார். அத்தவத்தின் பயனாக இறைவனுக்குரிய அணியுடை ஆதிரை நாளில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தோன்றினார். ஏனையோர்களின் பிறப்பினின்றும் அவர் தோற்றம் தனித்துச் சிறந்து விளங்கியதால், அதனைத் **திருவவதாரம்** என்றே சேக்கிழார் பெருமான் குறித்துள்ளார்:

''திசையனைத்தின் பெருமையெலாம் தென்திசையே
வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின்
துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும்
நிலைபெருக''

''அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம்
பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல்
லூழிதொறும்
தவம்பெருக்கும் சண்பையிலே தாவில்சரா
சரங்களெல்லாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் **திருவவதாரம்
செய்தார்**''

எனவரும் பாடல்கள் எண்ணத்தக்கவை.

சம்பந்தர் தோன்றிய சீகாழிப் பதியேயன்றித் தென் திசையாம் சைவத் தமிழுலகும், மேலுலகேயன்றி நிலவுலகும் இவர் அவதாரத்தால் பொலிவும், பெருமையும் பெற்றன. புறச்சமயங்கள் பொன்றி, இயங்குவன-நிற்பன முதலிய எவ்வகை உயிர்களும் சிவச்சார்பு பெறுதலை இவர் அவதாரம் குறிக்கோளாகக் கொண்டது. இவர் நின்றசீர் நெடுமாறன் சமணநெறியினின்றும் சைவம் சார்தற்கு உறுதுணை புரிந்தமையால் இப்பாண்டியன் ஆட்சி செய்த கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் விளங்கியவர் ஆவர்,[6] மரபுவழிச் செய்தி இவர் 16 ஆண்டில் முத்தி பெற்றதாகக் கூறும். இவர் மூன்றாண்டில் திருவருளினால் ஞானப்பால் பருகிக் கவிபாடிய வரலாற்றினைச் சேக்கிழார் விரித்துப் பாடியுள்ளார். இவ்வரலாற்றிற்கு இவர் தம் பதிகங்களிலும் அகச்சான்றுகள் உள்ளன. இந்நூற்றாண்டின்

---

6. i. Origin and Early History of Saivism in South India, p. 285.

ii. பன்னிரு திருமுறைவரலாறு, முதற்பாகம், ப. 374.

பிற்பகுதியிலும் மூன்று வயதில் மூன்று மொழிகளில் கவிபுனையும் அற்புதச் சிறுவன் தென்கொரியாவில் தோன்றிய உண்மையினை, ''தென்கொரியாவில் ஒரு திருஞானசம்பந்தர்'' என்ற கட்டுரை தெளிவுறுத்துகிறது.[7] எனவே சம்பந்தரை, 'Child prodigy' எனக் கொள்ளுதல் வேண்டும்.

பிள்ளைப் பிராயத்திலேயே சின்னஞ் சிறுவர்கள் பேரறிவுத் திறம் படைத்து உலக மாந்தரை வியப்பிற்குள்ளாக்கிய நிகழ்ச்சி தமிழகத்தில் மட்டுமின்றி உலக நாடுகளின் பல பாகங்களிலும் காண முடிகிறது. மனிதத்திறன், உள்ளுணர்வுகள் ஆகியவை விழுமிய முறையில் விரவி மிகவும் மேம்பட்ட நிலையில் செயல் புரிதலை மேதைமை (genius) என்று விளக்குவர். ஒன்றேகால் வயது நிரம்பிய சின்னஞ்சிறுவன் கணிதத் துறையில் அரிய சாதனைகள் புரிந்தமையும், இரண்டு வயது நிரம்பிய இளஞ்சிறுமி எட்டு மொழிகளில் நாட்குறிப்பு எழுதியமையும், இவளே நான்காம் அகவையில் செய்தித்தாள்களுக்குக் கட்டுரைகள் எழுதியனுப்பியமையும், கலைத்துறைகளிலும் இததகைய இளம் மேதைகள் பலர் இருத்தலையும் குறித்துத் தத்துவ ஞானி C.E.M. ஜோகு என்பார் விரிவாக ஆராய்ந்துள்ளார். திருவள்ளுவர் ஒரு பிறவியில் கற்ற கல்வி ஏழு பிறவிக்கும் தொடர்ந்துவரும் என்று கூறுவதால், விட்ட குறை தொட்ட குறை என்ற பழமொழியின்படி முற்பிறப்பில் முற்றிய கல்வி இப்பிறப்பின் தொடக்கத்திலேயே பயன் தருதற்கு ஏதுவாயிற்று எனலாம். இத்தகைய இளம் மேதைகளைச் சிறுமுதுக்குறைவி என்று இளங்கோவடிகளும் சிறிய பெருந்தகையார் என்று சேக்கிழாரும் போற்றியுள்ளனர்.

சம்பந்தரின் சமகாலத்தவராகத் திகழும் அப்பர்பெருமானின் தோற்றத்தைக் குறிப்பிடும்பொழுதும் அவதாரம் என்றே சேக்கிழார் சுட்டியுள்ளார். வேளாளர் மரபிற்குரிய புகழனார் மாதினியார் ஆகியோர் ஆற்றிய இல்லறத்தின் விளைவாகத் திலகவதியார் தோன்றிய சில ஆண்டுகள் கழித்து மருணீக்கியார் ஆகிய வாகீசர் தோன்றினர் என்ற செய்தியை,

> திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்றதற்பின்
> அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர்
> நெறிவாழ

---

7, ஆனந்தவிகடன், 14,8.1966, ப. 113-4.

8. The Hindu, Sunday Issue, **''The world that was''** August, 20, 1989,

> உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின்
> மலருமரு ணீக்கியார் **வந்தவதா ரஞ்செய்தார்''**
> (5 : 21 ; 18)

என வரும் பாடல் தெளிவுறுத்துகிறது. இவர் தோன்றிய திருவாமூரே அன்றித் தென் தமிழ்நாடும் இவர் அவதாரத்தால் சிறப்புற்றது. இவர் தோற்றம் புறச்சமய இருளைப் போக்கிச் சைவப்பேரொளியைப் பரப்புதலைக் குறிக்கோளாகக் கொண்டது. இவர் முதலாம் மகேந்திரவர்மனைச் சமய நெறியினின்றும் சைவத்திற்கு மாற்றியவர் ஆதலின், இவ்வேந்தன் ஆட்சி செய்த கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரையும் வாழ்ந்தனர். மரபுவழிச் செய்தியின்படி இவர் 81 ஆண்டுகள் இருந்தவர் ஆவர்.

ஆதிசைவர் மரபிற்குரிய சடையனார், இசைஞானியார் ஆகிய இருவரும் ஆற்றிய மனையறத்தின் மாண்பாக நம்பியாரூரர் தோன்றிய நிகழ்ச்சியையும் சேக்கிழார் **திருவதாரம்** என்றே சிறப்பித்துப் பாடியுள்ளார் :

> மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும்
> வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடையனார்க்கு
> ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானியார்பால்
> தீதகன் றுலகம் உய்யத் **திருஅவ தாரம்** செய்தார்''
> (1.5.3.)

எனவரும் பாடல் நோக்கத்தக்கது,

இவர் தோன்றிய திருநாவலூரே அன்றி இவர் அவதாரத்தால் தென்னகம் முழுதுமே சிறப்புற்றது. இவர் தோற்றம் வினைமாசாகிய தீது நீங்கி உலகம் உய்திப் பெறுதலைக் குறிக் கோளாய்க் கொண்டது. இவர் காடவர்கோன் கழற்சிங்கனாகிய இராசசிம்ம பல்லவனைத் திருத்தொண்டத் தொகையில் குறிப்பதால் இவ்வேந்தன் ஆட்சி செய்த கி.பி. 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் கி.பி. 8 ஆம் நூற்றாண்டின்

---

9. பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பாகம், ப, 368.

முற்பகுதியிலும் இருந்தவர் எனலாம்.[10] மரபுவழி செய்தியின்படி 18 ஆண்டுகள் இவர் வாழ்ந்தவர் என்பர்.

எனவே தேவார ஆசிரியர்கள் மூவரின் தோற்றமும் சைவ நன்மக்களால் தனிச்சிறப்புக்குரிய திருவருள் நிகழ்ச்சியாகவே எண்ணப்பெற்றமை தெளிவாகும். வைணவ நெறியில் சுட்டப்பெறும் திருமாலின் அவதாரக் கொள்கையுடன் சைவ நெறி சுட்டும் நாயன்மார்களின் அவதாரக்குறிக்கோள் ஒருபுடை ஒப்புமை வாய்ந்தது எனலாம். இறைவனின் திருவைந்தெழுத்தைப் போலவே இவர்கள் திருப்பெயரையும் மந்திரமாக ஒலிக்கும் மரபு அடியார்களிடம் காணப்பெற்றிருத்தல் சுட்டத்தக்கது. சான்றாக ''ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரமும்'' என்ற சேக்கிழார் வாக்கினைச் சுட்டலாம் (28.721). இவர்களையே வழிபட்டு முத்தி பெற்ற நாயன்மார்கள் வரலாற்றையும் பெரிய புராணம் சுட்டுகிறது. முருகநாயனார், மங்கையர்க்கரசியார், நின்றசீர் நெடுமாறன், குலச்சிறையார் முதலியோர் திருஞானசம்பந்தரைக் குருவாகப் போற்றியும், பெருமிழலைக் குறும்பர் என்னும் யோகி சுந்தரரைச் சிந்தித்தும் உய்திபெற்ற பாங்கினைச் சேக்கிழார் உருக்கமாகப் பாடியுள்ளார்.

திருவருள் வலத்தினால் மூவர் முதலிகளும் முத்தொழில் புரியும் ஆற்றலும் பெற்றிருந்தனர். மயிலாப்பூரில் எலும்பினைப் பூம்பாவையாகப் படைத்தும், கொல்லிமழவன் மகளுக்குற்ற முயலகன் நோயையும் திருச்செங்குன்றூரில் அடியார்களை வருத்திய சுரநோயையும் பாண்டியனுக்குற்ற வெப்புநோயையும் போக்கியும், திருவீழிமிழலையில் படிக்காசு (அப்பருடன்) பெற்றுப் பசி நீக்கி மக்களைக் காத்தும் வாதில் தோற்றச்சமணர் தாமே கழுவேறி அழியவும் சம்பந்தர் ஆற்றிய அருஞ்செயல்கள் குறிப்பிடத்தக்கவை. இவ்வாறே அப்பர், சுந்தரர் ஆகிய இருவரும் பற்பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளனர், அவர்தம் கரணங்கள் யாவும் சில கரணங்களாகிய விழுமிய அருள்நிலையில் மன்பதையின்பால் கொண்ட அருள் காரணமாக இவ்வருஞ்செயல்கள் நிகழ்ந்தன என்பது திருக்களிற்றுப்படியார் என்ற மெய்கண்ட சாத்திரத்தினாலும் தெளிவாகிறது.

மூவர் தேவாரத்தின் முதன்மையினைக் கருத்திற் கொண்டு முழுமையாகச் செப்பேட்டில் பொறித்து வைத்த சிறப்புக்

---

10. பன்னிரு திருமுறை வரலாறு, முதற்பாகம், ப. 382.

குரியவன் நரலோக வீரன் காலிங்கராயன் மணவிற் கூத்தன் என்பவன். இவன் முதற் குலோத்துங்கன் ஆட்சியிலும் (கி.பி. 1100-20), அவன் புதல்வன் விக்கிரசோழனின் ஆட்சியிலும் (கி.பி. 1118-1125) படைத் தலைவனாகவும் அரசியல் அதிகாரி யாகவும் விளங்கியவன். தில்லை, திருவதிகை ஆகிய தலங் களுக்கு இவன் ஆற்றிய பணிகளைப் போற்றிப் பல பாடல்கள் கல்வெட்டில் பொறிக்கப் பெற்றுள்ளன, தில்லைக்கோயில்,

''முத்திறத்தார் ஈசன் முதல் திறத்தைப் பாடியவர்
ஒத்தமைத்த செப்பேட்டின் உள்ளெழுதி-இத்தலத்தின்
எல்லைக் கிரிவாய் இசை எழுதி னான்கூத்தன்
தில்லைச்சிற் றம்பலத்தே சென்று''

(S.I.I. Vol. IV, No. 225, H. 33-4.)

என்று பொறிக்கப் பெற்றுள்ள வெண்பாவினால், ஓலைகளி லிருந்த மூவர் தேவாரப் பாடல்களைச் செப்பேட்டில் மணவிற் கூத்தன் பொறிக்கச் செய்த ஒப்பரிய திருமுறைப் பணியினை உணர முடிகிறது. இப்பாடலில் முத்திறத்தார் எனச் சுட்டப் பெற்றவர் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆவர்.

**மாணிக்கவாசகரின் அவதாரம்**

தேவார ஆசிரியர் மூவரைப் போலவே திருவாசகம், திருக் கோவையார் ஆகிய எட்டாம் திருமுறையினை அருளிச் செய் துள்ள மாணிக்கவாசகர் மதித்துப் போற்றப் பெறுகிறார். இவர் பாண்டிய நாட்டில் திருவாதவூரில் அமாத்தியர் குடியில் பிறந்தவர். இவர் பெற்றோர் சம்புபாதாசிருதயர், சிவஞானவதி என்று திருப்பெருந்துறைத் தலபுராணத்தில் சொல்லப் பெற்றது. இவர் காலத்துத் தமிழகத்தில் பௌத்த நெறி எங்கும் பரவி யிருந்தது என்று அறிகிறோம். இப்புறநெறியாகிய இருளைப் போக்கித் தமிழகம் எங்கும் சிவாகமத் தெளிவாகிய சித்தாந்தச் செந்நெறி பரவும் பொருட்டு வாதவூரர் என்னும் சிவஞாயிறு அவதாரம் செய்தனர். இப்பெற்றியை,

''ஆயவளம் பதியதனின் அமாத்தியரில் அருமறையின்
தூயசிவா கமநெறியின் துறைவிளங்க வஞ்சனையாண்
மாயனிடு புத்தவிருள் உடைந்தோட வந்தொருவர்
சேயஇளம் பருதியெனச் சிவனருளால்
அவதரித்தார்'' [58.4]

என்று திருவிளையாடற்புராணத்தில் பரஞ்சோதி முனிவர் பகர்ந்துள்ளார். கல்வி கேள்விகளிற் சிறந்து பாண்டிய

வேந்தனின் தலைமை அமைச்சராக வாதவூரர் விளங்கினார். மன்னனுக்காகக் குதிரை வாங்கச் சென்று திருப்பெருந்துறையில் இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெற்றனர்.

இவர் தோன்றிய காலம் குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. மூவருக்கும் முற்பட்டவராக இருந்தால் சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகையில் இவர் சுட்டப் பெற்றிருப்பார். இறைவனே திருக்கரத்தால் எழுதிக் கொண்டதாகக் கூறப்பெறும் சிறப்பினை உடைய திருவாசகத்தை அருளிச் செய்த மாணிக்கவாசகரைத் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் சுட்டினாரிலர். கண்ணப்பர், சண்டி முதலியோரைக் குறிப்பிடும் இவர்கள் தமக்கு முற்பட்டவராக இருந்திருப்பின் மாணிக்கவாசகரைச் சுட்டி ஒரு சொல்லேனும் பாடியிருப்பர். எனவே, மூவராலும் சுட்டப்பெறாத மாணிக்கவாசகர் தேவார ஆசிரியர் காலத்திற்குப் பிற்பட்டவர் என்பது ஆராய்ச்சியாளரில் ஒருசாரார் துணிபு. இங்ஙனம் இவர்கள் முடிவு செய்தற்கு மற்றுமொரு சான்றாக **வரகுணன்** என்னும் பாண்டிய வேந்தனைப் பற்றி மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையில் ஈரிரண்டிடங்களில் சுட்டியிருத்தல் சொல்லப் பெறுகிறது. வரகுணன் என்ற பெயரில் கல்வெட்டுக்களில் இரு மன்னர்கள் குறிக்கப் பெறுகின்றனர். இவருள் முதலாம் வரகுணன் கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவன். இரண்டாம் வரகுணன் கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் அரசு புரிந்தவன். முதலாம் வரகுணன் காலத்தைச் சேர்ந்தவர் மாணிக்கவாசகர் என்பர் திருமுறைச்செல்வர் க. வெள்ளைவாரணர். இரண்டாம் வரகுணன் காலத்தவர் என்பர் தமிழ் வரலாறு எழுதிய தஞ்சைச் சீனிவாசப்பிள்ளை.

எனின், வரகுணனைப் பற்றிய கல்வெட்டுக்களில் அப்பெயருடைய வேந்தர் இருவரும் சிவபத்தி உடையராகத் தில்லைத் திருக்கோயிலுக்கு ஆற்றிய அரும்பணி ஒன்றும் குறிக்கப்படவில்லை என்பர். திருச்சிற்றம்பலக் கோவையாரில்,

''வரகுணனாம்
தென்னவன் ஏத்து சிற்றம்பலத்தான்'' (309)
''சிற்றம்பலம் புகழும்,
மயலோங் கிருங்களி யானை வரகுணன்'' (327)

என்று நடராசப் பெருமானிடம் அளவற்ற அன்பு பூண்டவனாக மாணிக்கவாசகர் வரகுணனைக் குறித்துள்ளார். கி.பி. 8, 9 ஆம்

நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் இதற்கு ஆதாரம் இல்லை. ஆதலின், கல்வெட்டுக் காலத்திற்கு முற்பட்ட வரகுணன் ஒருவனை மாணிக்கவாசகர் குறித்துள்ளார் என்று கூறும் ஆராய்ச்சியாளர், அவரை மூவர்க்கும் முற்பட்டவர் என்று நிலைநாட்டுதற்கு முற்பட்டனர். இவர்கள் சேத்திரக்கோவை யாக அமைந்துள்ள கீர்த்தித்திருவகவலில் மதுரையில் நடந்த ஈசனின் திருவிளையாடல்கள் பலவற்றைச் சுட்டியுள்ள மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தர்க்குப் பிற்பட்டவராக வாழ்ந் திருப்பின், சம்பந்தர் சமண் மாசறுத்துச் சைவத்தை நிலை நாட்டிய அரிய நிகழ்ச்சியைக் குறித்திருப்பார் என்று வாதிடுவர். எனின், உடன்காலத்தில் வாழ்ந்தவராகிய அப்பரடிகளைத் திருஞானசம்பந்தர் ஒரு பதிகத்திலும் சுட்டினாரிலர். எனவே, அவர் காலத்தில் அப்பரடிகள் இருந்திலர் என்று முடிவு செய்தல் இயலாது. [அப்பர் சம்பத்தரை இரண்டு பாடல்களில் குறித் துள்ளார்.] சுந்தரர் மதுரையைப் பற்றிய பதிகம் பாடவில்லை என்பதால் அவர் காலத்தில் மதுரை மறைந்துவிட்டது என்று முடிவு செய்தால் ஒவ்வாது. எனவே, இன்மைச் சான்றுகளை [Negative Evidences] மட்டும் முன்னிறுத்தி ஒரு முடிவுக்கு வருதல் ஆய்வுநெறி அன்று. மாணிக்கவாசகரும், கண்ணப்பர் சண்டி ஆகிய பழவடியார் இருவரை மட்டுமே திருவாசகத்தில் குறித்துள்ளார் என்பதும் நோக்கத்தக்கது.

திருத்தாண்டகத்தில் அப்பரடிகள் குறித்துள்ள நரியைப் பரியாக்கிய செய்தி மாணிக்கவாசகர் வரலாற்றுடன் தொடர் புடையது என்பர். அங்ஙனம் தொடர்புறுத்தாமல் அரிய அற்பு தங்களைத் திருவருளால் ஆற்ற முடியும் என்ற குறிப்பினைச் சுட்டும் தொன்மங்களாக அத்தகைய கதைக் குறிப்புக்களை மறுத்துரைப்போர் கூறுவர்.

எனவே, தெளிவாகத் தேவார ஆசிரியர்கள் மாணிக்க வாசகரைச் சுட்டினாரிலர். மாணிக்கவாசகரும் அவர்ககளைச் சுட்டிலர். எனின், திருமுறைகளைத் தொகுத்தவரும், சுந்தரரின் திருத்தொண்டத் தொகையினை அடியொற்றித் திருத்தொண்டர் திருவந்தாதி பாடியவரும் ஆகிய நம்பி யாண்டார்நம்பி இந்நூலில் மாணிக்கவாசகரைக் குறித்திலர். இருவரையும் பின்பற்றித் திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழாரும் நாயன்மார் வரிசையில் அவரைக் குறித்திலர். பின்வந்த இருவரும் சுட்டமைக்குக் காரணம் முதல் நூல் செய்தவர் ஆகிய சுந்தரர் தொகுத்துக் கூறிய அடியார் வரிசையில் மாணிக்கவாசகரைச் சுட்டாமையே ஆகும். எனின்,

நம்பியாண்டார் நம்பி பாடிய **கோயில் பண்ணியர் திருவிருத் தத்தில்,**

''வருவா சகத்தினில் முற்றுணர்ந் தோனை
வண்தில்லை மன்னைத்
**திருவாத வூர்ச் சிவபாத்தியன்** செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் **தருதிருக் கோவை** கண்டேயும் மற்றப்
பொருளைத்
தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச் சிறப்பிப்பரே''
(58)

எனவரும் பாடலில் மாணிக்கவாசகரின் பிறப்பிடம், பெயர் முதலிய குறிப்புக்களைத் தந்துள்ளார், பாண்டிய நாட்டில் மதுரைக்கு மருங்கில் உள்ள திருவாதவூரில் தோன்றியவர். அவ்வூர் இறைவனுக்கு வாதவூரன் என்பது பெயர். அப் பெயரையே தமக்குப் பெயராகக் கொண்டவர். சிவனடியை முடியில் வைத்து அன்பு செய்தமையால் '**சிவபாத்தியன்**' என்ற சிறப்புப் பெயர் பெற்றவர். இறைவன் குருந்தமரத்தின் நிழலில் குருவடிவாக வந்து ஆண்டுகொண்டு வழங்கிய தீட்சைத் திருப் பெயர் 'மணிக்கவாசகர்'. இவர் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையின் சிறப்பினை இப்பாடலில் நம்பியாண்டார் நம்பி போற்றியுள்ளார். இவர் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண் டாதலின், மாணிக்கவாசகர் இவர்க்கு முற்பட்டவர் என்பது யாவர்க்கும் ஒத்த கருத்தே.

யாப்பியல் வரலாற்றினை நோக்குமிடத்துத் தொல்காப்பி யர் நாற்சீர் கொண்ட அளவடியினையே யாப்புக்குச் சிறப்புரிமை வாய்ந்ததாக விளக்கியுள்ளார். எனின், ஐஞ்சீர், அறுசீர், எழுசீர் பயின்று அருகிய நிலையில் வரும் பெற்றியையும் செய்யுளியலில் சுட்டியுள்ளார். எழுசீர்க்கு மேற்பட்ட சீர்களைக் கொண்ட அடிகளைச் சுட்டிலர். சங்க இலக்கியங்களில் தொல்காப்பியர் கூறிய வகையில் அடிவகை பயின்று வந்துள்ளது. எழுசீர் பயின்ற அடிகள் கலித்தொகை, பரிபாடல் ஆகிய பனுவல்களில் அருகிக் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் கந்துகவரியில் எழுசீர் பயின்ற கட்டளை அடிகள் வந்துள்ளன. எண்சீர் அடிகள் இடம்பெறும் யாப்பு வகைகளைத் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் பாடல்களில் நிரம்பக் காணலாம். **எனின் பன்னிருசீர் பயின்றுவரும் பாடல்கள் திருவாசகத்தில் திருப்படையாட்சி என்ற பதிகத்தில் பார்க்கிறோம்.** ஆதலின்

யாப்பியல் வரலாற்றின்வழி நின்று நோக்கின், தேவார ஆசிரியர்க்குப் பிற்பட்டவராகவே திருவாதவூரடிகள் தோன்றுகிறார்.[11] எனவே அவர்கட்குப் பின்னர் கி.பி. 8ஆம் நூற்றாண்டில் மாணிக்கவாசகர் வாழ்ந்தவர் என்பார் கருத்தினைத் தற்காலிகமாக ஏற்றுக் கொள்ளலாம். மேல்வரும் ஆராய்ச்சிகளினால் மாணிக்கவாசகர் காலம் தெளிவு செய்யப் பெறுதல் வேண்டும்.

பெரியபுராணத்தில் மாணிக்கவாசகர் சரிதம் சொல்லப் பெறாத குறையை நிறைவு செய்யும் வகையில் கி.பி, 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும்பற்றப்புலியூரார் பாடிய திருவிளையாடற் புராணத்திலும் கி.பி. 17-ஆம் நூற்றாண்டினராக எண்ணப்பெறும் பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணத்திலும் அவர் வரலாறு விரிவாகப் பாடப் பெற்றுள்ளது. கடவுள் மாமுனிவர் பாடிய திருவாதவூரர் புராணம், திருப்பெருந்துறைப்புராணம் திருவுத்தரகோச மங்கைப்புராணம் முதலியனவும் திருவாதவூரர் வரலாற்றினைக் கற்பனைச் சுவையுடன் புனைந்துரைத்தன. காலம் துணியப் பெறாத கல்லாடம் என்ற இலக்கியத்திலும் மாணிக்கவாசகர் வரலாற்றுக் குறிப்புக்கள் நிரம்ப உள்ளன.

தேவார ஆசிரியர் மூவர்க்கு ஒப்பாக மாணிக்க வாசகரைச் சைவ நன்மக்கள் போற்றி வந்துள்ளனர். இவரைச் சேர்த்துச் சமயக் குரவர் நால்வர் என்ற வழக்கும் காணப்படுகிறது. திருவாசகத்திற்கு உருகாதவர் ஒரு வாசகத்திற்கும் உருகார் என்பது பழமொழி. ஆங்கிலப் பாதிரியாராகிய ஜி. யூ. போப்பையும் திருவாசகம் ஆட்கொண்டது. அவர் திருவாசகத்தின் அருமை கருதி ஆங்கிலத்தில் கவிதை வடிவத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

மாணிக்கவாசகரின் பொருட்டுக் குதிரைச் சேவகனாக வந்து இறைவன் நிகழ்த்திய அற்புதத்தையும் பிறவி நோய் கெடுமாறு திருவாசகத்தை அருளிச் செய்த சிறப்பினையும் திருக்களிற்றுப் படியார் செப்புகிறது. அப்பாடல் வருமாறு :

> ''பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
> தூயதிரு வாய்மலரால் சொற்செய்து-மாயக்

---

11. தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், முதற்பாகம் இரண்டாம் பகுதி, ப. 258-9.

கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளும் தே'' (73)

எனவே, திருக்கடவூர் உய்யவந்த தேவனார் வாழ்ந்த கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் ஒப்ப மதித்துப் போற்றும் மரபு நிலைபெற்றமை புலனாகும், இலக்கணக் கொத்துடையார், **''மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம்''** என்று எழுதியிருத்தலும் இங்கு எண்ணத்தகும்:[12] பசு கரணங்கள் தூய சிவ கரணங்கள் ஆகிய நிலையில் ஞானஒளி உருவம் பெற்றுத் திகழ்ந்தனராதலின் மாணிக்கவாசகரை இங்ஙனம் போற்றினர் என்பது புலனாகும்.

## மூல இலக்கியம்

திருமுறைகள் தமிழில் எழுந்த **மூல இலக்கியங்கள்** (Original Literature) இவை மொழிபெயர்ப்பு அல்ல. கி.பி. 5 ஆம் நூற்றாண்டு முதல் கிபி 12 ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் தோன்றிய சிவனருட்செல்வர்கள் அருளிச் செய்தவை இத்திருமுறைகள் ஆகும். கால வரிசைப்படி நோக்கின் காரைக்கால் அம்மையார், திருமூலர் ஆகியோர் பாடியவற்றை முதலில் தொகுத்திருக்க வேண்டும். இவர்கள் தேவார ஆசிரியர்கள் மூவர் காலத்திற்கும் முற்பட்டவர்கள் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும். காரைக்கால் அம்மையார் கி. பி. 5, 6-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் அருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் முறையே நட்டபாடை, இந்தளம் என்ற பண்களில் தொடங்குவன. இவ்வமைப்பிலேயே திருஞானசம்பந்தர் அருளிய முதல் திருமுறையின் முதல் பதிகமும் இரண்டாம் திருமுறையின் முதல் பதிகமும் விளங்குகின்றன. சேக்கிழார், அம்மையாரைக் **''கீதம் முன்பாடும் அம்மை''** (66) என்று போற்றுகிறார். இதனால் அம்மையார் பாடல்களின் தொன்மை புலனாகும். அவ்வாறே திருமூலர் நீண்டகாலம் வாழ்ந்திருந்து ஆண்டிற்கு ஒரு பாடலாக 3000 பாடல்களை அருளிச் செய்தார் என்பர். இந்நூலில் இப்போது சில பாடல்கள் கூடுதலாகக் காணப்படுகின்றன. இவர் காலமும் கி. பி. 5, 6ஆம் நூற்றாண்டு என்று ஆய்வாளர்கள் கூறுவர். ஆயினும் இவர்கள் பாடல்களை முதற்கண் வைத்து முறைப்

---

12. இலக்கணக்கொத்து, நூ 7 உரை, ப. 14

படுத்சாமல், தேவார ஆசிரியர்கள் பாடியவற்றை முதலில் தொகுத்திருப்பதனுடைய நோக்கம் ஆராயப் பெற்றது. அருட்கடலும் அன்புக்கடலுமாகத் திகழும் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் கி. பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். இவர்கள் காலத்தை அடுத்து விளங்கியவர் சுந்தரர். ஒரு காலத்தவராயினும் நாவுக்கரசர் பாடல்களை முதற்கண் முறைப்படுத்தாமல் ஞானசம்பந்தர் பாடல்களை முதலில் வைத்ததற்குக் காரணம் இருத்தல் வேண்டும். அவற்றைச் சிந்திப்போம் :

1) ஞானப்பால் பருகிய ஈரம் புலராமுன்னர்ப் பாடிய சிறப்புடையவை திருஞானசம்பந்தரின் அருட் பாடல்கள்.

2) இருவருள் முதன்முதல் பதிகம் பாடியவர் திருஞானசம்பந்தரே ஆவர். இப்போது கிடைப்பனவற்றில் மிகுதியான பாடல்களை அருளிச் செய்தவர் சம்பந்தரே. 384 பதிகங்களில் 4158 பாடல்கள் கிடைத்துள்ளன.

3) மிகுதியான தலங்களுக்குப் பயணம் சென்று அங்குக் கோயில் கொண்டிருக்கும் இறைவனைப் பாடிய வகையிலும் சம்பந்தரே முதல்வராகத் திகழ்கின்றார்.

4) மூவர் பயின்ற பண்களை அடிப்படையாக வைத்து எண்ணிப்பார்க்குமிடத்துச் சம்பந்தர் பயின்ற பண்களே மிகுதியாக உள்ளன.

5) இறைவனின் திருவருட்சிறப்பினை உலகத்தார்க்கு உணர்த்தும் பொருட்டு மூவருள்ளும் மிகுதியான அற்புதங்களைச் செய்த பாடல்களும் சம்பந்தர் அருளியவையே.

6) தலந்தோறும் சென்று மக்களுக்கு சைவ சமய உணர்ச்சியையும், எழுச்சியையும் மிகுதியாக உண்டாக்கியவர் என்ற சிறப்புக்குரியவர் சம்பந்தர் ஆவார்.

7) தமிழகத்தில் எங்கும் பரவியிருந்த சமணம், பௌத்தம் ஆகிய புறச்சமயங்களைக் கண்டனம் செய்து சைவ சமயத்தினை நிலைநாட்டிய பெருமைக்குரியவரும் சம்பந்தரே ஆவர். இதனால் ‘பரசமய கோளரி’ என்று போற்றப் பெற்றவர்.

8) திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி திருஞானசம்பந்தரைப் பாடுபொருளாகக் கொண்டு ஆறு பிரபந்தங்களை யாத்துள்ளார். திருநாவுக் கரசருக்கு ஒரு பிரபந்தம் மட்டுமே உள்ளது. தொகை யடியார், தனியடியார் ஆகிய அனைவருக்குமாக ஒரு நூல் இவரால் பாடப்பெற்றுள்ளது.

9) இடபாரூடராக விசும்பில் காட்சியளித்த அம்மையப்ப ரால் ஞானப்பால் வழங்கப் பெற்றதாலும் பிள்ளையார் என்ற திருநாமம் இவர்க்குரியதாகச் சேக்கிழாரால் பன்முறையும் சுட்டப்பெறுவதாலும் இவரை முருகனின் அவதாரமாக எண்ணும் கருத்து எழுந்துள்ளது. இவ்வாறு எண்ணுதல் உபசார வழக்கே. இச்சிறப்பும் இவர்க்கு மட்டுமே உரியது. இவரைத் **''திருமகனார்''** என்றும் சேக்கிழார் இறைவனின் பிள்ளையாகப் போற் றியுள்ளரர்.

10) இறைவனின் திருவடிப்பேற்றினை மூவருள்ளும் முதலில் பெற்றவர் திருஞானசம்பந்தரே ஆவார்.

11) யாப்பியல், அணியியல், இலக்கிய வகைமை முதலிய பல துறைகளிலும் இவர் கொடை மிகுதி.

இன்னோரன்ன காரணங்களினால் திருஞானசம்பந்தரின் பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப்பெற்றன எனலாம். இவர் காலத்தில் வாழ்ந்தவரும் இவரால் **''அப்பரே''** என்று அழைக்கப் பெற்றவரும் பழுத்த ஞானியுமாகிய திருநாவுக் கரசரின் பதிகங்கள் அடுத்தும், கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சுந்தரரின் பதிகங்கள் அவற்றைச் சார்ந்தும் தொகுக்கப் பெற்றன. கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த மாணிக்கவாசகரின் அருளிச்செயல் களாகிய திருவாசகமும், திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாக எண்ணப்பெற்றன. இந்த நால்வருமே சைவ சமயக்குரவர்கள் என்று ஏத்தப்பெறுகின்றனர். இவர்கள் பரம்பொருளைத் துய்க்கும் பாக்கியம் பெற்றவர்கள் [Mystics]. சம்பந்தர், ''பெம்மான் இவன்'', ''என் உள்ளம் கவர் கள்வன்'' என்றும்; அப்பர், ''என் புந்தி வட்டத்திடைப் புக்கு நின்றானையும் பொய் என்பனோ'' என்றும்; சுந்தரர், ''மனத்து உன்னை வைத்தாய்'' என்றும்; மாணிக்கவாசகர், ''மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'',

''கண்ணால் யானும் கண்டேன் காண்க'' என்றும் கூறியுள்ள அனுபவ மொழிகள் அறியத்தக்கவை. இந்நால்வரும் சைவ நெறியின் காவலராகவும், தளபதிகளாகவும் போற்றப்பெறு கின்றனர்.

**நால்வர் சென்ற வழி**

நால்வர் தோன்றவில்லையென்றால் திருநீற்று நெறியாகிய சைவநெறி மறைந்திருக்கும். அந்த அளவிற்குச் சமண, பௌத்த சமயம் தமிழகத்தை மூடி மறைந்திருந்த காலம் இவர்கள் தோன்றிய காலம். திருஞானசம்பந்தக் கண்ணுடைய வள்ள லார்,

''சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்நம்
சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்-முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே? மாமறைநூல் தானெங்கே?
எந்தை பிரான் அஞ்செழுத்தெங் கே?''

என்று தாம் பாடிய **சிவானந்த மாலையில்** (6) குறிப்பிடுதல் காணத்தக்கது.

சமயக் குரவர்கள் நால்வரும் தமிழகத்தில் தோன்றித் தமிழர்க்குரிய சிவநெறியைக் காத்திலரெனின், பௌத்தமும் சமணமும் தமிழகம் எங்கும் பரவியிருக்கும். தமிழகமும் சமயத் துறையில் பௌத்தம் பரவிய சீனா, சப்பான், இலங்கை முதலிய நாடுகளைப்போல் மாறியிருக்கும் என்று எண்ணுதற்கு இடம் உண்டு.

சைவ எல்லப்ப நாவலர் சமயங்களுக்கெல்லாம் தலையாயது சைவ சமயமே என்றும் தெய்வங்களுக்கெல்லாம் மணிமுடியாய்த் திகழ்வது சிவ பரம்பொருளே என்றும் நான்மறையின் வாய்மை யாகத் திகழும் தேவாரமும் திருவாசகமும் நாம் உய்யும் பொருட்டு வழங்கியருளிய நால்வரின் திருவடிகளும் நம் உயிர்க்குத் துணையாகும் என்று எண்ணினார். இவர் பாடியுள்ள திருவருணைக் கலம்பகத்தில்,

''சைவத்தின் மேற்சமயம் வேறிலை அதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் இல்லெனும் நான்மறைச்
செம்பொருள்வாய்

மைவைத்த சீர்த்**திருத் தேவாரமும் திருவாசகமும்**
உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாளெம்
உயிர்த்துணையே''

என்று நால்வரையும் போற்றுதல் எண்ணி இன்புறத்தக்கது. மூவர் பாடல்களையும் தேவாரம் எனக் குறிக்கும் மரபு இப்பாடலில் கூறப்படுகிறது. நால்வரின் வாழ்வியலையும் அருளிச் செயல்களையும் கவிதை நலம் கெழுமப் பாடிய பெருமை கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசர்க்கு உண்டு. இவர்தம் **நால்வர் நான்மணி மாலை** ஒரு பாராட்டுமுறைத் திறனாய்வு இலக்கியம் என்று கொள்ளத்தக்கது. வடலூர் வள்ளலாரும் நால்வரைப் பொருளாகக் கொண்டு அருள் மாலைகள் பாடியிருத்தல் காணலாம்.

நால்வரின் வாழ்வியலும் நான்கு வகையான நெறிகளை மக்களுக்கு விளக்கிக் காட்டுகின்றன. சரியை, கிரியை, யோகம். ஞானம் என்ற நான்கு நிலைகளிலும் தாதமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்ற நான்கு நெறி களிலும் முறையே அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய நால்வரும் மேலோங்கி நின்றவர்கள். சரியை நிலையில் உருவத்திருமேனியைப் பூவும் புகையும் கொண்டு வழிபடுவர். இதனைப் புறவழிபாடு என்பர். இவ்வழிபாட்டில் உடலையே இறைவனுக்குக் காணிக்கையாக்குவர். கிரியை வழிபாட்டில் நிற்போர் அருஉருவத் திருமேனியாகிய சிவக் கொழுந்தைப் பரவுவார். இதனை அகப்புற வழிபாடு என்பர். இவ்வழிபாட்டில் ஞானப்பொறிகள் ஐந்தினையும் இறை வனுக்குக் காணிக்கையாக்குவர். யோக நெறியில் நிற்பவர் இறைவனின் அருவத் திருமேனியை வழிபடுவர். இவ்வழிபாட்டில் யோகம் பயில்வதற்கி நிலைக்களனாகவுள்ள உள்ளத்தை இறைவனுக்குக் காணிக்கையாக்குவர். ஞானநெறி நிற்போர் மேற்சுட்டிய மூவகைத் திருமேனிகளையும் கடந்து விளங்கும் ஞானமாய் உள்ள இறைவனை ஞானத்தினால் ஏத்துவர். இவர்கள் தம் உயிரையே இறைவனுக்குக் காணிக்கையாக்குவர். இதனையே **ஆத்தும நிவேதனம்** என்பர். இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பினை நான்கு வகையாகக் கொண்டு இந்நால்வரும் ஒழுகினர். திருநாவுக்கரசருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு ஆண்டான் அடிமை நெறி யாகவும் திருஞானசம்பந்தரின் இறைத் தொடர்பு தந்தை மகன்மை நெறியாகவும் சுந்தரர்க்குள்ள தொடர்பு தோழமை

நெறியாகவும் மாணிக்கவாசகர்க்குரிய உறவு குரு சீடர்க்கு உரியதாகவும் கொள்ளப் பெறுகின்றன. நால்வரும் பின்பற்றிய நெறி ஒன்றற்கொன்று உறவுடையது. இறைவன் திருவடியாகிய ஓரிடத்திற்கு உய்ப்பது. ஞானத்தின் எல்லையாகிய தில்லைத் திருக்கோயிலில் ஆனந்த தாண்டவம் காண்பதற்கு நால்வரும் வருகை புரிந்த மரபுச் செய்தியும் இங்குச் சுட்டுவதற்கு உரியது.

சீர்காழியிலிருந்து புறப்பட்டு வந்த திருஞானசம்பந்தர் தெற்குக் கோபுர வாயில் வழியாகத் தில்லையம்பலக் காட்சியைக் காண வருகை புரிந்தனர். இவ்வுண்மையினைச் சேக்கிழார்,

''மருங்கில் நந்தன வனம்பணிந்து அணைந்தனர்
மாட மாளிகை ஓங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதில் **தென்திரு வாயில்**
நேரணித் தாக'' (28.154)

''செப்பம் மல்கிய தில்லைமூ தூரினில்
**தென்திசைத் திருவாயில்**
எல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்குநின்
றெடுக்கும் ஏத்தொலி சூழ'' (28.156)

என வரும் பாடல்களில் குறித்துள்ளார். திருநாவுக்கரசர் மேலைக் கோபுர வாயில் வழியாகத் திருக்கோயிலுக்குள் வந்து சேர்ந்தார். இப்பெற்றியை,

''செஞ்சொல் திருமறை மொழியந்தணர்பயில்
தில்லைத் திருநகர் எல்லைப்பால்
மஞ்சிற் பொலிநெடு மதில்சூழ் **குடதிசை**
**மணிவாயிற் புறம்**வந் துற்றார்'' (21.161)

என வரும் பெரிய புராணச் செய்யுள் உறுதிப்படுத்துகிறது. சுந்தரமூர்த்தி நாயனார் வடக்குக் கோபுர வாயில் வழியாக வந்தடைந்தார். இவ்வுண்மையினை,

''தில்லை, ஊர்விளங்கு திருவாயில்கள் நான்கின்
**உத்தரத் திசை** வாயில்முன் எய்தி'' (1-5-97)

என்று சேக்கிழார் பொறித்துள்ளார். உத்தரத்திசை என்பது வடதிசையினைக் குறிக்கும், உத்தரமதுரை என்ற வழக்காறு காணத்தக்கது.

மூவர் காலத்தை ஒட்டி வாழ்ந்தவராகக் கருதப்பெறும் மாணிக்கவாசகர் கீழைக் கோபுர வாயிலாகத் தில்லை நடராசரை வழிபடுதற்கு வந்தனர் என்பது மரபுச் செய்தியாகக் காணப்படுகிறது. நால்வரும் வந்த வழிகள் நால்வேறு வழி களாக இருப்பினும், அவர்கள் சென்று சேர்ந்த இடம் ஒன்றாகவே இருத்தல் உணரத்தக்கது. எனவேதான், **நால்வர் (நாலுபேர்) சென்ற வழியில் செல்ல வேண்டும் என்ற பழ மொழியும் மக்களிடையே வழங்கி வருகின்றது.**

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளும் பேரின்பப் பேற்றிற்குரிய சாதனங்களாகச் சித்தாந்த நூல்களில் சிறப்பாகக் குறிக்கப் பெற்றுள்ளன. சில நெறிக்குரிய ஆகமங்களில் இவை நான்கு பாதங்களாக அமைந்துள்ள திறமும் இங்குச் சுட்டுதற்குரியது. இந்நான் கினையும் முறையே அரும்பு, மலர், காய், கனி என்று படிமுறையில் வைத்துக் கூறு மரபினை,

''விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே''

என வரும் தாயுமானவர் பாடலில் காணலாம். இப்பெரியவர், ,'ஞானம் அலதுகதி கூடுமோ'' (சின்மயானந்தம், 11) என்றும் சுட்டியிருத்தலின், மெய்யுணர்வுக்கு வாயிலாகிய ஞானமே முடிந்த சாதனம் என்பது புலனாகும். சரியை, கிரியை, யோகம் என்பன மூன்றையும் **'இறப்பில் தவம்'** என்று சிவஞானபோத வெண்பா சுட்டுகிறது. இம்மூன்று நெறியிலும் ஊன்றி நின்றவரே ஞானம் பெற்று மெய்ப் பொருளை உணர்ந்து வீடுபெறுவர் என்பது சித்தாந்தத் துணிபு. எனின், சரியையில் ஞானம், கிரியையில் ஞானம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என்ற வகையில் முறையே அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் நின்றொழுகியவர் என்று தெளிதல் மரபு. நால்வருமே நால்வகை நெறியிலும் ஒழுகியவர் எனினும், விஞ்சி நிற்கும் பண்பினால் குறிப்பிட்ட ஒரு நெறிக்கு மட்டுமே உரியவராக இவர்கள் எண்ணப் பெறுதல் நோக்கத்தக்கது.

நால்வர் அருளிச் செயல்களும் தமிழகத்தில் மட்டுமன்றிக் கடல் கடந்து தமிழ் நாகரிகம், பண்பாடு, சமயம் பரவியுள்ள தென்கிழக்காசிய நாடுகளிலும் பரவியுள் பாங்கினை இந்திய வியலார் (Indcogists) நன்கு ஆராய்ந்து கூறியுள்ளனர். கி. பி. 1931 இல் டாக்டர் ஹெச். ஜி. குவாரிட்சு வேசுல்

(Dr. H.. G Quaritch wales) என்னும் அறிஞர், தாய்லாந்து நாட்டில் நடைபெறும் முடிசூட்டு விழா, ஊஞ்சல் விழாக்களில் தமிழ்மறைகள் ஓதப்பெற்று வரும் உண்மையினை விரிவாக ஆராய்ந்து வெளியிட்டனர். திருஞானசம்பந்தரின் 'தோடுடைய செவியன்' என்ற முதற்பதிகமும், சுந்தரரின் 'பித்தா பிறைசூடி' என்ற முதற்பதிகமும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் ஆண்டாளின் திருப்பாவையும் தென்னாட்டுக்குரிய கிரந்த எழுத்தில் வரையப்பெற்று இன்றும் தாய்லாந்து நாட்டின் அரசு விழாக்களில் பாடப்பெற்று வருதலை, மலேயாப் பல்கலைக் கழகத்தின் இந்திய ஆய்வியல் துறையின் பேராசிரியர் முனைவர் ச. சிங்கார வேலு களஆய்வு செய்து தாய்லாந்து அரசகுருவின் உதவியால் ஒளிப்பதிவு செய்து வந்தனர்.

அன்றியும், ''Some aspects of South Indian Cultural Contacts with Tailand: Historical Backgronnd''[13] என்ற தலைப்பில் சிறந்த ஆய்வுக்கட்டுரை எழுதி முதல் உலகத்தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் படித்துள்ளார். இக்கட்டுரையில் நால்வர் காட்டின நன்னெறி தாய்லாந்திலும் பரவியுள்ள திறம் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளது. அன்றியும், மலாய் மொழியில் எழுதப் பெற்றுள்ள இராமாயணக் கதையில், கைலை மலையினை எடுத்த இராவணன், இறைவன் சிறுவிரலூன்ற மலையடியிற்பட்டு நசுங்கும் நிலையில், கைந்நரம்பினை எடுத்து யாழாக மீட்டிச் சாமகீதம் பாடி அருள்பெற்ற செய்தி சொல்லப் பெற்றுள்ளது. இச்செய்தி வடமொழியில் எழுதப்பெற்ற ஆதி காவியம் ஆகிய வான்மீகி இராமாயணத்திலும் கம்பராமாயணத் திலும் மற்றும் எந்தவொரு இந்திய மொழியில் எழுதப் பெற்ற இராமாயணத்திலும் காணப்படவில்லை. எனின், சம்பந்தர் தேவாரத்திலும் (231-8) அப்பர் தேவாரத்திலும், (4-28, 6; 34-01; 49-11) இச்செய்தி இடம் பெற்றுள்ளதால், மலாய் மொழியிலும் தேவாரத்தின் தாக்கம் காணப்படுதலைப் பேராசிரியர் ச. சிங்காரவேலு தம் முனைவர் பட்டத்துக் குரிய ஆய்வேட்டில் தெளிவாகக் குறித்துள்ளார். கம்போடியா, தாய்லாந்து முதலிய நாடுகளில் காரைக்காலம்மை

13. **Proceedings of the First International Conferences Seminar of** Tamil Studies Vol. I, Kuala Lumpur Malysia April 1966, PP. 21-24.

யாரின் கோயில்கள் காணப்படுகின்றன. இன்னோரன்ன காரணங்களினால் தமிழர்தம் திருமுறைநெறி தென்கிழக்காசிய நாடுகளில் பல்லவர், சோழர் காலங்களில் பரவியிருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சி வல்லுநர்கள் கூறும் கருத்து இவண் எண்ணுதற்குரியது.

## முடிவுரை

இதுகாறும் எழுதியவாற்றான் திருமுறைகள் தோன்றிய காலச்சூழல், திருமுறை ஆசிரியர்களின் அருளிச் செயல்கள், திருமுறைப் பொருள் விளக்கம், தேவாரத் திருமுறையின் தனிச் சிறப்பு, தேவாரம் என்ற சொல்லின் பல்வகைப் பொருண்மை, தேவாரம் செப்பேட்டிற் பொறிக்கப் பெற்றிருந்ததிறம், நால்வர் காட்டிய நெறி தமிழகத்தில் மட்டுமன்றித் தென்கிழக்காசிய நாடுகளிலும் பரவிய பாங்கு முதலிய திருமுறைத் தொடர்புடைய அடிப்படைக் கருத்துக்களைக் கண்டோம்.

இனி, திருமுறைகளின் உள்ளுறையாகிய பொருண்மை அடிப்படையில் திருமுறைகளைத் தொகை, வகை செய்தற்குரிய திறம் குறித்து அடுத்த இயலில் ஆராய்வோம்.

# தோத்திரம், சாத்திரம், சரித்திரம்

பன்னிரு திருமுறைகளின் பொருண்மையினை நுணுகி நோக்கின் அவை தோத்திரம், சாத்திரம், சரித்திரம் என்ற பாகு பாட்டில் அடைவு செய்தற்குரியவை என்பது புலனாகும். பத்தாம் திருமுறை சைவ சித்தாந்தச் சாத்திரமாகத் திகழ்வது. பன்னிரண்டாம் திருமுறை அடியார்களின் அருஞ்சாதனைகளை விரித்துக் கூறும் சரித்திரமாக விளங்குவது. எஞ்சிய பத்துத் திருமுறைகளும் இறைவனைப் பாடி பரவும் தோத்திரங்களாக ஒளிர்வன. இங்ஙனம் பாகுபடுத்துதல் ஒரு பொது வரையறையே ஆகும்.

தோத்திரம் என்ற சொல் இறைவனின் பொருள்சேர் புகழினை இனிய சொற்களினால் பாடிப் பரவுதல் என்ற பொருளைத் தருவது. திருஞானசம்பந்தர்,

> ''தொழுது பொழுது தோத்திரங்கள் சொல்லித்
> துதித்துநின்று
> அழுதும் நக்கும் அன்புசெய்வார் அல்லல் அறுப்பாரே''
> (1-73-11)

> ''பல பத்தர்கள்,
> தொண்டிரைத்தும் மலர்தூவித் **தோத்திரம்** சொல்ல''
> (3-33-7)

> ''தோத்திரம் செய் வாயினுளான்'' (1-62-7)

என்று ஈசனைப் பூசனை புரியும் முறையினைக் குறித்தனர். திருநாவுக்கரசர்,

> ''தொழுதெழுந் தாடிப் பாடித் **தோத்திரம்** பலவும்
> சொல்லி

அழுமவர்க்கு அன்பர் போலும் ஆவடுதுறைய னாரே''
(4-56-4)

என்று பத்திமையின் வெளிப்பாட்டினையும் தோத்திரம் சொல்லி வழிபடுதலையும் சுட்டினர், சுந்தரர்,

'' **தோத்திரமும்** பல சொல்லி துதித்து இறைதன்
திறத்தே
கற்பாரும் கேட்பாரு மாய்எங்கும்'' (7-16-5)

என்று திருக்கலய நல்லூர் பதிகத்தில் பகந்துள்ளனர். மாணிக்க வாசகர்,

''இருக்கொடு **தோத்திரம்** இயம்பினர் ஒருபால்'' (20-4)

என்று இறைவனைப் பரவிப் பாடும் இசைப் பாடல்களைக் குறித்துள்ளார். இங்ஙனமே ஏனைய திருமுறைகளிலும் புகழ்ப் பாடல்களைத் தோத்திரம் என்று கூறும் மரபு பயிலப் பெற்றது. அன்றியும், **கீதம், துதி, பா, பாடல், பாட்டு, பாசுரம் முதலிய சொற்களினாலும் தோத்திரங்கள் குறிக்கப் பெற்றுள்ளன,** இறைவனை முன்னிலைப் பரவலாகவும் படர்க்கைப் பரவலாகவும் போற்றுவதாக அமைந்துள்ள தோத்திரங்கள் பெருமானின் அருட்செயல்களையும்மறக்கருணையினையும்பொருண்மையாகக் கொண்டவை. இறைவன் கோயில் கொண்டுள்ள தலங்களின் சிறப்பினையும் இயற்கைப் பொலிவின் காட்சியையும் ஒருங்கே சொல்லோவியம் செய்து போற்றும் தோத்திரங்களும் உள்ளன. தன் அனுபவங்களை வெளிப்படுத்தும் பாடல்கள் பற்பல. முன்னை நிலைக்கு இரங்கிக் கசிந்துருகி இறையருளைப் பெறும் பாங்கில் எழுந்த தோத்திரங்கள் மிகப்பல. உலகியல் உரைப் பனவும் உள்ளன, மாந்தர் நன்னெறி நிற்றற்கு வழிகாட்டும் பாடல்கள் பல, பழைய செய்திகளையும் 'வரலாற்றுக் குறிப்புக் களையும் கொண்ட தோத்திரங்களும் சுட்டத்தகுவன. கற்பனை வளமும் உணர்ச்சிப் பெருக்கும் மிதந்து வரும் பாடல்கள் எண்ணில. அகப்பொருட் பதிகங்களாக அமைந்தவை பல. நெஞ்சோடு பேசுவன பல. உலகமாந்தரை அகவி அழைத்து அறம் உரைப்பன பல. மெய்ப்பொருட் குறிப்புடைய தோத்திரங் களும் காணப்பெறுவன. எனினும், இங்ஙனம் பல்வகைப் பொருண்மை வாய்ந்த பதிகங்களாகிய தோத்திரங்கள் யாவும் பரம்பொருளின் அளப்பரிய அருட்குணங்களை மையமாகக் கொண்டு பாடப் பெற்றவையாகும்.

தோத்திரங்களாக அமைந்த மேற்சுட்டிய பத்துத் திருமுறை களில் சரித்திரக் குறிப்புக்களும் சாத்திரச் செய்திகளும் விரவி

வருதல் உண்டு. முதலில் தோத்திரங்களில் பொதிந்துள்ள சரித்திரச் செய்திகளைச் சுருக்கமாகக் காண்போம்.

**தோத்திரத்தில் சரித்திரம்**

ஏழாம் திருமுறையினை அருளிச் செய்த சுந்தரர்தான் முதன் முதல் இறையடியார்களின் வரலாற்றினைத் தோத்திரமாகப் பாட முற்பட்டவர். அவர் அவதார நோக்கினைச் சேக்கிழார்.

''மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போதுவார்'' (1-25)

என்று பொறித்துள்ளார். இறைவன் தொண்டர் உள்ளத் தொடுக்கம் ஆதலின், சொல்லுதற்கரிய தொண்டர்தம் பெருமையினைச் சுந்தரர் வாயிலாக உலகுக்கு உணர்த்தும் பாங்கில் திருவாரூர்ப் பெருமான், ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்று அடியெடுத்துக் கொடுக்க, அப்பெருமானின் திருவருள் ஆணையால் திருத்தொண்டத் தொகையினைச் சுந்தரர் பாடியருளினார். பதினொரு பாடல்களைக் கொண்ட இப்பதிகம் தனியடியார்கள் அறுபதின்மர், தொகையடியார்கள் ஒன்பதின்மர் வரலாற்றினைத் தொகுத்துக் கூறுவது. எனவே, தோத்திரத் திருமுறையில் ஒரு சரித்திரத் பதிகம் விரவியிருத்தல் சுட்டத் தகுவது. சுந்தரர், அவர்தம் பெற்றோர் ஆகிய சடையனார், இசைஞானியார் ஆகியோரையும் சேர்த்துத் தனியடியார் அறுபத்து மூவராகப் பாடிய சிறப்பினை நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியிலும், பெரியபுராணத் திலும் காணலாம்.

எனின், தனியடியார்கள் ஒருசிலரைத் திருமுறையாசிரி யர்கள் சிறப்பித்துப் பாடியுள்ள திறத்தினை இங்கு நோக் குவோம்.

**1. சண்டேசுரர்**

நாயன்மார் அறுபத்து மூவருள் காலத்தால் முற்பட்ட தொண்டர்களில் சண்டேசுரர் சிறப்பிடம் பெறுகிறார். பொன்னி நாடாகிய சோழநாட்டில் மண்ணியாற்றின் தென் கரையில் திகழும் சேய்ஞலூரில் இவர் தோன்றினார். இவர் இயற்பெயர் விசாரசருமர். இளம்வயதில் கல்வி, கேள்விகளில்

சிறந்து விளங்கியதால் **'சிறிய பெருந்தகையார்'** என்ற பாராட்டினைப் பெற்றவர். சிவபத்தியில் முற்றிநின்ற விசாரசருமர் இளம்பருவத்தே மணலால் சிவலிங்கம் அமைத்துப் பசுப் பாலினால் திருமஞ்சனம் ஆட்டிவரும் செயலைப் பல நாளும் கேட்டிருந்த தந்தை ஒருநாள் நேரில் கண்டு தன்மகன் செயலினைக் காணப்பொறாது அவனை அடித்ததுடன் திருமஞ்சனத்துக்குரிய பாலினையும் இடறிவிட்டதால் தந்தையென்றும் பாராமல் அவன் காலைத் தடிந்து வீழ்த்தினார். இளையராயினும் சிவபூசையில் ஊன்றிய விசாரசருமர்க்கு விடைமிசை அம்மையப்பர் காட்சி தந்து கொன்றைமலர் மாலையினை அவர் முடியிற் சூட்டித் தொண்டர்க்குத் தலைவனாக்கிச் சண்டீசப் பதம் தந்து ஆண்டு கொண்டார். அதுமுதல் இயற்பெயரானன்றிச் சிறப்புப் பெயராகிய சண்டேசுரர் என்றே இந்நாயனார் அழைக்கப் பெற்றார். இவர் வரலாற்றினைத் திருஞான சம்பந்தர் பலபாடல்களில் குறித்துள்ளார். அவற்றுள் ஒரு பாடலை மட்டும் இங்குச் சுட்டுதல் தகும்:

''வந்தமண லால்இலிங்கம் மண்ணியின்கட் பாலாட்டும்
சிந்தைசெய்வோன் தன்கருமம் தேர்ந்துசிதைப்
பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலும் சண்டீசன் என்றருளிக்
கொந்தணவு மலர்கொடுத்தான் கோளிலிஎம்
பெருமானே'' (1.62.4)

எனவே, சண்டீசன் என்பது இவர்தம் சிறப்புப் பெயராதல் தெளிவு. இவர் வரலாற்றினைத் திருநாவுக்கரசரும் பல பாடல்களில் குறித்துள்ளார். அவற்றுள்,

''ஆமலி பாலும் நெய்யும் ஆட்டி அர்ச்சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பொறாததன் தாதை
தாளைக்
கூர்மழு வொன்றால் ஓச்சக் குளிர் சடைக் கொன்றை
மாலைத்
தாமநற் சண்டிக்கு ஈந்தார் சாய்க்காடு மேவினாரே''
(4.65.6)

எனவரும் பாடல் சண்டீசர் வரலாற்றினைத் தெளிவாக எடுத்துரைப்பது. சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத்

தொகையில் இவரைப் பாடியிருப்பினும் திருக்கலயநல்லூர் பதிகத்திலும் எடுத்துப் பாடுதல் எண்ணத்தக்கது.

''இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கமது இயற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதாதை
யைத்தாள்
துண்டமிடு சண்டியடி அண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட
விடங்கனதூர் வினவில்'' (7-16-3)

எனச் சண்டேசர் தொண்டர் அனைவராலும் தொழத்தக்கவர் என்பது அப்பாடலினால் புலனாகும். சிவாலயங்களில் சண்டேசர்க்குத் தனிச்சன்னிதி இருத்தலும் பஞ்ச மூர்த்திகளில் ஒருவராக அவர் விளங்குதலும் எண்ணற்பாலன. சண்டேசுரரைச் சண்டி என்று வழங்கும் மரபினையும் காண்கிறோம். மணிவாசகர்,

''தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்
(8-15-7)

என்று சண்டிநாயனாரின் தீவிரபத்தியின் மாட்சியைப் பாடினார். ஈசனுக்கு அன்பின்றித் தக்கன் செய்த வேள்வி தீயதாக முடிந்தது என்றும், இறையன்புடன் தாதையின் தாளைத் தடிந்த சண்டியின் மறச்செயல் நன்மையாக விளைந்தது என்றும் அருணந்திசிவம் இயம்பியிருத்தல் இங்குச் சுட்டத்தக்கது:

''அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே''

(சிவ. சித்தி. நூ. 2. அதி. 2.29)

இப்பாடலினால் நன்மை தீமை, புண்ணியம் பாவம் என்பன செய்யப்படும் குறிக்கோளை நோக்கி அமைவன என்ற சித்தாந்த கருத்து தெளிவாதல் காணத்தக்கது. உண்மையான பத்தி உலகியல் பாசங்களைக் கடந்து நிற்பது என்பது சண்டேசர் செயலி

னால் புலனாகிறது. நால்வர் இறைவனுக்குச் செய்த பத்தியி னின்றும் சண்டீசர் பத்தி தனித்து எண்ணத்தகுவது. ஒருவகையில் வீரம் செறிந்த பத்தியாகவும் வைராக்கிய அன்பாகவும் சண்டியின் உறுதிப்பாடு கொள்ளற்கு உரியது. எனவேதான், நால்வராலும் பாராட்டுதற்குரிய பழவடியாராகச் சண்டீசர் விளங்குகின்றார். திருவிழாக்காலங்களில் சிவலாயத்திலிருந்து வீதிஉலா வரும் பஞ்சமூர்த்திகளில் சண்டீசரின் உற்சவ மூர்த்தமும் ஐந்தாவதாக அமைத்து அருள்பாலித்தல் நோக்கத்தக்கது. எனவே தோத்திர சாத்திரத் திருமுறைகளில் சண்டீசர் சரித்திரம் சிறப்பாக இடம் பெறுதல் தெளிவாகும். காலத்தால் முற்பட்ட நாயன்மாருள் மற்றொருவர் கண்ணப்பர் ஆவர். அவர் வரலாறு அருளாளர் களால் சுட்டப் பெற்றுள்ள பாங்கினைச் சுருக்கமாகக் காண்போம்,

## 2. கண்ணப்பர்

இவர் இயற்பெயர் திண்ணன். இவர் தந்தை வேடர் தலைவ னாய்ப் பொத்தப்பி நாட்டினை ஆண்டவர். திண்ணன் இளம் வயதிலேயே காளத்தி மலையில் கோயில் கொண்ட ஈசனிடம் அன்பு பூண்டவர். முற்றிய பத்தியால் பொன்முகலியாற்று நீரினை வாயில் முகந்து கொண்டு, பதம்பார்த்த பன்றி இறைச்சியைக் கையில்ஏந்தி மலர்சொரிந்து வழிபடும் மாண்பினர். இவர் இறையன்பினை உலகுக்கு உணர்த்த இறைவன் தன் கண்ணில் குருதி வடியக்கண்டு தன் கண்ணை இடந்து அப்பி வீடு பெற்றனர். சமயக்குரவர் நால்வரும் பத்திக்குப் பேரெல்லை யாகக் கண்ணப்பரைப் போற்றிப் பாடியுள்ளனர்.

திருஞானசம்பந்தர்,

''வாய்கலச மாக வழிபாடு செயும்வேடன்
மலராகு நயனம்
காய்கணையி னாலிடந்து ஈசனடி கூடு
காளத்தி மலையே'' (3-69-4)

என்று வேடன் பெற்ற பெருவாழ்வினைப் பரவினார். அப்பரடிகள்,

''குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை
இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க்
கலசம் ஆட்ட

உவப்பெருங் குருதி சோர ஒருகணை இடந்தங்கு
அப்பத்
தவப்பெருந்தேவு செய்தார் சாய்க்காடு மேவினாரே''
(4-65-8)

என்று உருக்கமாகக் கண்ணப்பர் வரலாற்றினைப் பாடுதல் அறியத்தக்கது. சுந்தரர், ''கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கு அடியேன்'' என்று வேடர்க்குத் தொண்டரானார். மாணிக்க வாசகர்,

'' கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்
கொண்டருளி'' (8-10-4)

என்று பத்தியின் முடிமணியாகத் திகழும் அடியார் திறத்தைப் போற்றினார். ஒன்பதாம் திருமுறையில் பூந்துருத்தி நம்பி காட நம்பி கண்ணப்பரைப் போற்றியுள்ளார். (9-19-2)

பதினோராம் திருமுறையில் இரண்டு பிரபந்தங்கள் கண்ணப்பரின் வீரம் சார்ந்த பத்தி வரலாற்றினைச் சுவைபட உரைப்பன. நக்கிரதேவர் பாடிய ''திருக்கண்ணப்பதேவர் திருமறம்'' 158 அடிகளால் இயன்ற இணைக்குறளாசிரியப்பா. இதே தலைப்பில் 38 அடிகளில் இதே யாப்பில் கல்லாடதேவர் அருளிய பாடலும் காணத்தக்கது.

சிவானந்தலகரி என்ற வடமொழிப் பனுவலில் ஆதிசங்கரர் கண்ணப்பரை உளங்குளிர்ந்து பாடியிள்ள வரலாறும் இங்குச் சுட்டத்தகுவது.[1]

### 3- கோச்செங்கட் சோழன்

தேவார ஆசிரியர் மூவர்க்கும் காலத்தால் முற்பட்ட நாயன்மார்களில் கோச்செங்கட் சோழன் குறிப்பிடத்தக்கவன். இவன் தேவார ஆசிரியர்களாலன்றி வைணவ நெறிக்குரிய திருமங்கை யாழ்வாராலும் சிறப்பித்துப் பாடப் பெற்றவன்(6-6-8). முதலாம் மகேந்திரவர்மன் காலத்திற்கு முன்னமே ஈசனுக்குக் கற்றளியாக மாடக் கோயில்கள் பற்பல எழுப்பிய மாண்பினன். இவனைக் கடைச் சங்கத்தின் இறுதிக் காலத்தில் வாழ்ந்தவன் என்பர்

---

1. காப்பியக் குறிக்கோள், ப. 92-3.

ஆராய்ச்சியாளர். இவ்வேந்தனைப் பற்றிய திருமுறைக் குறிப்புக்கள் சிலவற்றை இங்கு நோக்குவோம்.

முன்னைப் பிறவியில் திருவானைக்காவில் வெண்ணாவல் மரத்தடியில் சுயம்புவாக வெளிப்பட்டிருந்த சிவலிங்கத்தின்மேல் சருகு விழாதபடி தன்வாயின் நூலினால் வலைகட்டி வழிபட்ட சிலந்தி சிவபுண்ணியத்தினால் பின்னைப் பிறவியில் கோச்செங் ணானாகப் பிறந்தமையினை அருளாசிரியர்கள் பலரும் பாடி யுள்ளனர்.

சிலந்தியைப் போலவே சிவபத்தியில் முன்னின்ற யானை தன் துதிக்கையில் நீர்முகந்து ஈசனுக்கு நீராட்டி வழிபட்டதால் அந்தத் தலம் ஆனைக்கா எனப் பெயர் பெற்றது. சிலந்தியின் வலையினை அனுசிதம் என்று எண்ணி அழிக்க முற்பட்ட யானையின் தும்பிக்கையில் அச்சிலந்தி புகுந்ததால் வருத்தம் தாங்கமுடியாத நிலையில் தன் கையினைத் தரையில் அறைந்த தால் தானும் சிலந்தியும் இறந்தன. சிவபுண்ணியத்தால் யானை வீடுபெற்றது.சிலந்தியே மறுபிறப்பில் சோச்செங்கட்சோழனாகப் பிறந்து யானை எளிதில் புகமுடியாத மாடக்கோயில்கள் பல எடுப்பித்து வீடுபெற்ற வரலாற்றினை,

''சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தான்'' (199-7)
''செய்யகண் வளவன்முன் செய்த கோயிலே'' (276-2)
''செம்பியன் கோச்செங்கணான் செய் கோயிலே''
(27-96-5)

எனவரும் திருஞானசம்பந்தர் பாடற்பகுதிகள் சுட்டுகின்றன. இவ்வரலாற்றினைச் சற்று விரித்துத் திருநாவுக்கரசர்,

'' சிலந்தியும் ஆனைக் காவில் திருநிழற் பந்தர் செய்து
உலந்தவன் இறந்தபோதே கோச்செங்க ணானுமாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டரர் குறுக்கை வீரட்ட
னாரே'' (4-49-41)

என்று இசைத்துள்ளார். சுந்தரர் பதிகத்திலும் இவ்வேந்தன் வரலாறு இரு பாடல்களில் குறிக்கப் பெற்றுள்ளது (7.66.2; 65.1). வினைக்கீடாக அஃறிணை உயிர்கள் உயர்திணைப்பிறப் பெய்தலும் உயர்திணை உயிர்கள் அஃறிணைப்பிறப்பெய்தலும் உண்டென்பது சித்தாந்தத்துணிபாகும் [சிவநூ. சித்தி. நூ. 2.2-44].

## 4. நமிநந்தி அடிகள்

நம்பிநந்தி என்ற இயற்பெயர் அப்பர் தேவாரத்தில் காணப் படுகிறது. நமிநந்தி என்பது திரிபுற்ற பெயர். இவர் அந்தணர். சோழ நாட்டில் ஏமப்பேறூர் என்பது இவர் பிறப்பிடம். திருவாரூர் அரனெறியப்பர்க்குப் பங்குனி உத்திரத் திருநாளில் நீரால் விளக்கெரித்துத் திருவருளால் அற்புதம் நிகழ்த்தி இகலுற்ற சமணரை அயலூர் புகச் செய்தவர். அப்பரடிகள் இவரைத் **'தொண்டர்க்கு ஆணி'** என்று போற்றினார். திருவிளக்கிடுதல் என்ற சிவபுண்ணியத்தால் வீடுபெற்றவர் இப்பெரியார். திருஞானசம்பந்தர்,

''தாவியவன் உடனிருந்தும் காணாத தற்பரனை
ஆவிதனில் அஞ்சொடுக்கி அங்கணன்என் றாதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தி அடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம்
பெருமானே'' (1-62-6)

என்று இவ்வடியாரைப் பரவினர். திருநாவுக்கரசர்,

''ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன் ஆரூ
ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் **நம்பிநந்தி**
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியு மன்றே''
(4-102-2)

எனவரும் பாடலில் இவ்வடியார் சிறப்பினைப் பொறித் துள்ளார்.

## 5. தண்டியடிகள்

இவ்வடியார் திருவாரூரில் தோன்றியவர். பிறவிக்குருடர். திருக்குளம் எடுத்து ஈசன் கருணைக்கு இலக்கானவர். திருவைந் தெழுத்தினை ஓதித் திருக்குளத்தில் மூழ்கி எழுந்து திருவருளால் கண்ணொளி பெற்றவர். இவருடன் இகலுற்ற சமணர்கள் குருடாகித் திருவாரூரைத் துறந்து வெளியேறினர். இவர் கையில் எப்பொழுதும் தண்டேந்தி நடந்ததால் 'தண்டுடைத் தண்டி' என்று சுந்தரரால் சுட்டப் பெற்றவர் (7.738). இவரைச் சிவகணங்களுள் ஒருவராக வைத்து அப்பர் பாராட்டி யுள்ளார்:

''**தண்டி**, குண் டோதரன், பிங் கிருடி
சார்ந்த புகழ்நந்தி, சங்கு கண்ணன்
பண்டை யுலகம் படைத்தான் தானும்
பாரை யளந்தான் பல்லாண் டிசைப்பத்
திண்டி வயிற்றுச் சிறுகட் பூதம்
சிலபாடச் செங்கண் விடையொன் றூர்வான்
கண்டியூர் கண்டியூர் என்பீ ராகிற்
கடுகநும் வல்வினையைக் கழற்ற லாமே.''
(6-93-7)

இப்பாடலிற் சுட்டப்பெற்ற அடியார் வரிசையில் தண்டி முதலில் வைத்துப் போற்றப் பெறுதல் அறியத்தக்கது. குண்டோதரன், பிருங்கி (=பிங்கி என மருவியது) முதலிய பலரும் புராண காலத்துச் சிவனடியார்கள் என்பதும் இவர்களைச் சுந்தரர் தொகையடியார் கூட்டத்தில் வைத்துப் போற்றினர் என்பதும் எண்ணற்பாலன.

## 6. சிறுத்தொண்டர்

இவர் இயற்பெயர் பரஞ்சோதியார். திருச்செங்காட்டங் குடியில் மாமாத்திரர் குலத்தில் தோன்றியவர். பல்லவ வேந்த னுக்குப் படைத்தலைவராகப் பணியாற்றியவர். வாதாபிப் போரில் மேலைச் சாளுக்கியரை வென்றவர். பைரவ வேடத்தில் வந்த இறைவன் வேண்டப் பிள்ளைக்கறி அமுது வழங்க முற்பட்டு இறையருள் எய்தி வீடுபெற்றவர். திருஞான சம்பந்தர் திருச்செங்காட்டங்குடித் திருப்பதிகம் முழுதும் இவர் பத்திச்சிறப்பினைப் பாடியுள்ளார். இப்பதிகத்தில்,

''கன்னவில்தோள் சிறுத்தொண்டன் கணபதியீச்
சரம்மேய
இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே''
(3-63-2)

என்று வரும்பகுதி எண்ணற்பாலது. முதல் திருமுறையில்,

''பொடிநுகரும் சிறுத்தொண்டர்க்கு அருள்செய்யும்
பொருட்டாகக்

கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே''
(1-61-10)

எனவரும் பாடற்பகுதியும் இயைபுறுத்தி நோக்கத்தக்கது. முதலாம் மகேந்திரவர்மன்' அவன் மகன் நரசிம்மவர்மன் காலத்தில் படைத்தளபதியாய் விளங்கியவர். வடக்கே வாதாபியில் நடந்த சண்டையில் இரண்டாம் புலிகேசி ஆகிய மேலைச் சாளுக்கிய மன்னனைத் தோற்கடித்தவர். வெற்றியின் அடையாளமாக விநாயகர் சிலையினை வாதாபி நகரத்திலிருந்து எடுத்து வந்து தன் சொந்த ஊராகிய திருச்செங்காட்டங்குடியில் கோயில் எழுப்பிப் பிரதிட்டை செய்தவர். இத்தலத்தினைப் பாடியுள்ள திருஞானசம்பந்தர் சிறுத்தொண்டரின் பத்திச் சிறப்பினைப் பாராட்டியுள்ள பாங்கினை முன் கண்டோம். இவர்க்குப் பரஞ்சோதியார் என்பது இயற்பெயர் என்பர் சேக்கிழார். எனவே, அரசியலைத்துறந்து ஆன்மீகத்துறைக்கு வந்த அருளாளருள் சிறுத்தொண்டரும் ஒருவர் ஆவர்.

## 7. புகழ்த்துணை நாயனார்

இவர் அரசிற்கரைப்புத்தூரில் தோன்றிய அந்தணர். சிவாகம முறைப்படி வழிபாடு புரிந்தவர். பஞ்சம் காரணமாகப் பசிநோயுற்றும் தளராது இறைபணி ஆற்றியவர். ஒருநாள் வலிமை குன்றியதால் கைசோர்ந்து திருமஞ்சனக் குடம் இறைவன் திருமுடிமேல் விழத் தாமும் தரையில் வீழ்ந்தார். அவர் தளர்ச்சி நீங்கவும் பசி அகலவும் திருவருளால் படிக்காசு பெற்றவர். வளம் பெற்ற பின்னும் தொடர்ந்து சிவபூசை புரிந்து வீடுபெற்றவர். திருஞானசம்பந்தர்,

''அலந்த அடியான் அற்றைக்கு அன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே''
(2-63-7)

என்று இவ்வடியாரை 'அலந்த அடியான்' எனப் போற்றுதல் காணலாம். சுந்தரர் தேவாரத்தில்,

''அகத்தடிமை செய்யும் அந்தணன் தான்
அரிசிற்புனற் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும்நும்
முடிமேல் விழுத்திட்டு நடுங்குதலும்
வகுத்தவனுக்கு நித்தற் படியும்

வரும்என்றொரு் காசினை நின்றநன்றிப்
**புகழ்த்துணை** கைப்புகச் செய்துகந்தீர்'
பொழிலார்திருப் புத்தூர்ப் புனிதனிரே'' (7-9-6)

எனவரும் பாடலில் விரிவாகப் புகழ்த்துணை நாயனாரின் வரலாறு புகலப் பெற்றுள்ளது.

## 8. நின்றசீர் நெடுமாறன்

இவன் பாண்டிய வேந்தன். சோழநாட்டில் நெல்வேலி என்ற இடத்தில் நடந்த போரில் வடபுல வேந்தரைத் தோற்றோடச் செய்த ஆற்றல் படைத்தவன். முதலில் சமணனாக இருந்து பின்னர்த் திருஞானசம்பந்தரால் சைவம் சார்ந்தவன். மங்கையர்க்கரசியாரின் கணவன். இவ்வம்மையார் அழைப்பின் பேரில் மதுரை மாநகர் வந்த சம்பந்தர், தாம் தங்கியிருந்த திருமடத்திற்குச் சமணர் இட்ட தீ அந்நாட்டுக்குத் தலைவனாகிய பாண்டியனைப் போய்ச் சேரும்படி ஒருபதிகம் பாடினார் (3-51). இதனுள் பத்திமன் தென்னன் (2)' பட்டிமன் தென்னன் (4), மண்ணியல் தமிழ்ப் பாண்டியன் (5) பஞ்சவன் தென்னவன் பாண்டியன் (6). தென்னன் பாண்டியன் (7), பார்த்திபன் தென்னன் பாண்டியன் (8) என்று இவ்வேந்தனைச் சம்பந்தர் குறித்துள்ளார். பின்னர், அவன் திருந்தும் நிலைகண்டு திருநீற்றுப்பதிகம் பாடி அவ்வேந்தனுற்ற வெப்பு நோயைப் போக்கினார். இப்பதிகத்தில் தென்னன் என்று இவ்வேந்தனைச் சம்பந்தர் சுட்டியுள்ளார்.

''தேற்றித் தென்னன் உடலுற்ற தீப்பிணி யாயினதீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர்தாமே''
(2-66-11)

என வரும் பாடல் காணத்தக்கது. இப்பாண்டியன் நெல்வேலிப் போரில் வென்றவன். இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப் பெற்ற இலக்கியம் **பாண்டிக் கோவை.** இக்கோவைக்குரிய பாடல்கள் பல இறையனார் களவியல் உரையில் மேற்கோள் காட்டப் பெறுதலின், இவ்வுரை கி.பி. 7ஆம் நூற்றாண்டில் இறுதி வடிவம் எய்திற்று என்பர் ஆராய்ச்சி அறிஞர்.

## 9. மங்கையர்க்கரசியார்

பாண்டிய நாட்டில் சமணம் மறைந்து சைவம் தழைக்கக் காரணமாக விளங்கிய இவ்வம்மையார் மணிமுடிச்சோழனின்

மகளார். நின்றசீர் நெடுமாறன் ஆகிய தன் கணவனைச் சிவநெறி நிற்கச் செய்தவர். இவ்வம்மையாரின் சிவப்பற்றினை திருஆலவாய் பதிகத்தில் திருஞானசம்பந்தர் உருகிப் பாடியுள்ளார் (3-120). இப்பதிகத்தில்,

''மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநாயகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே''

எனவரும் முதற் பாடல் மங்கையர்க்கரசியாரின் மாண்பினைப் புலப்படுத்தும். சமண, பௌத்த சமயங்களில் பெண்களுக்கு வீடுபேறில்லை என்றனர். எனின் இச்சைவப் பெண்மணி தன் கணவனுடன் வீடுபெற்ற திறத்தினைத் திருமுறை உணர்த்துகின்றது. தம் பெயருக்கேற்பவே இவ்வம்மையார் மங்கையர் திலகமாகப் போற்றப் பெறுகிறார்.

## 10. குலச்சிறை நாயனார்

இவர் பாண்டி நாட்டில் மணமேற்குடியில் தோன்றியவர், நின்றசீர் நெடுமாறனின் தலைமை அமைச்சராகத் தொண்டாற்றியவர். சிவப்பணியும் அடியார் பணியும் ஒருங்கே புரிந்தவர். பாண்டிமாதேவியார் மேற்கொண்ட தொண்டிற்கு உறுதுணையாய் மெய்த்தொண்டராக விளங்கியவர். திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டிற்கு வருகை புரிந்து சமணாதிக்கம் நீங்க உதவியவர். இவர் சிறப்பினை,

''வெற்றவே யடியார் அடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் தனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்'' (3-120-2)

''கணங்களாய் வரினும் தமியராய் வரினும்
அடியவர் தங்களைக் கண்டால்

குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவும்
கோபுரம் சூழ்மணிக் கோயில்'' (3-120-4)

என்று திருஞானசம்பந்தர் போற்றிப் பாடியுள்ளார்.

## 11. திருநீலகண்ட யாழ்ப்பாணர்

இவர் எருக்கத்தம்புலியூரில் பாணர் குடியில் தோன்றியவர். தம் மனைவியார் மதங்க சூளாமணியாருடன் தலந்தொறும் சென்று இறைவன் புகழினை யாழிசைத்துப் பாடிப் பரவியவர். திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்களை அங்ஙனம் யாழில் வாசித்துத் திருவருள் பெற்றவர், இவர் திறத்தினை.

''தாரம் உய்த்தது பாணர்க்கு அருளொடே''

''பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்
கோணலிளம் பிறைச் சென்னிக் கோளிலிஎம்
பெருமானே'' (1-62-9)

என்று திருஞானசம்பந்தர் போற்றியுள்ளார்.

சமுதாயத்தில் தாழ்ந்ததாக எண்ணப் பெற்ற குடியில் தோன்றினும் சிவ புண்ணியத்தால் மேலாம் தகுதியைப் பெறுதல் இயலும் என்பதற்கு இவர் வரலாறு ஒரு சான்றாக உள்ளது.

## 12. திருநீலநக்கர்

இவர் காவிரி நாட்டுச் சாத்தமங்கையில் மறையவர் குலத்தில் தோன்றியவர். சிவபூசை, அடியார் பூசையிற் சிறந்து விளங்கியவர். ஒருநாள் அவர் ஊரில் கோயில் கொண்டுள்ள அயவந்தியீசரை வழிபட்டுக் கொண்டிருக்கும் வேளையில், சிலந்தியொன்று அவ்விறைவன் திருமேனியில் விழுந்தது, உடனிருந்த மனைவியார் வாயினால் ஊதி அச்சிலந்தியை அகற்ற முற்பட்டார். அவர் செயலினைப் பொறாத நீலநக்கர் அவரை வெறுத்து ஆலயத்தில் விடுத்து வீடு சென்றார். கனவில் இறைவன் காட்சி தந்து அவர் மனைவியார் ஊதிய இடம்தவிரத் திருமேனியில் எங்கும் சிலந்தியின் கொப்புளம் உள்ளதென்பதை உணர்த்தி மகிழச் செய்து மனைவியுடன் கூடி வாழச் செய்தார். திருஞானசம்பந்தர்,

''கடிமணம் மங்கி நாளும் கமழும் பொழிற் சாத்த
மங்கை
அடிகள் நக்கன் பரவ அயவந்தி அமர்ந்தவனே''
(3-58-2)

''நிறையினார் நீல நக்கன் நெடுமா நகரென்று
தொண்டர்
அறையுமூர் சாத்த மங்கை அயவந்தி'' (3-58-11)

என்று இந்நாயனாரைப் போற்றியுள்ளார். இவர் சம்பந்தரின் உடன்காலத்தில் வாழ்ந்த அருளாளர்களில் ஒருவர் ஆவர்.

## 13. முருகநாயனார்

இவரும் திருஞானசம்பந்தரின் சமகாலத்தவர். திருப்புகலூரில் அந்தணர் மரபில் தோன்றியவர். பல்வகை மலர்மாலைகளை அவ்வூர் வர்த்தமானீச்சரர்க்குச் சூட்டி திருவைந்தெழுத்தை ஓதி வழிபட்டவர். திருஞானசம்பந்தரை வரவேற்று தம் மடத்தில் தங்கச் செய்து உபசரித்துப் போற்றியவர். இவர் தம் பத்தித் திறத்தினை,

''தொண்டர் தண்கயம் மூழ்கித் துணையலும்
சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய்
கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு
கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சரத்
தாரே'' (2-92-3)

''......பூம்புகலூரில்,
மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதும்
செய்முடிமேல்
வாச மாமலர் உடையார் வர்த்தமா னீச்சரத்
தாரே'' (2-92-3)

என்று வியந்து போற்றினர் திருஞானசம்பந்தர். அப்பர் பெருமான் வீடு பெற்ற தலமாகிய திருப்புகலூரில் முருக நாயனார்க்குத் தனித் திருவுருவம் அமைக்கப் பெற்றிருத்தல் இங்குக் குறிப்பிடத் தக்கது.

## 14. அமர்நீதி நாயனார்

இவர் பழையாறை என்னும் சோழர் தலைநகரில் வணிகர் குலத்தில் வந்தவர். சிவனடியார்க்குக் கோவணமும் கீளுடையும் வழங்கியவர். திருவிழா நாட்களில் அடியார்க்கு அமுது படைத்தற் பொருட்டுத் திருநல்லூரில் திருமடம் கட்டியவர். அடியார் வேடத்தில் வந்த ஆண்டவனால் கோவண உடையினை அடைக்கலப் பொருளாகப் பெற்று, அது மறையவே அதற்கு ஒப்பத் தன்னையே தராசுத் தட்டில் நிறுத்தி அடிமைத் திறத்தை நிலைநாட்டவே, அம்மையப்பரின் பேரருள் பெற்றவர். இவர் தொண்டினைத் திருஞானசம்பந்தர்

''கொடிறனார் யாதும் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டு கூத்தாடும்
படிறனார் போலும்'' (3-121-1)

என்று குறிப்பாகச் சுட்டியுள்ளார். திருநாவுக்கரசர்,

''நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கோர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை உரைக்குமன்றோ இவ் வகலிடமே'' (4-97-7)

என்று அமர்நீதி நாயனாரின் அன்புத் திறனைப் பாராட்டிப் பரவினர்.

## 15. அப்பூதி அடிகள்

இவர் திங்கள் ஊரில் தோன்றியவர். அந்தணர். சிவபூசை, அடியார் பூசை புரிந்தவர். அப்பர் அடிகளிடத்தில் அளவற்ற அன்பு பூண்டவர். அவர் திருநாமத்தைச் சொல்லியே உய்தி பெற்றவர். இவர்தம் பத்திச் சிறப்பினை,

''அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் (4-12-10)

என வரும் திருப்பாடலில் அப்பர் போற்றியுள்ளார். மணிமேகலையில் பூதி அந்தணன் சுட்டப் பெறுவதால் (13.16,101), அக்காலத்தில் அந்தணர்கள் அப்பூதி என்று பெயர் வைத்துக் கொண்டமை அறியப்படும். பூதி என்ற சொல் திருநீற்றைக் குறிக்கும். எனவே, திருநீற்றுப் பொலிவுடன் விளங்கிய அந்தணர் அப்பூதி என்பதும் பொருத்தமாக எண்ணத்தக்கது.

## 16. திருஞானசம்பந்தர்

சமகாலத்தவராயினும் திருஞானசம்பந்தரைப் பெயர் சுட்டாமல் வேறு வகையினால் திருநாவுக்கரசர் குறித்துள்ளார். திருமறைக்காட்டில் நீண்ட காலம் அடைத்திருந்த கோயிற் கதவினைத் திறக்கப் பாடிய அப்பர், ஒரு பாட்டினால் அதனை அடைக்கப் பாடிய திருஞானசம்பந்தரின் பாடலாற்றலை வியந்து,

''திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாமூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே''
(4-50-8)

என்று போற்றுதல் காணத்தக்கது.

ஞானபோனகராகிய சம்பந்தர் தம் தந்தை வேள்வி செய்தற்கு வேண்டிய ஆயிரம் பொற்காசுகளையும் திருவாடுதுறை அரனை வேண்டிப் பெற்றனர். இந்நிகழ்ச்சியை,

''காயிரும் பொழில்கள் சூழ்ந்த **கழுமல வூரர்க்கு**
அம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய
னாரே'' (4-56-1)

என்று அப்பரடிகள் குறித்துள்ளனர். திருஞானசம்பந்தர் பிறந்த பதிப்பெயரினை ஒட்டியே ''கழுமல வூரர்'' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தனர். பூந்துருத்தி நம்பி காட நம்பி,

''எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன் தன்னையும்
ஆட்கொண்டருளி'' (9-19-4)

என்று திருஞானசம்பந்தரைப் பரவுதல் காணத்தக்கது.

## 17. சாக்கிய நாயனார்

இவர் திருச்சங்கை மங்கை என்ற ஊரில் வேளாளர் குடியில் பிறந்தவர். காஞ்சி நகர் சென்று பௌத்தச் சான்றோரிடம் உபதேசம் பெற்று அந்நெறி நின்றவர். பின்னர், திருவருள் கூட்டச் சைவம் சார்ந்தவர். மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமையே மெய்ப்பொருள் எனக் கடைப்பிடித்து, பௌத்த வேடத்தைக் களையாமல் சிவலிங்கத் திருமேனியை வழிபட்டு வந்தார். அன்புப் பெருக்கினால் அவர் எறிந்த கற்சல்லியையும் பூவாக ஏற்று இறைவனால் அருள்புரியப் பெற்றவர். இவர்தம் பத்திச் சிறப்பினை,

''கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணும் சாக்கியனார்
நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாள
வைத்தார்'' (4-49-6)

''புத்தன் மறவா தோடி,
எறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்'' (6-52-8)

எனவரும் அப்பரின் அருட்பாடல்கள் புலப்படுத்தும். காஞ்சி மாநகரம் பௌத்தநெறியின் கேந்திரத் தலமாகத் திகழ்ந்தமைக்கு மணிமேகலை சான்றாதல் நோக்கத் தக்கது.

## 18. எட்டடியார்

திருத்தொண்டத் தொகையில் அடியார் வரலாற்றைப் பொறித்து வைத்த சுந்தரர்,

''நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தன்
நாவினுக் கரையன் நாளைப் போவானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லன் என்றிவர்கள்
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழல் அடைந்தேன்
பொற்றிரள் மணிக்கமலங்கள் மலரும்
பொய்கைசூழ் திருப்புன் கூருளானே'' (7-55-4)

என்று எட்டடியார்களைத் தனியெடுத்துப் போற்றுதல் காணத் தக்கது. இவ்வருளாளர்கள் நெஞ்சறிய எக்குற்றமும் புரிந்திலர். புறநிலையில் பார்க்குமிடத்து அவர் செயல் குற்றம்போல்

தோன்றலாம். வாதில் தோற்றச் சமண்ரைப் பாண்டியன் கழுவேற்றியதைத் தடுக்காமல் இருந்தமை சம்பந்தர்க்குக் குற்றமாகச் கூறப்படலாம். பிறவிச் சைவராகிய நாவுக்கரசர் அனாதையான நிலையில் புறச்சமயம் புகுந்தமையும் நாளைப் போவாராகிய நந்தனார் திருக்கோயிலுக்குள் புக முயன்றதும், சூதராகிய மூர்க்க நாயனார் வட்டாடியதும், சாக்கியர் இலிங்கத் திருமேனியைக் கல்லால் எறிந்ததும், எச்சிலாகிய வாய்நூலினால் இலிங்கத்தின்மேல் சருகு விழாதபடி சிலந்தி வலை பின்னியதும், கண்ணப்பர் எச்சில்நீரை இறைவன்மேல் உமிழ்ந்து செருப்புக்காலினை முடிமேல் வைத்ததும், தன் தலை மயிரினால் கணம்புல்லர் திருக்கோவிலில் விளக்கெரித்ததும் குற்றங்களாகப் பிறரால் கொள்ளப்பெறும். எனின், அவற்றைக் குணமாகக் கொண்டு அந்நாயன்மார்களுக்கு அருள் பாலித்த பெருங்கருணைக்கடல் இறைவன் என்பதை உணர்ந்து அவன் திருவடியில் தாமும் சரண் புகுவதாகச் சுந்தரர் பாடியிருத்தல் எண்ணி இன்புறத்தக்கது. இப்பாடலிற் சுட்டப்பெற்ற திருநாளைப்போவாரை,

''அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவு ளாரே''
(6-95-10)

எனவரும் பாடலடிகளில் அப்பரடிகள் குறிப்பாகச் சுட்டினார் என்று எண்ணுதற்கு இடம் உண்டு. நம்பியாண்டார் நம்பி,

''புலையடித் தொண்டனைப் பூசுரன் ஆக்கிப்
பொருகயற்கண்
மலைமடப் பாவைக்கு மாநடம் ஆடும் மணியை''
(11-34-37)

என்று திருஞானசம்பந்தரின் அருஞ்செயல் ஒன்றினைக் குறித்துள்ளார். இப்பாடலில் **புலையடித் தொண்டன்** என்று சுட்டப் பெற்றவர் நந்தனார் என்றும் அவரை அந்தணனாகச் சம்பந்தர் உயர்த்தி இறையருட்பேற்றிற்கு ஆற்றுப்படுத்தினார் என்றும் எண்ணும் வகையில் கருத்தோட்டம் அமைந்துள்ளது. எனின், நந்தனாரைத் தவிர மற்றொருவர் அக்குடியில் பூசுரன் நிலைக்குச் சம்பந்தர் காலத்தில் உயர்ந்ததாகத் தெரியவில்லை. தில்லை

வாழ் அந்தணர்கள், ''ஐயரே'' என்று அழைத்த சிறப்புக் குரியவர் நந்தனாரே ஆவர் என்பது பெரியபுராணத்தினால் அறியப் பெறும் (18.30) திருவிசைப்பாவில் கணம்புல்லர் (9.19.2), திருநாவுக்கரசர் (9.19.3), சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரர் (9.,19.5) ஆகிய நாயன்மார்கள் போற்றப் பெறுதல் சுட்டத் தக்கது.

இதுகாறும் எழுதியவாற்றால், தோத்திரங்களாக அமைந் திலங்கும் திருமுறைகளில் நாயன்மார்களின் சரித்திரக்கருத்துக்கள் பற்பல பாடற் பொருளாக இடம்பெற்றுள்ள திறம் தெளிவாகப் புலனாகும். எனவே, இவர்கள் வரலாற்று நாயகர்கள் என்பது உறுதி. இவர்களும் தோத்திரங்களில் வைத்துப் போற்றற் குரியவர்கள் என்ற உண்மை மேற்காட்டிய திருமுறைப்பாடற் பகுதிகளினால் தெளியலாம்,

செம்பொருள் துணிபாகிய சைவசித்தாந்த உண்மைகளை விரிவாகவும் விளக்கமாகவும் புலப்படுத்தற் பொருட்டு எழுந்த சாத்திரத் திருமுறை திருமந்திரம் என்று முன்னர்க் குறித் துள்ளோம். எனினும் தோத்திரங்களை அருளிச்செய்த பெரி யோர்களும் சாத்திரக் கருத்துக்களைப் போதிய அளவு பொறித் துள்ளனர், அவற்றுள் சிலவற்றை இவண் காண்போம்.

## தோத்திரத்தில் சாத்திரம்

திருமுறை ஆசிரியர்கள் சிவபரம்பொருளின் மட்டிலாப் புகழினைப் பண்சுமந்த பாடல்களில் இசைப்பதையே குறிக் கோளாகக் கொண்டவர்கள். அடியார் வரலாறு கூறுவதோ, மெய்ப்பொருட் கருத்துக்களைக் கூறுவதோ அவர்தம் முதன்மை நோக்கம் அன்று. எனினும் மாந்தர்க்குப் பயன்படும் என்ற எண்ணத்தால் தோத்திரங்களின் ஊடே சாத்திரச் சிந்தனை களைக் குறித்தள்ளனர். அப்பர் பெருமான்,

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே'' (6-78-5)

என்று சுட்டுதல் நோக்கத்தக்கது. தோத்திரங்களினால் புகழப் பெறுபவரும் சாத்திரங்களினால் ஆராய்ந்து உணர்த்தப் பெறு பவரும் இறைவனே என்பது அவர்தம் உள்ளக் கருத்தாகும். இறைவன் அன்பினாலும் அறிவினாலும் போற்றத்தக்கவன் என்பதே சமயக்குரவர்களின் கொள்கை,

திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கை என்னும் பதிகத்தில் சிவபரத்துவம் பேசப் பெற்றுள்ளது. இப்

பதிகம் தோத்திரத்தில் ஒரு சாத்திரமாகத் திகழ்வது. அடிப் படையான மெய்ப்பொருள் கருத்துக்களை உரைப்பது. பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் இயல்பினை முதுகுன்றப் பதிகத்தில் மொழிந்துள்ளார், பாசங்களால் கட்டப்பட்டிருத்த லின் உயிருக்குப் பசு என்பது பெயர். ஆன்மாவை அனாதி காலமே பிணித்திருக்கும் ஆணவ இருளைப் போக்கி ஆனந்தப் பேற்றினை அளிக்கும் பொருட்டுத் தலைவனாகிய பசுபதி நிமித்த காரணமாக நின்று, மாயை என்னும் முதற்பொருளிலிருந்து உடல், உறுப்பு, உலகு, நுகர்ச்சிப் பொருள்களைச் சக்தியைத் துணைக் காரணமாகச் கொண்டு தருவித்து அருள்கிறான். உயிர் முன்னை வினையினை நுகர்ந்து வேதனைக் கட்டினின்றும் விடு பட்டுப் பேரின்பப் பேற்றினை எய்துதற்கு முதல்வன் திருவருள் முன்னிற்கும். இப்பொருளமைதி பொருந்த,

''விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனைஒண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்'' (1-12-3)

எனவரும் பாடற்பகுதி அமைந்துள்ளது.

உயிர் வருக்கம் அனைத்திற்கும் முதல்வன் என்ற முறையில் பரம்பொருளைப் பசுபதி என்று கூறுதல் சைவசித்தாந்த மரபு. இம்மரபினை. ''பசுபதி யதன்மிசை வரு பசுபதி'' (1.22.5) எனவரும் அடியில் காணகாம்.

திருவாசகத்தில் சைவசித்தாந்த நுண்பொருள் பல இடங் களில் பகரப் பெற்றுள்ளது. இறைவன் உயிர்களின் பொருட்டுப் புரியும் முத்தொழில் (7.12), ஐந்தொழில் (7,20) என்பன சுட்டப்பெற்றன. மும்மலம் (51.9), ஐம்மலம் (6.29), இருவினை ஒப்பு (30.1) முதலியவை பற்றிய குறிப்புக்களை இடமறிந்து வாதவூரடிகள் வழங்கியுள்ளார். ஆன்ம தத்துவங்கள் இருபத்தைந்தினையும்,

''ஒன்றொன்றொ டொன்றும் ஒருநான்கொ டைந்தும்
இருமூன்றொ டேழும் உடனாய்
அன்றின்றொ டென்றும் அறிவான வர்க்கும்
அறியாமை நின்ற அரனார்'' (2-88-4)

எனவரும் பாடலில் சம்பந்தர் தொகுத்துக் கூறியுள்ளார். இவை மூலப்பகுதி, புத்தி, அகங்காரம். மனம்,செவி, மெய், கண், வாய், மூக்கு, வாக்கு, பாதம், பாணி. பாயுரு, உபத்தம், ஒலி, ஊறு, ஒளி, சுவை, நாற்றம், வான், வளி, தீ, நீர், நிலம் என்பனவாம்.

இவ்விருப்பத்தைந்து தத்துவங்களின் உதவியால் இறைவனை உணர இயலாது என்பது சம்பந்தர் திருவுள்ளம். இங்ஙனம் எண்ணும்முறை சாங்கியத்தரிசனத்துள் காணப்படுவது.[2] அப்பரடிகளும் ''ஐயஞ்சின் அப்புறத்தானும் ஆரூரமர்ந்த அம்மானே'' (4.4.10) என்று தத்துவங்கடந்த பரம்பொருளைச் சுட்டுதல் காணலாம்.

சாங்கியர் கூறிய இருபத்தைந்து தத்துவங்களும் பிரகிருதி மாயையினின்றும் இறைவனால் படைக்கப்பெற்றவை என்பது சித்தாந்தத் துணிபு. அவற்றிற்கு மேலும் தத்துவங்கள் உள்ளன என்று கண்டவர்கள் சித்தாந்திகள். மிசிரமாயையினின்றும் தோற்றுவிக்கப்பெற்ற காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், அசுத்தமாயை என்பன ஏழும்: சுத்தமாயையினின்றும் தோற்றுவிக்கப்பெற்ற நாதம், விந்து, சாதாக்கியம், மகேசுவரம், சுத்தவித்தை என்பன ஐந்தும் சைவ சித்தாந்த நெறியில் மட்டுமே பேசப்பெறுவன. முன்னைக் கூறிய இருபத்தைந்துடன் இவற்றையும் கூட்ட முப்பத்தாறு தத்துவங்கள் உண்டு. அன்றியும் 60 தாத்துவிகங்கமும் சித்தாந்தத்தில் சொல்லப் பெறுவன.[3] இவற்றையும் சேர்த்து 96 தத்துவங்கள் என்று கூறும் மரபினை,

''துருத்தியாங் குரம்பை தன்னில் **தொண்ணூற்றங்**
**கறுவர்** நின்று
விருத்திதான் தருக வென்று வேதனை பலவும் செய்ய
வருத்தியால் வல்ல வாறு வந்துவந் தடைய நின்ற
அருத்தியார்க் கன்பர் போலும் அதிகைவீ ரட்ட
னாரே'' (4-25-4)

''**முப்பதும் முப்பத் தாறும் முப்பதும்** இடு குரம்பை
அப்பர்போல் ஐவர் வந்து அதுதருக இதுவிடு என்று
ஒப்பவே நலிய லுற்றால் உய்யுமா றறிய மாட்டேன்
செப்பமே திகழும் மேனித் திருப்புக லூரனீரே''
(4-54-3)

---

2. i. தமிழும் தத்துவமும், ப. 190-193
   ii. பரிபாடலின் காலம், ப. 23-26

3. Saiva Siddhanta is Expounded in the Sivajnana Siddhiyar and its Six Commentaries, p. 164.

''**எண்பதும் பத்தும் ஆறும்** என்னுளே இருந்துமன்னிக்
கண்பழக் கொன்று மின்றிக் கலக்கநான்
அலக்கழிந்தேன்
செண்பகம் திகழும் புன்னை செழுந்திரள் குரவம்
வேங்கை
நண்புசெய் சோலை சூழ்ந்த நனிபள்ளி அடிகளாரே''
(4-70-3)

எனவரும் அப்பரடிகள் பாடல்களினால் தெளியலாம். தத்துவக் கூட்டங்களினால் பிறவிக்கு வித்தாகும் வினைகளில் சுழன்று துன்புறும் உயிர், வினைச்சுழற்சியின் நீங்கிப் பிறவாப் பேரின்பம் பெறுதற்குரிய சாதனங்களை மேற்கொண்டு, உய்திபெறும் திறத்தினைத் திருமுறைப் பாசுரங்கள் தெளிவுறுத்துகின்றன.

இறைவன் உயிர்களிடம் கொண்ட தொடர்பினை மூவகை யாகக் கூறுவர். ஒன்றாய், உடனாய், வேறாய் விளங்கி உயிர்க்கு உபகாரம் புரிதல் இறைவனின் திருவருட் செயலாகும். இப் பெற்றியை,

''ஈறாய்முதல் **ஒன்றாய்**இரு பெண்ஆண்குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தானாய்
**வேறாய் உடன் ஆனான்** இடம் வீழிம் மிழலையே''
(1-11-2)

என்று திருஞானசம்பந்தர் அறிவுறுத்திக் கூறியுள்ளார். இப் பாடலில் மூவகை நிலை தவிர வேறு சில கருத்துக்களும் மொழியப் பெற்றுள்ளன. மகாசங்கார காலத்தில் உலகத் துயிர்கள் எல்லாம் தன்னிடம் ஒடுங்கவும் தாவர சங்கமம் ஆகிய உலகப் பொருள்கள் யாவற்றுக்கும் தானே இறுதியாய் இருக்கும் பரத்துவநிலை 'ஈறாய்' என்று சுட்டப்பெற்றது. எண்ணலங் காரம் தோன்ற இப்பாடல் மெய்ப்பொருள் உண்மைகளைக் கூறுகிறது, அவனே உயிர்களின் மல நீக்கத்தின் பொருட்டு உலகினை மீண்டும் படைத்தற்கு நிமித்த காரண முதல்வனாய் விளங்குகிறான். அட்டமூர்த்தமாய்த் திகழ்தலின் பெண், ஆண் ஆகிய இரண்டும், சத்துவம், இராசதம், தாமசம் ஆகிய குணம் மூன்றும், அறிவு விளக்கமாகவுள்ள மறைகள் நான்கும், வான் முதலிய பூதங்கள் ஐந்தும், சுவைகள் ஆறும், இசைகள் ஏழும், திசைகள் எட்டும் தானாகக் காட்சி தருகிறான். இத்தகைய

இறைவன் உலகுயிர்களுடன் கலந்திருப்பதால் ஒன்றாயும் பொருள்தன்மையால் வேறாயும், அவற்றை இயக்குதல் தன்மையால் உடனாயும் விளங்குகின்றான் என்ற சாத்திரக் கருத்தும் இப்பாடலில் அழகாகச் சொல்லப்பெற்றுள்ளது.

உலக ஒடுக்கம் பற்றிய செய்தியும் திருஞானசம்பந்தர் பாடலில் காணப்படுகிறது:

> ''இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு
> பெருவெளி யினலவி தர, வளி கெடவிய னிடைமுழு
> வதுகெட
> இருவர்க ளுடர்பொறை யொடுதிரி எழிலுரு
> வுடையவன் இனமலர்
> மருவிய அறுபதம் இசைமுரல் மறைவனம் அமர்தரு
> பரமனே'' (1-22-7)

இப்பாடலில் சொல்லப்பெறும் ஒடுக்கமுறை உபநிடதங்களில் காணப்படுவது ஆகும்.[4] நிலம் என்னும் தத்துவம் நீரில் ஒடுங்கவும், நீர் எரியிலும், எரி வளியிலும், வளி வானிலும் ஒடுங்கவும், மால்அயன் ஆகிய இருவரும் கெட அவர்தம் என்புகளை அணிந்து காயாரோகணராக ஈசன் விளங்குவன். ஒவ்வொரு தத்துவமும் தனக்கு முன் தோன்றிய தத்துவத்தில் ஒடுங்கும் என்பதே உபநிடதக் கருத்து. தத்துவங்கள், தெய்வங்கள் யாவற்றுக்கும் மூலமாகத் திகழ்பவன் பரம்பொருளாகிய சிவனே என்பதும் ஆதியும் அந்தமும் இல்லாத முழுமுதற் கடவுள் என்பதும் சித்தாந்தத் துணிபு. எல்லாப் பொருளும் ஒடுங்குதற்குக் காரணமாகத் திகழும் இறைவனை 'ஒடுங்கி' என்றே சிவஞானபோதம் முதல் நூற்பா மொழிந்துள்ளது. இத்தகைய சங்கார காரணனே உலகின் முழுமுதற் கடவுள். அப்பெருமான் உறையும் கோயில் கொண்ட இடம் மலர்த்தேனைப் பருக இசைபாடும் வண்டொலி மிகும் திருமறைக்காடாகும் என்பது இப்பாடற் கருத்தாகும்.

உபநிடதங்களில் கூறப்படும் தத்துவங்களின் தோற்ற ஒடுக்கமுறையும் சாங்கியம் முதலிய தரிசனங்களில் கூறப்படும் முறையும் வேறுபடுவன. ஆயினும் ஒராற்றால் அவற்றை அமைதிப்படுத்திக் கூறும் சிவஞான முனிவரின் ஆற்றலைச் சிவஞானபோதப் பேருரையிற் காணலாம்.

---

4. i. பரிபாடலின் காலம், ப. 15-16.
   ii. தமிழும் தத்துவமும், ப. 198-200

சைவ சித்தாந்தத்தினை ஆகமங்களின் சாரம் என்று அறிஞர்கள் கூறுவர். அதனால், '**ஆகமாந்தம்**' என்ற பெயரும் அதற்கு வழங்குவர். சித்தாந்த நெறிக்கு ஆகமம் சிறப்பு நூல், வேதம் பொதுநூல் என்று திருமந்திரம் கூறும். இவையனைத்தையும் உயிர்களின் ஈடேற்றத்தின் பொருட்டு ஈசனே ஆசான் மூர்த்தமாக நின்று அருளினான் என்பது ஆன்றோர் துணிபு. திருஞானசம்பந்தர்,

''தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூகம் மேவினான்''
(3-23-6)

என்று இயம்புதல் எண்ணத்தக்கது. அப்பரடிகள்,

''இணையிலா இடை மாமரு தில்லெழு
பணையில் ஆகமம் சொல்லும்தன் பாங்கிக்கே''
(5-15-4)

என்று திருவிடைமருதூரில் மருதமரத்தின் அடியிலமர்ந்து ஈசன் உமையம்மைக்கு ஆகமங்களை உபதேசித்த செய்தியைக் குறித்துள்ளார். மாணிக்கவாசகர்,

''மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்''
(2-9-10)

''கேவேட ராகக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்து
உற்றஐம் முகங்களாற் பணித்து அருளியும்''
(2-17-20)

என்று மகேந்கூர மலையிலிருந்தும் ஆகமங்களை ஈசன் உபதேசித்தருளிய செய்தியைக் குறித்துள்ளார். இம்மலை ஆந்திரப் பகுதியில் உள்ளதென்றும் கடல் கொண்ட தென்னகத்தில் இருந்ததென்றும் அறிஞர்கள் கருதினர். எனின், பால்வீட்லி என்னும் அமெரிக்க நாட்டு இந்தியவியலறிஞர் தென்கிழக் காசியாவில் இம்மலை இருத்தலையும் அதனை மாணிக்கவாசகர் பாடியுள்ள பாங்கினையும் தக்க சான்றுகளினால் தெளிவுறுத்திக்

கூறியுள்ளார்.[5] ஆதலின், சித்தாந்தச் செந்நெறி தமிழர்கள் பண்டைக்காலம் முதலே பரவியிருந்த தென்கிழக்காசியப் பகுதியிலும் வழக்கில் இருந்தமை உய்த்துணரப்படும்.

சுந்தரர் ஆகமங்களை பற்றிக் குறித்துள்ளார். திருக்கானப் பேர் தேவாரத்தில்,

''அண்டனை அண்டர்தமக்கு ஆகமநூல் மொழியும்
ஆதியை மேதகுசீ ரோதியை'' (7-84-8)

என்று இசைத்தல் எண்ணத்தக்கது. உலகப் பயணத்தை முடித்துக் கொண்டு சுந்தரர் வான்வழி ஏகுங்கால், சுரவொலி, ஆகம ஒலி, தோத்திர ஒலி, வேத ஒலி விண்ணெல்லாம் வந்து எதிர்ந்திசைப்பச் சென்றதாகக் குறித்துள்ளார் (7-100-8).

வேதங்கள் தேடியும் அறியப்படாத பரம்பொருள் ஆகமங் களுக்கு அணுக்களாய் விளங்குகிறான். இப்பெற்றியை,

''வேதங்கள்,
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே''
(1-34.5)

''ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க'' (1-4)

எனவரும் திருவாசகம் தெளிவுறுத்தக் காணலாம். எனவேதான் இறைவனை, **''ஆகமச் செல்வனார்''** என்று திருஞானசம்பந்தர் போற்றினார் (8-57-10). இப்போது கருநாடக மாநிலத்தில் விளங்கும் திருக்கோகரணத்தலத்தில் சிவாகமுறைப்படி வழிபாடு நடைபெற்ற திறத்தையும் இவர் குறித்துள்ளார் (3-79-6). பட்டினத்தார் பாடலில் சிவாகமம் என்ற குறிப்புத் தெளிவாகக் காணப்படுகிறது. (11-27, 22-42).

உபநிடதங்களிலும் சைவசித்தாந்த நுண்பொருள் பொதிந் திருத்தலைத் திருமுறை சுட்டுதல் நோக்கத்தக்கது. வேதத்தின் முற்பகுதி கரும காண்டம் என்றும் இப்பகுதி பல்வகைக் காமியங் களை எதிர்பார்த்துப் புரியும் வேள்விச் செயல்களை விளக்குவது என்றும் கூறுவர். வேதத்தின் அந்தமாகத் திகழும் உபநிடதங் களை ஞானகாண்டம் என்றும், இறை, உயிர், உலகு பற்றிய

---

5. The kings of The Mountain - An Indian Contribution to State craft In Southeast Asia, PP. 1.4,

சிந்தனைகளை இப்பகுதி விரித்து ஆராய்வது என்றும் அறிஞர்கள் தெளிவுறுத்தியுள்ளனர், வேதாந்தம் என்ற சொல் உபநிடதத்தினைக் குறிக்கும். சைவசித்தாந்தத்திற்கு மூலமாய் அமைந்த நூல்களில் உபநிடதம் அடங்கும். திருஞானசம்பந்தர்,

> ''வேதாந்தம்,
> பண்ணு நன்பொருள் பயந்தவர் பருமதிற்
> சிரபுரத்தார்'' (2-102-1)

> ''உண்ணிலா ஆவியாய் ஓங்குதன் தன்மையை
> விண்ணிலார் அறிகிலா வேத, வேதாந்தனார்''
> (3-35-4)

என்று உபநிடதங்களை உணர்த்தியருளிய ஈசனின் திருவருட் சிறப்பினைக் குறித்துள்ளார். வேதாந்தத்தினைச் **'சுருதி சிரவுரை'** என்றும் சுட்டியுள்ளார் (3-67-1). சாந்தோக்கியம் பிரகதாரண்யம், கேனோபநிடதம், தைத்திரியம் முதலிய உபநிடதங்களில் சித்தாந்தக் கருத்துக்கள் நிரம்பவுள்ளன என்ற உண்மையினைச் சிவஞானமுனிவரின் பேருரைகளின்வழி அறியலாம். மேலும்

> ''வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறனிங்குத்
> தெரிக்க லுற்றாம்''

என்று இருமொழிப் பெரும்புலமைமிக்க உமாபதி சிவம் சிவப்பிரகாசத்தின் பாயிரப் பகுதியில் (7) உரைத்தலும் இங்கு நோக்கத்தக்கது.

மலவயப்பட்ட நெஞ்சத்தின் இயல்பினைத் திருநாவுக்கரசர் சித்தாந்த நெறிநின்று விளக்கிக் கூறியுள்ளார். ஒரு பொருளைப் பற்றுதலும், பின் விடுதலும், மீண்டும் பற்றுதலும் ஆகிய இத்தொடர் நிகழ்ச்சிகளை நெஞ்சத்தின் வழியே மலப்பிணிப்புண்ட ஆன்மா நிகழ்த்துதற்கு **'உறுகயிறு ஊசலை'** உவமை கூறினார். தளை எனப்படும் கயிறு அறுபடும்போது கீழேவிழும் ஊசற் பலகைக்கு நிலமே ஆதரவாக அமைகிறது. சிவஞானபோதத்தில்,

> ''ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாம்''[6]

என்று சுட்டப்பெறும் சித்தாந்தச் சிந்தனைக்கு மூலமாக,

---

6. சிவஞான போதம் 8-ஆம் நூற்பா, நான்காம் அதிகரணம், ப. 111.

''உறுகயி றூசல் போல ஒன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவும் நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானேன் அதிகைவீ ரட்டனீரே''

(4-26-6)

எனவரும் அப்பரின் பாடல் அமைந்துள்ளது. தளைகள் நீங்கிய ஆன்மா பிறவிச் சுழற்சியினின்றும் விடுபட்டு ஆண்டவனின் சீபாதத்தை அணையும் என்ற பேருண்மையினை இப்பாடல் புலப்படுத்துகிறது.

மலமாசு நீங்கிய சீவன்முத்தர்கள் பரமே பார்த்திருப்பார், ஆதலின் உலகியல் அவர்களை வாதியாது. கவலையற்று இறை யின்பத்தில் திளைக்கும் ஞானிகள்.

''எங்கெழில்என் ஞாயிறுஎளியோம் அல்லோம்''

(6-95-2)

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்''

(6-98-1)

''எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்''

(8-7-19)

''யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்''

(8-5-30)

என்றும் அசைவற்றிருப்பர். அணைந்தோர் தன்மையினை விளக்கும் அருணந்திசிவனார்,

''எண்ணும்இக லோகத்தே முத்திபெறும் இவன்தான்
எங்கெழில்என் ஞாயிறெமக் கென்றுமுறை வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயம்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பான்''

(சிவ, சித்தி. நூ. 8 அதி. 2-31)

''எங்கும்யாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்அடி யார்அடியார் அடியோம் என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே''

( ,, நூ. 12, அதி. 1-1)

என்று திருமுறைகளின் சாரத்தைப் பிழிந்துரைத்தல் எண்ணி இன்புறத்தக்கது.

திருவருட்பேற்றிற்குரிய சாதனங்களாகிய திருவைந்தெழுத்து, திருநீறு முதலியவற்றின் ஆற்றலையும் பலனையும் திருமுறைகள் போதிய அளவில் புலப்படுத்தியுள்ளன. நமச்சிவாயத் திருப்பதிகங்கள் மூவரும் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர் அருளிச் செய்துள்ள திருநீற்றுப் பதிகம் பற்றி முன்னரே சுட்டப் பெற்றது. மாணிக்கவாசகர், திருவைந்தெழுத்தினை ஓதியே திருவாசகத்தின் முதற்பாடலாகஉள்ள சிவபுராணத்தைத் தொடங்கினார். இவர். ''ஆனநீற்றுக் கவசம்'' என்று திருநீற்றைப் போற்றினர், (8-46-1) திருமூலர் பஞ்சாக்கரச் சிறப்பினைப் பாரித்துப் பேசியவர். ''கங்காளன் பூசும் கவசத் திருநீறு'' (10-1666) என்பது திருமந்திரம்,. ஏனைய திருமுறைகளிலும் திருவைந்தெழுத்தும் திருநீறும் போற்றப் பெறுதல் காணத்தக்கது.

பதினோராம் திருமுறையிலும் சித்தாந்தச் செம்பொருள் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளது. பட்டினத்தார் பாடல்களில் சைவமெய்ப்பொருள் மிகுதியாகக் காணப்படுகிறது திருக்கழுமல மும்மணிக் கோவையில்,

''கைவலம் நெல்லியங் கனியது போலச்
**சைவசித் தாந்தத் தெய்வ ஆகமத்தை**
வரன்முறை பகர்ந்த திருமலர் வாய'' (13-3-5)

எனவரும் பகுதி எண்ணற்பாலது,

எனவே, தோத்திரங்களாக அமைந்துள்ள திருமுறைகளில் சித்தாந்தச் சாத்திரக் கருத்துக்கள் போதிய அளவில் பொறிக்கப் பெற்றுள்ளன என்பது புலனாகும். ஆகமம், உபநிடதம், திருமுறைகள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் மெய்கண்ட சாத்திரங்கள் தோன்றியுள்ளன. பன்னிரு திருமுறைகளின் சாரமாகச் சிவஞானபோதத்தின் பன்னிரு சூத்திரங்களையும் கருதும் மரபும் சித்தாந்த ஆராய்ச்சியாளரிடம் காணப்படுகிறது.

இனி, சைவசித்தாந்தத்தை விளக்கமாகப் புகட்டுதற்கு எழுந்த திருமந்திரமாகிய சாத்திரத் திருமுறையில் தோத்திரமும் சரித்திரமும் விரவிவரும் குறிப்புக்கள் சிலவற்றை நோக்குவோம்.

**சாத்திரத்தில் தோத்திரம்**

சைவ ஆகமங்களின் சாரமாகத் திகழும் திருமந்திரத்தில்தான் **சைவசித்தாந்தம்** என்ற குறியீடு முதன்முதல் காணப்படுகிறது (1421). இதனைத் தமிழ்ச் சாத்திரம் என்றும் சுட்டியுள்ளார்(87)

பதி, பசு, பாசம் பற்றிய விளக்கங்கள், நால்வகை நெறிகள், சத்திநிபாதம், இருவினை ஒப்பு, மலபரிபாகம் முதலிய சித்தாந்தக் கருத்துக்கள் விளக்கப் பெறுகின்றன. யோக நூலாதலின் அந்நெறிக்குரிய சிறந்த செய்திகள் பற்பல திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ளன. சாத்தநெறிக்குரிய குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. இந்நூலில் வேதாந்தவிளக்கம் மொழியப்பெறுதல் நோக்கத்தக்கது. எனினும் மிகுதியான பாடல்கள் சைவசித்தாந்தச் செம்பொருளை விளக்குதலின், திருமந்திரத்தினை முதல் தமிழாகம நூல் என்று சான்றோர் போற்றுவர். இந்நூலில் இடைச் செருகலாகப் பாடல்கள் சிலவும் விரவியுள்ளன.

இந்நூலின் தொடக்கத்தில், 'ஐந்து கரத்தனை' எனத் தொடங்கும் விநாயக வணக்கப் பாடல் காணப்படுகிறது. சேக்கிழார் கருத்தின்படி; ''ஒன்றவன் தானே' என்ற தொடக்கப்பாடலே திருமூலர் முதன்முதல் பாடியது என்று ஆராய்ச்சியாளர் கருதுவர். பாயிரப்பகுதியில், '**கடவுள் வாழ்த்து**' என்ற தலைப்பில் இடம் பெறும் ஐம்பது பாடல்களும் தோத்திரங்களாகக் கொள்ளத்தகுவன. இறைவனின் சொரூப இலக்கணம், தடத்த இலக்கணங்களைக் கூறி, பத்தித் திறத்தையும், வழிபாட்டின் பயனையும் தெளிவுறுத்திச் சிறந்த துதிப்பாடல்களாகத் திகழ்வன. இப்பகுதியில்,

''ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாடொறும்
பக்கநின் றார்அறியாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே'' (3)

''போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே''

(44)

எனவரும் பாடல்கள் எண்ணத்தகுவன. அமரர், அசுரர், மனிதர் மற்றும் உள்ள சீவராசிகள் அனைத்திற்கும் முழு முதலாக விளங்கும் பரம்பொருளைப் போற்றிப்புகழும் பத்திச் சிறப்பினை இரண்டாவது பாடல் சுட்டுகிறது. இப்பகுதியில் இறுதியில் இடம்பெறும்,

''சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்று
ஆடுவன் ஆடி அமரர் பிரான்என்று
நாடுவன் நானின் றறிவது தானே'' (50)

என்ற பாடல் சிறந்த பத்தரிடம் தோன்றும் மெய்ப்பாடுகளைச் சிறப்பாகப் புலப்படுத்துவது. இப்பாடலின் பொருண்மை,

''சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்று
ஊடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்''
(8-8-17)

எனவரும் திருவாசகத்தில் விளக்கமும் தெளிவும் பெறுதல் எண்ணி இன்புறத்தக்கது.

திருமந்திரத்தின் ஒன்பதாம் தந்திரத்தில் **'தோத்திரம்'** என்ற தலைப்பில் பல பாடல்கள் காணப்படுகின்றன. ஏனைய திருமுறைத் தோத்திரங்களினின்றும் இவை தனித்து நிற்பன. இப்பாடல்கள் இறையியல்பினைப் பெரிதும் பேசுவன. இப் பகுதியில்

''ஆளும் மலர்ப்பாதம் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்கும் குருசில்ன்
வாளும் மனத்தொடு வைத்தொழிந் தேனே'' (2995)

எனவரும் பாடல், வழிபாட்டின் பயனைப் புலப்படுத்தக் காணலாம்.

இதுகாறும் திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ள தோத்திரப் பாடல்கள் பற்றிய சில கருத்துக்களைக் கண்டோம். இனி, சரித்திரக் குறிப்புக்கள் சிலவற்றை நோக்குவோம்.

சிறந்த சிவமுனிவராகிய அகத்தியரைப் பற்றிய குறிப்புத் திருமந்திரத்தில் காணப்படுகிறது. (337, 338). சண்டீசர் மணலால் இலிங்கம் எழுப்பி ஆனைந்தினால் வழிபட்டு, தடையாய் நின்ற தாதையின் தாளைத் தடிந்து சிவபுண்ணியத் தினால் சிவபிரானால் கொன்றைமாலை சூட்டப்பெற்றுப் பதம்பெற்ற நிகழ்ச்சியைத் திருமூலர் குறித்துள்ளார்.

''உறுவது அறிதண்டி ஒண்மணல் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே'' (351)

இப்பாடலினால், அறுபத்துமூவரில் ஒருவராகப் போற்றப்பெறும் தண்டி நாயனார் கி.பி. 5-ஆம் நூற்றாண்டினராகக் கருதப் பெறும் திருமூலரின் காலத்திற்கும் முற்பட்டவர் என்பது புலனாகும். திருமந்திரத்தில் சண்டி என்ற சொல் தண்டி என்று வழங்குதல் காணலாம். அப்பர் பாடல் ஒன்றிலும் இங்ஙனம் இந்நாயனார் சுட்டப் பெற்றார் (4-48-4). தகரம் சகரமாக வருதல் இயல்பு. 'வைத்து' என்ற சொல் திருவாசகத்தில் 'வைச்சு' (5-96) என்றும் 'அத்தன்' என்றசொல் அச்சன் (5-29) என்றும் வழங்கக் காணலாம். எனின் சகரம், தகரமாக ஒலி மாற்றம் பெறுதல் சண்டி என்ற சொல் தண்டி என்று வருதலால் அறியப்படும். இங்ஙனம் ஒலிமாற்றம் பெறுதலை ''Hyper urbanization'' அல்லது ''Over Correction'' என்று மொழியிய லார் கூறுவர். சண்டியாகிய தண்டியும், திருவாரூரில் தோன்றிய தண்டி அடிகளும் வேறு வேறு நாயன்மார்கள் என்பது நினைவிற் கொள்ளுதற்கு உரியது, முன்பே அருளாசிரியர்களாகிய நால்வரும் சண்டீசரைப் போற்றிப் பாடியுள்ள பாங்கினைக் கண்டோம்.

**குருபாரம்பரியம்** கூறும் பகுதியில் மிகப்பழைய காலத்தில் வாழ்ந்த சிவனடியார்கள் பலரைத் திருமூலர் குறித்துள்ளார் (67-69). இவர்களைத் தனியடியாராகச் சுந்தரர் எண்ண வில்லை. என்றாலும் தொன்மைமிக்க இவ்வடியார்களைத் தொகையடியார் வரிசையில் சுந்தரர் குறித்துள்ளார் என்று எண்ணுதல் சாலும். சமயக்குரவர் பாடல்களில் சுட்டப்பெறும் 'பழவடியார்' இவர்கள் ஆவர்.

இனி அடியார்களின் சரித்திரமாகத் திகழும் பெரிய புராணத்தில் தோத்திரமும் சாத்திரமும் இடம்பெற்றுள்ள பாங்கினைச் சிறிது காண்போம்,

## சரித்திரத்தில் தோத்திரம்

திருமுறைகளைப் பலகால் பயின்று அருளாளர்களின் திருவுள்ளக் குறிப்பினைப் புரிந்துகொண்டு நாயன்மார்களின் வரலாற்றினைக் காப்பியச் சுவைபடப் பாடிய தெய்வப் புலமைச் சேக்கிழார் பல பாடல்களைத் தோத்திரமாகப் படைத்துள்ளார். பெரியபுராணத்தின் முதற்பாடலே தோத்திரமாக அமைவது:

''உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்''

இறைவனின் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூவகைத் திருமேனிகளின் இயல்பினையும் முறையே முதல் மூன்றடிகளில் மொழிந்து, ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானின் தாமரை மலர்போலத் திகழும் திருவடிகளை வாயார வாழ்த்தித் தலையாரவணங்கித் திருத்தொண்டர்வரலாற்றினைப் பாடத் தொடங்கினார். 'உலகெலாம்' என்ற தொடக்கச் சொல் இறைவனே எடுத்துக்கொடுத்த சிறப்புக்குரியது என்பர் சைவநன் மக்கள். இப்பாடல் ஒற்றெழுத்து நீக்கி அடிதொறும் பன்னீரெழுத்துக்களினால் இயன்ற கட்டளை அடிகள் நான்கினால் அமைந்திலங்குவது. அப்பரடிகள் அருளிச் செய்த ஐந்தாம் திருமுறையில் அடங்கியுள்ள திருக்குறுந் தொகை யாப்புடன் இப்பாடலின் யாப்பும் ஒத்திசைத்தல் உணரத்தக்கது.

பெரியபுராணத்தில் தோத்திரமாக அமையும் மற்றொரு பாடலையும் இங்குக் காண்போம். தில்லைவாழந்தணர் புராணத்தில்,

''கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோலம் நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமம் ஆகும் திருச்சிற் றம்பலத்
துள்நின்று
பொற்புடன் நடம்செய்கின்ற பூங்கழல் போற்றி!
போற்றி!'' (2-1-2)

எனவரும் போற்றிப்பாடல் சிறந்த தோத்திரமாகத் திகழ்கிறது.

வரலாற்றாசிரியராகிய சேக்கிழார் சிறந்த தோத்திரக் கவிஞராகவும் விளங்குகிறார். மேலும், சைவசித்தாந்தச் செம்பொருளை முழுமையாகப் பயின்று, அடியார் வரலாறுகளை விரித்துரைக்கும் நிகழ்ச்சிப் போக்கில் ஆங்காங்கே போதிய சித்தாந்தச் சிந்தனைகளைப் பொறித்துச் சென்றுள்ளார். திருத்தொண்டர் புராணத்தில் காணப்பெறும் சித்தாந்தக் கருத்துக்கள் சிலவற்றைக் காண்போம்.

**சரித்திரத்தில் சாத்திரம்**

திருமூலரின் வரலாற்றினை விரித்துரைக்கும் சேக்கிழார் சைவ ஆகமங்களின் பொருண்மையினை நன்கு விளக்கியுள்ளார். சிவயோகியராக வந்த பெரியார் கூடுவிட்டுக் கூடுபாயும் உபாயத்தால் இறந்து கிடந்த இடையனாகிய மூலன் உடம்பில் புகுந்து ஆனிரைகளின் கலக்கத்தைத் தீர்க்க அவ்விடையன் மனைக்குச் சென்றபொழுது, அச்சிவயோகியரின் உடம்பினை ஈசன் மறைத்தருளினார், அதற்குரிய காரணத்தைச் சேக்கிழார்,

''தண்ணிலவார் சடையார்தாம் தந்தஆக
மப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால்
தமிழ்வகுப்பக்
கண்ணியஅத் திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறைந்த உணர்வுடையார் ஈசர்அருள்
எனவுணர்ந்தார்'' (30-23)

என்று தெளிவுறுத்திக் கூறியுள்ளார். திருமூலர் அருளிச் செய்த திருமுறையின் மாண்பினை,

''ஊனுடம்பிற் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோர்உய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை''
(30-26)

எனவரும் பாடலில் இசைத்துள்ளார். சைவ ஆகமங்கள் பலவும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு பாகங்களைக் கொண்டவை. இவற்றை ஞானம் முதலாகச் சேக்கிழார் எண்ணுதல் ஆகமத்தில் ஞானபாகம் முதன்மை வாய்ந்தது என்ற எண்ணத்தினாலாகும். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் உண்மையினை விளக்கி உய்தி பெறுதற்குரிய உபாயங்களை உரைக்கும் ஞானபாகத்தைப் பிங்கல முனிவர் மதித்து,

'ஆகமம் ஞானம்' என்று பொருள் கூறியிருத்தலும் இங்கு இயைபு நோக்கி எண்ணுதற்கு உரியது.[7]

காளத்தியப்பரைக் கண்டு வழிபடும் பொருட்டுச் செல்லும் கண்ணப்பர் மலை ஏறிச் சென்ற நிகழ்ச்சிக்குச் சித்தாந்தப் பொருண்மை தோன்றச் சேக்கிழார் கூறியுள்ள உவமை காணத் தக்கது. முப்பத்தாறு தத்துவங்களாகிய படிகளை ஏறிச்சென்று தத்துவாதீதமாகத் திகழும் பேரின்பப் பிழம்பாகிய பரம் பொருளை அடைதல் போல், காளத்தி மலையின் பல்வேறு படிகளையும் தாண்டிச் சென்று காளத்தியப்பரைக் காணப் புறப்பட்டார் என்று அமைத்துப் பாடியுள்ளார் :

''நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்கள் என்னும் பெருகுசோ பானம்ஏறி
**ஆணையாம் சிவத்தைச்** சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்''
(10-104)

இப்பாடலில், தாம் மலை ஏறிச் செல்லுவதற்கு முன்னால் தன் அன்பினை மலைத்தேவரைத் தரிசிக்கத் திண்ணனாகிய கண்ணப்பர் அனுப்பி வைத்தார் என்பது கருதற்பாலது. ஞானத்தினால் அடைதற்குரிய பரம்பொருளை அன்பினால் அடைதலை இப்பாடல் சுட்டுகிறது. எனின், சேக்கிழார் பெருமான்,

''ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம்
உண்டார்'' (28-843)

என்று திருஞானசம்பந்தரின் கொள்கையாக ஞானத்திற்கு அன்பு என்ற பொருள் உண்டு என்று விளக்கம் தந்திருப்பதை இங்கு எண்ணிப் பார்த்தல் வேண்டும். தன் முயற்சிகளுக்கு வழிகாட்டும் குருவாகத் திகழும் நாணன் என்ற நண்பனும் முன்னேவழிகாட்டிச் செல்வதாகக் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடலில், 'ஆணை' என்ற சொல் திருவருட் சத்தியைக் குறிப்பது. சிவஞான போதத்தின் இரண்டாம் சூத்திரத்திலும் இச்சொல் இப் பொருளில் பயிலப் பெறுதல் காணலாம். முப்பத்தாறு தத்துவங் களையும் கடப்பதற்குக் குருவருளும் திருவருளும் வேண்டும்

7. பிங்கல நிகண்டு, நூ. 2067, ப. 236.

என்பது இப்பாடல் உணர்த்தும் மெய்ப்பொருளாகும். திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில்,

''இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ''
(21-129)

எனவரும் பாடல் சித்தாந்தச் செம்பொருளை அணிநலம் தோன்ற அறிவுறுத்துதல் காணத்தக்கது. ஆணவம், கன்மம், மாயை என்கின்ற மூன்று மலங்கள் என்ற கல்லிற் கட்டப்பட்ட மக்கள் பிறவிக்கடலினின்றும் பிழைத்துக் கரையேறும்படி, திருவைந்தெழுத்தாகிய சாதனம் அருள்புரிதல் உறுதியாதலின், ஒற்றைக்கல்லில் கட்டப்பட்டுக் கடலில் சமணர்களால் போடப்பட்ட நாவுக்கரசரை அவ்வைந்தெழுத்தாகிய புணை கரை ஏற்றுதல் ஒரு வியப்போ என்று வினவுகிறார் சேக்கிழார்.

சாக்கிய நாயனார் புராணத்தில்,

''செய்வினையும் செய்வானும் அதன்பயனும்
கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்''
(34-5)

என்று இயம்பப்பெற்ற கருத்தினை அடியொற்றி,

''செய்வானும் செய்வினையும் சேர்பயனும்
சேர்ப்பவனும்
உய்வானும் உளன்என் றுணர்'' (52)

எனவரும் திருவருட்பயன் அமைந்துள்ளது. வினை முதலாகிய ஆன்மா, அதனால் புரியப்படும் செயல்கள், அச்செயல்களுக்குரிய விளைவுகள், அவற்றை உரியவர்களுக்குச் சேர்ப்பவனாகிய அற முதல்வனாகிய இறை என்ற மெய்ம்மை சைவசித்தாந்தத்திற்கே உரிய தனிப்பொருளாகும். பௌத்தம் முதலிய நெறிகளில் செய்வோன் இல்லை, செய்வினை உண்டு என்ற கருத்து உரைக்கப் பெறும். பௌத்தம், சமணம் முதலிய சமயங்களில் வினைதானே நுகர்ச்சியைத் தரும், அதனை உண்பிக்கும்

முதல்வன் வேண்டப்படான் என்றகருத்து இடம்பெற்றது. எனின், வினைப்பயன் சடம் ஆதலின், அது தனக்குரியனைச் சென்று சேரும் உணர்வு அற்றது. ஆதலின், எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைந்திருக்கும் பரம்பொருளாகிய முதல்வன் அவரவர்க்குரிய வினைநுகர்ச்சியை அறிந்து உண்பித்து மலநீக்கம் செய்து பக்குவம் பெற்றபின் பேரானந்தப் பெருவாழ்வினை வழங்கியருள்புரியும் பெற்றியைச் சித்தாந்தச் செந்நெறியே தெளிவாக எடுத்துரைப்பது. திருவள்ளுவரும், 'வகுத்தான் வகுத்த வகை' என்று சுட்டுதலும் இயைந்து எண்ணத்தகுவது. இறைவனை, ''Moral Governor'' என்று கொண்டவர்கள் சைவசித்தாந்திகள்.

மறையவர் வடிவில் வந்த இறையவரைப் பின்தொடர்ந்து செல்லும் சுந்தரரின் செயலினை,

''செல்லுநான் மறையோன் தன்பின்
திரிமுகக் காந்தம் சேர்ந்த
வல்லிரும் பணையு மாபோல்
வள்ளலும் கடிது சென்றான்'' (1-5-50)

என்று உவமைநலம் தோன்றப் பாடியுள்ளார் சேக்கிழார். காந்தம் இரும்பினை இழுத்தல் போல், இறைவனாகிய காந்தசக்தி இரும்பனைய சுந்தரரைக்கவர்ந்து இழுத்தது என்பதே இப்பாடற் கருத்தாகும். இக்கருத்தினைப் பின்பற்றி,

''அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர்
தாம்சென்றங்கு
அவ்வினையைக் காந்த பசாசம்போல்-அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு'' (2-2-11)

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பா அமைந்து நிற்றல் அறியத்தக்கது. இந்நூலின் விளக்கமாக எழுந்த சிவஞான சித்தியாரிலும்,

''சந்நிதி குணம தாகும்தான் என்போல் என்னின்
காந்தம்
முன்னிரும்பு என்றாய்........'' (4-2-8)

எனவரும் பாடலிலும் அருணந்திசிவம் சேக்கிழாரின் கருத்தினை எடுத்தாண்டனர் எனலாம்.

பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் புராணத்தில் இடம் பெற்றுள்ள சமணம், பௌத்தம் பற்றிய புறச்சமயக் கருத்துக்கள் சிவஞான சித்தியாரில் பரபக்கம் பகரும் பகுதிகளில் அருணந்தி சிவத்தால் போதிய அளவில் எடுத்துரைக்கப் பெற்றமை எண்ணத் தக்கது.

எனவே சரித்திரமாகிய திருத்தொண்டர் புராணத்தில் தோத்திரமும் சாத்திரமும் விரவி இடம்பெற்றுள்ள உண்மை புலனாகும்.

இதுகாறும் எழுதியவாற்றால், பன்னிரு திருமுறைகளையும் தோத்திரம், சாத்திரம், சரித்திரம் என்று பாகுபடுத்துதல் அவற்றில் பயின்றுள்ள பொருண்மை மிகுதி நோக்கியே பொருந்துவது என்பது தெளிவாகும். தோத்திரம் பாடிய அருளாளர்க்குச் சரித்திர அறிவும் சாத்திர ஞானமும் உண்டு என்பதும், அங்ஙனமே சாத்திரம் பாடிய திருமூலர்க்குத் தோத்திர உணர்வும் சரித்திர அறிவும் உண்டு என்பதும், திருத்தொண்டர்களின் சரித்திரத்தினைப் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலராகிய சேக்கிழார்க்குத் தோத்திர, சரித்திர ஞானம் நிரம்ப உண்டு என்பதும் எண்ணற்பாலன.

# திருமுறைச் செந்தமிழ்

திருமுறைகள் தமிழர்க்குத் திருமறைகளாக விளங்குகின்றன, இவற்றை அருளிச் செய்த ஞானிகள் தங்கள் தாய்மொழியாகிய தமிழில் தணியாத காதல் கொண்டவர்கள். தமிழில் பல்வகைத் திறங்களையும் உணர்ந்து சுவைத்து உணர்த்தியவர்கள். உலக மொழிகளில் பத்திமொழி என்று பாராட்டத்தக்க பாடல்களமைந்த மொழி தமிழே என்று அறிஞர்கள் இன்று ஆராய்ந்து முடிவு கட்டுதற்கு இவர்தம் அருளிச் செயல்களில் அமைந்துள்ள தமிழ்த் திறம் முதன்மைக் காரணமாக அமைந்தது. இறைவனே தமிழ்ப் பாடலைக் கேட்டு இரங்கி அன்பர் வழிபாட்டினை ஏற்றருள் புரிகிறான் என்ற கருத்தினைத் திருமுறைப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.

திருமுறையாசிரியர்கள் தமிழின் செம்மை, இசைமை, இனிமை, அருமை, வளமை, ஒண்மை, தன்மை, நன்மை முதலிய பல்வகைப் பண்புநயங்களையும் பாங்குறத் தெளிந்து அடை கொடுத்துத் தமிழினைப் போற்றிப் பல பாடல்களில் குறித்துள்ளனர். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன. பெரும்பாலும் திருக்கடைக்காப்புச் செய்யுள்களில் இத்தகைய தமிழ்த்திறம் சுட்டப் பெறுதல் காணலாம். மிகுதியாகத் தமிழின் அருமை பெருமைகளைப் பேசியவர் திருஞானசம்பந்தரும் சேக்கிழாரும் ஆவர். அடுத்த நிலையில் சுந்தரரும் நம்பியாண்டார் நம்பியும் உள்ளனர். மாணிக்கவாசகர் திருமூலர் முதலிய அருளாளர் சொற்களிலும் தமிழின் மாட்சி காணப்படுகிறது.

சமயக் குரவர்கள் பாடல்களில் குறிக்கப் பெற்றுள்ள தமிழ்த் திறம் பற்றிய தொடர்களில் ஒருசிலவற்றின் சிறப்புக்களை இங்குத் தொகுத்துக் காண்போம்.

## திருஞானசம்பந்தர் செந்தமிழ்த்திறம்

சங்கம் மருவிய காலத் தமிழகத்தில் களப்பிரர், முற்காலப் பல்லவர் ஆகிய அயலார் ஆட்சியில் பிராகிருதம், பாலி, வடமொழி ஆகிய அயல் மொழிகளே கூடுதலான செல்வாக்குப் பெற்றிருந் தன. அரசு ஆவணங்கள், கல்வெட்டுகளில் இம் மொழிகளே பயன்படுத்தப் பெற்றன. தமிழர்கள் தங்கள் கலைவளம், மொழி வளம், சமயம் ஆகியவற்றை இழந்து நின்ற நிலையில், மரபுச் செல்வத்தைக் காக்கும் நோக்கில் மக்கள் இயக்கமாகத் தோன் றிய பத்தி இயக்கத்தின் முன்னோடிகளாகிய திருஞானசம்பந் தரை உள்ளிட்டோர் ஊர் ஊராகச் சென்று பண்ணார்ந்த தமிழில் பாடி உரிமைப் போராட்டம் நிகழ்த்தி அயலார் பிடிப்பி னின்றும் நம் பண்பாட்டினை மீட்டுக் கொடுத்தனர்.

ஓதாது உணர்ந்தவர் என்று திருஞானசம்பந்தரைச் சேக் கிழார் போற்றியுள்ளார். இவர் அருளிய பாடல்களில் சங்க இலக்கியம், திருக்குறள் முதலிய பழைய தமிழ் இலக்கியப் பதிவு காணப்படுகிறது. மதுரையில் தமிழை வளர்த்தற் பொருட்டுப் பாண்டிய வேந்தரால் நிறுவப் பெற்றிருந்த சங்கம் பற்றிய செய்தியை,

> ''ஆங்கழகச் சுதைமாடக் கூடல்
> ஆலவா யின்கண் அமர்ந்த வாறே'' (1-7-2)

எனவரும் பாடலில் குறித்துள்ளார். சுதை வேலைப்பாடமைந்த நான்மாடக் கூடல் நகரில் அழகிய தமிழ்க் கழகம் அமைந் திருந்த திறத்தினைச் சம்பந்தர் அறிந்து பாடியுள்ளார். **சங்கம் என்ற வடசொல்லினால் சுட்டும் மரபினை மாற்றிக் கழகம் என்ற நல்ல தமிழ்ச் சொல்லினால் புலவர் பேரவையினைச் சம்பந்தர் சுட்டுதல் எண்ணற்பாலது.** திருக்குறள், கலித்தொகை முதலிய இலக்கியங்களில் கழகம் என்ற சொல் சூதர் பயிலும் இடத்தைச் சுட்டியது. இச்சொல் காலப்போக்கில் உயர் பொருட்பேறு அடைந்து நல்லோர்கள், சான்றோர்கள், பாவலர்கள் கூடிப் பைந்தமிழை ஆராயும் அறிவுப் பண்ணையைச் சுட்டும் நிலையினைத் தேவாரத்தில் காண் கிறோம். சம்பந்தர் தொடங்கி வைத்த மரபினைக் கம்பரும் பரஞ்சோதி முனிவரும் பின்பற்றியுள்ளனர். இராமாவ தாரத்தில்,

> 'கந்தனை அனையவர் **கலைதெரி கழகமும்**'
> (பால. 2-48)

என்று அயோத்தி மாநகரில் விளங்கிய புலவர் பேரவையினைக் கம்பர் சுட்டினார். திருவிளையாடற் புராணத்தில்,

'கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து'
(நாட்டு. 57)

என்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தினைப் பரஞ்சோதியார் சுட்டினார். வடமொழியைத் தெய்வமொழி என்று பேசிய காலத்தில் அருமைத் தமிழும் தெய்வமொழியே என்ற உண்மையினைத் திருமுறை ஆசிரியர்களும் பின்வந்த அருளாளர்களும் மறவாது குறித்துள்ளனர். எனவேதான் சிவபிரான், முருகன் முதலியோர் ஆராய்ந்த முதன்மை மொழி தமிழ் என்ற தொன்மச் செய்தி இறையனார் களவியலுரை முதலாகப் பல நூல்களில் பகரப் பெற்றுள்ளது. கி. பி. 8 ஆம் நூற்றாண்டினனும் சுந்தரரால் ''காடவர்கோன் கழற்சிங்கன்'' எனப் பாடப் பெற்றவனும் ஆகிய இராசசிம்ம பல்லவனின் அவைக்களப் புலவர் ஆகிய தண்டியாசிரியர் வடமொழியில் இயற்றியுள்ள **காவியா தரிசம்** என்ற அணி நூலுக்கு உரை வகுத்த தருண வாசஸ்பதி என்னும் சான்றோர் **சங்காதம்** என்ற இலக்கிய வகைக்குச் சங்க இலக்கியத்தை (—திரமிட சங்காதம்) சான்று கூறி இருத்தல் பத்தி இயக்கத்தின் சாதனைகளில் ஒன்றாகக் கருத இடம் உண்டு. சம்பந்தரின் தீவிர இயக்கப் பணியினால் சைவ சமயம் மட்டும் அன்றித் தமிழிலக்கியமும் வடமொழி வாணர்களாலும் மதிக்கத் தக்க பேறு பெற்றது எனலாம். ஆதிசங்கரர் ''**திராவிடசிசு**'' என்று சௌந்தரியலகிரியில் சம்பந்தரை மதித்துப் போற்றுதல் காணத்தக்கது. சுடக் குறைய இவர்காலத்தவராக எண்ணப் பெறும் **குமாரிலபட்டர்** தாம் எழுதியுள்ள **தந்திரவார்த்திகத்தில்**, தமிழ்ச்சொற்கள் வடமொழியில் வழங்குவதற்குரிய விதிகளாகக் கூறியிருத்தலும் இங்குக் கருதத்தக்கது.

சங்கம் என்ற சொல் தொகுதியாக இருத்தல், கூடியிருத்தல் என்ற பொருண்மையினைத் தருவதால் '**தொகை**' என்ற தமிழ்ச் சொல்லினாலும் சம்பந்தர் தமிழ்ச் சங்கத்துச் சுட்டியுள்ளார்.

''அற்றன்றி அந்தண் **மதுரைத் தொகை** யாக்கினானும்''
(312-11)

எனவரும் பாடல் எண்ணத்தக்கது.

மறையவர் மரபில் வந்த திருஞானசம்பந்தர் தன்னை தமிழ் ஞானசம்பந்தர் என்று பெருமிதத்துடன் சொல்லிக் கொள்வதில் பெருமகிழ்ச்சி பெற்றவர். அன்றியும், ''நற்றமிழ்க்கு இன்துணை ஞானசம்பந்தன்'' (1-76-11) என்று பெருமிதம் தோன்ற பாடியவர். அவர்தம் திருக்கடைக் காப்புச் செய்யுள்களில் பொறிக்கப் பெற்றுள்ள தமிழின் பன்மாண் சிறப்புக்களை உணர்த்தும் ஒருசில தொடர்களை மட்டும் இங்குத் தொகுத்து நோக்குவோம்:

1. ஞானத்துயர் சம்பந்தன் **நலங்கொள் தமிழ்** 1-14-11

2. தலமல்கிய புனற்காழியுள் **தமிழ்ஞானசம்பந்தன்** 1-15 11

3. இசையமர் சுழுமல நகரிறை **தமிழ்விரக னதுரை** யியல்வல **இசைமலி தமிழ்** 1-22-11

4. நண்ணிய சீர்மலி காழி **நற்றமிழ்ஞான சம்பந்தன்** 1.39.11

5. ஞானசம்பந்தன **தின்தமிழ் பத்தும்** 1-56-11.

6. **தமிழின் நீர்மை** மேகித் தாளம் வீணை பண்ணி நல்ல... 1-73-8,

7. சம்பந்தன் ஆரா **அருந்தமிழ்** மாலை 1-89-11.

8. நல்லுரை ஞானசம்பந்தன் **ஞானத்தமிழ்** 1-117-11.

9. ஞானசம்பந்தன் **செந்தமிழ்** 138-11; 143-11.

10. சம்பந்தன்... உருவாரும் **ஒண்தமிழ்** மாலை 150-11.

11. முகம் அறிவார் **கலை முத்தமிழ்நூல்** 153-10.

12. பழுதிலிறை எழுதுமொழி **தமிழ்விரகன்** வழிமொழிகள் மொழிதகையவே 325-11.

13. எந்தையடி வந்தணுகு **சந்தமொடு செந்தமிழ்** இசைந்த புகலிப் பந்தனுரை 326-11.

14. பாரின்மலி கின்ற புகழ்நின்ற **தமிழ்ஞான சம்பந்தன்** உரைசெய் **சீரின்மலி செந்தமிழ்கள்** 333-11.

15. மண்ணிய புகலியுள் ஞான சம்பந்தன் **வண்டமிழ்** 343.11

16. சம்பந்தன் பாடிய **தண்டமிழ்** மாலை பத்தும் 365-11.

17. ஏறுபல்பொருள் **முத்தமிழ் விரகனே**...
நானுரைத்த **செந்தமிழ்** பத்துமே 373-11.

18. நல்லிசை யாளன் புல்லிசை கேளா **நற்றமிழ்**
**ஞானசம்பந்தன்** 379-11.

இன்னோரன்ன திருக்கடைக்காப்புக் குறிப்புக்கள் தமிழ்விரகராக திகழ்ந்த திருஞான சம்பந்தரின் தமிழ்ப் பற்றினைப் புலப்படுத்தப் போதிய சான்றுகள் ஆகும். **எழுதாக் கிளவியாகிய வடமொழி மறையினின்றும் வேறுபடுத்தி, தம் அருளிச் செயல்கள எழுதும் மறை என்று சுட்டிய பகுதிகள் நோக்கத்தக்கவை.** தாய்மொழி வழியே இறைவனைப் பாடுதல் வேண்டும், வழிபடுதல் வேண்டும் என்ற கொள்கைக்குத் திருமுறைகள் சான்றாகத் திகழ்கின்றன, சந்தமலி சம்பந்தரின் செந்தமிழில் அருந்தமிழ், இயல்வல இசைமலி தமிழ், நலங்கொள்தமிழ், நற்றமிழ், இன்தமிழ், ஞானத் தமிழ், வண்டமிழ், தண்டமிழ் எனப் பல்வகைச் சிறப்பும் பாங்கும் படைத்த பைந்தமிழாக அருமைத்தமிழ் அறிந்தும் உணர்ந்தும் போற்றப் பெறுதல் காணத்தக்கது. தமிழின் ஆற்றலும், அருமையும், அழகும், தெளிவும், இனிமையும், பெருமையும் திருஞானசம்பந்தரின் தொடர்களில் வெளிப்பட உணர்ந்து மகிழ்கிறோம்.

இனி, அப்பரடிகளின் பாடல்களில் காணப்பெறும் தமிழ் பற்றிய சில குறிப்புக்களைக் காண்போம்,

## அப்பர் அருந்தமிழ்

திருவதிகை வீரட்டானத்துஈசரைப் போற்றிப் பரவும் முதற் பதிகத்திலேயே அப்பர் பெருமான்.

**'தமிழோடு இசைபாடல்** மறந்தறியேன்' (4-1-6)

என்று பண்ணார்ந்த தமிழில் பரமன் புகழைப் பாடுதலே தன் பணியாகப் பொறித்துள்ளார். உருக்கம் மிக்க ஒண்தமிழ்ப் பாடல்கள் அப்பர் அருளிச் செயல்கள். திருக்கடைக் காப்புப் பாடுதல் இவர் வழக்கமன்று. நமச்சிவாயத் திருப்பதிகத்திற்கு மட்டும் இவர் பயன் கூறியிருப்பினும் தன் பெயரைச் சுட்ட வில்லை. ஒரு பாடலில் ''**செந்தமிழ்**'' (6-91-1) என்ற சொல் லாட்சி காணப்படுகிறது, செவ்விய தமிழின் சிறப்பினைச்

சுட்டும் இச்சொல் தொல்காப்பியர் காலத்திலிருந்தே பயிலப் பெற்று வருவது.

கி.பி. 6, 7-ஆம் நூற்றாண்டளவில் எழுத்துருப் பெற்ற இறையனார் களவியலுரையில் தலைச்சங்கத்தின் தலைமைப் புல்வர்களாகத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் குன்றம் எறிந்த குமரவேளும் குறிக்கப் பெற்றுள்ளனர். தருமி என்னும் அந்தணனின் பொருட்டுக் 'கொங்குதேர் வாழ்க்கை'' என்ற பாடலை இறைவன் அருளிச் செய்து பொற்கிழி பெறுதற்கு உதவிய செய்தி அப்பர் காலத்தில் நன்கு பரவியிருந்தது. இவ்வுண்மையினை,

''நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக்கு 'அருளி னோன்காண்''
(6-76-3)

எனவரும் அப்பர் பாடலால் அறியலாகும், குறுந்தொகையில் இப்பாடல் தொகுக்கப் பெற்றிருத்தல் சுட்டுதற்கு உரியது.

திருத்தாண்டகத்தில், இறைவன் எம்மொழிக்கும் உரியவன் என்ற பெருநோக்கினைக் குறித்துள்ளார். இத்திறத்தினை,

''முந்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்'' (6-23-9)

''ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'' (6-23-5)

எனவரும் திருத்தாண்டகப் பாடற்பகுதிகள் புலப்படுத்தக் காணலாம்.

இனி, நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்தில் காணப்பெறும் தமிழ்பற்றிய தனிச்சிறப்புக்களை நோக்குவோம்.

**சுந்தரர் செந்தமிழ்**

திருஞானசம்பந்தருக்கு அடுத்த நிலையில் மிகுதியான பண்களைப் பயின்றவர் சுந்தரர். தமிழிசையின் மாண்பினை உணர்ந்தவர். எனவேதான்,

''பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே''(7-24-5)

''பண்ணிடைத் தமிழ்ஒப்பாய்'' (7-29-6)

''பண்ணின்தமிழ் இசைப்பாடலின்'' (7-78-7)

''வண்தமிழ் வல்லவர்கள் ஏழிசை'' (7-83-6)

என்று தமிழ்ப்பண்ணின் மேன்மையினை உணர்ந்து போற்றினார். மக்களுக்கு உற்ற பஞ்சத்தைப் போக்கும் பொருட்டுத் திருவீழி மிழலை ஈசர் திருஞானசம்பந்தர்க்கும் திருநாவுக்கரசர்க்கும் பீடத்தில் பொற்காசு வைத்தருளிய நிகழ்ச்சிக்குச் சுந்தரர் ஒருகாரணம் கற்பித்துள்ளார். திருவீழிமிழலைப் பதிகத்தில்,

''தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோடிசை கேட்கும்
இச்சையால் காசு நித்தல் நல்கினீர்''
(7-88-8)

என்று சுந்தரர் சுட்டும் காரணம் சுவைபயப்பது. நான்மறை யாளர்கள் மிக்கிருக்கும் தலத்தில் அருந்தமிழிசை கேட்கும் பெருவிருப்பால் நாள்தோறும் பரிசுப் பொருளாகப் பொற் காசினைச் சம்பந்தர்க்கும் அப்பர்க்கும் ஈசன் வழங்கியபாங்கினை சுந்தரர் போற்றியுள்ளார்.

திருஞானசம்பந்தரின் பண்சுமந்த பாடல்களில் சுந்தரர்க்குப் பெருவிருப்பு. திருக்கோலக்காவில் கைத்தாளமிட்டுப் பரமன் புகழ் பாடிய புகலியர்கோன் ஆகிய சம்பந்தரின் பிஞ்சுக்கரங்கள் நைந்துவிடுமே என்று எண்ணிய ஈசன் திருவைந்தெழுத்துப் பொறித்த பொற்றாளம் ஈந்த அற்புதத்தைச் சுந்தரர் பாடி யுள்ளார். திருக்கோலக்கா பதிகத்தில்

''நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக்கு இரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை'' (7-62-8)

எனவரும் பாடல் எண்ணத்தக்கது. இப்பாடலில் தமிழ் என்ற சொல் வெறும்மொழியை மட்டும் சுட்டாது, தமிழ்க்கலை, நெறி, பண்பாடு அனைத்தையும் சுட்டுவதாய் அமைந்துள்ளது. பயிர், பறவை, விலங்கு முதலியவற்றைக் கூட வசப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது தமிழிசை என்பார்கள். அத்தகைய பண் படுத்தும் பண்ணார்ந்த பைந்தமிழைப் பாடிய பெருமைக்கு

உரியவர் திருஞானசம்பந்தர், அவருடைய தமிழிசைக்கு உருகிய பெருமான் பொற்றாளம் வழங்கினார்.

உயர்ந்த ஈசன் உயர்ந்த தங்கத்தினால் அமைந்த தாளத்தினைத் தந்தான். சிறிதேனும் செம்பு கலந்தால்தான் அதில் ஓசை வரும், நல்ல தங்கத்தில் ஓசை எழாது. எனினும், திருவருட் சத்தியாகிய அம்பிகை அத்தாளத்திற்கு ஓசை ஊட்டியதால், திருக்கோலக்காவில் கோயில் கொண்டுள்ள ஈசனின் இடப்பாகம் கொண்ட அம்பிகைக்கு **'ஓசை கொடுத்த நாயகி'** என்பது பெயராக வழங்கி வருகிறது.

திருஞானசம்பந்தர் பாடலைப் போலவே நல்லிசைத் தமிழ்ப் பாடல்களை அருளியவர் திருநாவுக்கரசர் என்பதைச் சுந்தரர் நன்றாக அறிந்தவர். எனவேதான், இவ்விருவர் பாடல் களையும் **'நற்றமிழ் மாலை'** (7-67-5) என்று போற்றினார்.

சம்பந்தரைப் போலவே சுந்தரரும் திருக்கடைக் காப்புச் செய்யுள்களில் தமிழின் அருமை, பெருமை, ஆற்றல்களை அறிந்து அடை கொடுத்துச் சிறப்பித்துப் பாடியுள்ள குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. தம்பதிகப் பாடல்களைச் **''சீருர் செந் தமிழ்கள்''** எனப் பகர்ந்தனர் (7-26-10). அவற்றுள், ஒருசில வற்றை இங்குத் தொகுத்து நோக்குவோம்:

1. ஆரூரன் உரைத்தன **நற்றமிழின்**
   மிகுமாலையோர் பத்திவை 7-3-10.

2. திருநாவல் ஆரூரன்,
   **நற்றமிழ்** இவை ஈரைந்தும் 7-61-11

3. நாவலூரன் வன்றொண்டன் **நற்றமிழ்** 7-88-10.

4. சந்தமிகு **தண்தமிழ்** மாலைகள் 7-4-10.

5. வன்றொண்டன் ஆர்வத்தால் உரைத்த
   **தண்டமிழ்** மலர் பத்தும் 7-70-10.

6. ஆரூரன் **அருந்தமிழ்** ஐந்தினோ டைந்து 7-9-11.

7. ஊரன் வன்தொண்டன் உள்ளத்தா லுகந்து
   அன்பினாற் சொன்ன **அருந்தமிழ்** ஐந்தோ டைந்தும்
   7-55-10.

8. நாவலாரூரன்,
உரிமையால் உரைசெய்த **ஒண்தமிழ்கள்** 7-40-11.

9. சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவன் ஊரன்
**ஒண்தமிழ்கள்** 7-52-10.

10. மன்னு நாவல் ஆரூரன் வன்தொண்டன்
ஒலிகொள் **இன்னிசைச் செந்தமிழ்** பத்தும் 7-67-11.

11. வன்தொண்டன் **ஒண்தமிழ்** மாலை 7-75-10

12. நாடிய **இன்தமிழால்** நாவல ஊரன்சொல்
பாடல்கள் பத்தும் 7-85-10

13. நாவல ஊரன் சொன்ன
ஏழிசை **இன்தமிழால்** இசைந்தேத்திய பத்தினையும்
7-100-10

இப்பகுதிகளினால் நற்றமிழ், தண்தமிழ், அருந்தமிழ், ஒண்தமிழ், செந்தமிழ், வண்தமிழ், இன்தமிழ் முதலிய அமுதச் சொற்களினால் அன்னைத் தமிழின் அருமை பெருமைகளைச் சுந்தரர் அறிந்து போற்றிய திறம் புலனாகும்.

சுந்தரர், தமிழில் பாடுவதுதான் உள்ளத்திற்குக் குளிர்ச்சி தரும் என்ற கொள்கையர். இக்கருத்திற்கு அடிப்படை சம்பந்தர் தேவாரத்தில் ''உளங் குளிர்ந்தபோ தெலாம் உகந்துகந்து பாடுவன்'' என்ற அடியில் காணப்படுகிறது. ஆரூரர், ''உளங்குளிர் தமிழ் மாலை'' (7.29,10) என்று தம் பாடல்களைக் குறித்தல் காணத்தக்கது. சேக்கிழார்,

''தம்பிரான் தோழரவர் தாம் மொழிந்த தமிழ்''
(1-5-203)

என்று சுந்தரரின் தமிழ்த்திறத்தைப் போற்றினார்.

மேற்சுட்டிய குறிப்புக்களினால் தமிழகத்தில் திருஞான சம்பந்தர் காலம் முதல் ஏற்பட்ட விழிப்புணர்வையும் மொழி எழுச்சியையும் உய்த்துணரலாம். சமண, பௌத்தப் புறச்சமயங்கள் முறையே பாகதம், பாலி முதலிய அயல் மொழிகளை

ஆதரித்து நின்ற காலத்தில் தாய்மொழியைக் காக்கும் பெரும் பொறுப்பினை ஏற்று வெற்றி பெற்றவர்கள் திருமுறையாசிரியர்கள் என்பது தெளிவு.

இனி, ஏனைய திருமுறைகளில் பொறிக்கப் பெற்றுள்ள தமிழ் பற்றிய குறிப்புக்களைச் சற்று உற்று நோக்குவோம்.

**எட்டாம் திருமுறையில்**

எட்டாம் திருமுறையாக எண்ணப்பெறும் திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார் ஆகிய இரு பனுவல்களிலும் மாணிக்கவாசகரின் செழுந்தமிழ்த் தெய்வமணம் கமழும் திறத்தினைப் பயில்வார் உணர்வர். பாண்டிய நாட்டின் அமைச்சராகத் திகழ்ந்த இவ்வருளாளர் சங்க இலக்கியத்திலும் திருக்குறள் முதலிய பழைய பனுவல் ஆகமங்களிலும் தோய்ந்து புலமை முற்றியவர். சங்கம் வைத்துத் தமிழாராய்ந்த மதுரை மாநகரைத் தலைநகராகக் கொண்ட வழுதியின் நாட்டினை,

**''தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை''**

*(8-10)*

என்று திருவாசகத்தில் போற்றும் பகுதி நோக்கத்தக்கது. உளங்குளிரச் செய்யும் உயரியல்பால் தண்தமிழ் என்று நம் மொழியைத் திருமுறையாசிரியர்கள் உணர்ந்து பாராட்டினர். வாதவூரடிகள் **தண்ணார்தமிழ்** என்று பாராட்டியதைப் போல், அம்மொழி செவ்விய மொழியாகச் சிறந்து விளங்கும் தென்னன் நாட்டினையும் **'தண்பாண்டி நாடு'** எனப் புகழ்தல் எண்ணத் தக்கது. சிறுபாணாற்றுப்படையில், ''**தமிழ்நிலை** பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை'' என்று தமிழ்த் தொடர்பினால் தண்மதுரை போற்றப்படுதல் இங்குக் கருதற் பாலது. திருச்சிற்றம்பலக்கோவையாரில்,

''சிறைவான் புனல்தில்லைச் சிற்றம் பலத்தும்என்
சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற்கூட லின்ஆய்ந்த
**ஒண்தீந்தமிழின்**
துறைவாய் நுழைந்தனையோ அன்றி ஏழிசைச்
சூழல் புக்கோ
இறைவா தடவரைத் தோட்குஎன் கொலாம் புகுந்து
எய்தியதே''

எனவரும் பாடலில் மணிவாசகப்பெருமான் சங்கத்தமிழின் மாண்பினைக் குறித்துள்ளார். தில்லைச்சிற்றம்பலத்திலும் மணிவாசகரின் சிந்தையிலும் உறைபவனாகிய சிவபிரான் வையைப் புனல் சூழ்ந்த கூடல்மாநகரில் புலவர் கூட்டத்தில் ஒருவராய் இருந்து ஆராய்ந்த சிறப்புக்குரிய நம் அன்னை மொழியை, **'ஒண்தீந்தமிழ்'** என்று அடிகளார் போற்றிப் புகழ்ந்த திறம் எண்ணி இன்புறத்தக்கது. ஒளி பொருந்திய தமிழ், தீவிய (இனிய) தமிழ் என்று பொருள் விரிதற்குரிய அருமை படைத்தது **''ஒண்தீந்தமிழ்''** என்ற தொடராட்சி. அடிகளார் தமிழின்துறை என்று நம்மொழிக்கே சிறப்பாக உரிமையுடைய அகம், புறம்என்ற பொருட் பாகுபாட்டினைச் சுட்டினார். தலைமகன் தமிழா ராய்ச்சியில் முனைந்து ஈடுபட்டு உடல் மெலிவுற்றானா? அன்றி முத்தமிழின் ஒரு கூறாகிய ஏழிசைச் சூழலில் தன்னை இழந்தமை யால் அயர்வுற்றானோ? என்று பாங்கன் வினவும் வகையில் அமைந்துள்ளது இப்பாடல். தன்னொத்த நங்கையின்பால் கொண்ட தணியாக் காதலே தோள் மெலிவிற்குக் காரணம் என்பதை எடுத்த எடுப்பில் பாங்கன் அறிந்திரான். ஆதலின் இங்ஙனம் பேசுவதாக மணிவாசகர் அமைத்துப் பாடியுள்ளார்.

### திருவிசைப்பாவில்

அருளாசிரியர்கள் ஒன்பதின்மரால் பாடப்பெற்ற திருவிசைப் பாவின் அமைப்பியல் தேவார அமைப்பியலை ஒருவாறு ஒத்துள்ளது. ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் இடம்பெறும் திருக்கடைக்காப்புப் பாடலில் தமிழ் பற்றிய குறிப்பு பெரும் பாலும் காணப்படுகிறது. ஒருசில குறிப்புக்களை இங்குச் சுட்டுதல் தகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் அருளிய பத்தி நலங்கனிந்த பதிகங்களைத் தமிழின் மேல்வரம்பாகக் கொண்ட சுந்தரரைப் போலவே திருவிசைப்பா ஆசிரியருள் ஒருவராகிய சேந்தனாரும் கொண்டுள்ளார். இவ்விருவர் பாசுரங்களையும் **''பழுத்த செந்தமிழ் மலர்''** என்று தாம் பாடிய திருவீழிமிழலைத்திருவிசைப்பாவில் இவர் போற்றியுள்ளார்(11). வண்ணம், வடிவம், வனப்பு, மணம், தேன் முதலியன பொருந்திக் காண்போரைக் கவரும் பொலிவுற்ற மலர்களைப் போல, முதற்குரவர் இருவர்தம் கனிந்த பாடல்கள் யாப்பு, அணிநலம், பொருட்சுவை, பத்திமை என்ற பாங்கினால் பயில்வாரைக் கவர்ந்து பரவசப்படுத்தும் பண்பின என்பதை **''பழுத்த செந்தமிழ் மலர்''** என்ற தொடர் புலப்படுத்துகிறது.

கருவூர்த்தேவர் தேவார ஆசிரியர் மூவரைப் போலவே தம் தமிழின் தரம் உணர்ந்து போற்றிப் புகன்றுள்ளார். பின்வருவன சுட்டத்தகும் தொடர்கள் :

1. ''அறிவுறு கருவூர்த்துறைவளர் **தீந்தமிழ் மாலை**'' (9-3-1-11)

2. ''**அமுதம் ஊறிய தமிழ்மாலை**'' (9-3-2-10)

3. ''**அமுது றழ் தீந்தமிழ்மாலை**'' (9-3-4-10)

4. ''கருவூரன் **தமிழ்மாலை**'' (9-3-5-11)

5. ''**பாவணத் தமிழ்கள்**'' (9-3-7-10)

6. ''**கரும்பனைய தீந்தமிழ்மாலை**'' (9-3-10-10)

இவற்றுள் '**தீந்தமிழ்**' என்ற அடைகொளுவிய மொழிக்குறிப்பு மாணிக்கவாசகர் குறித்துள்ள '**ஒண்தீந்தமிழ்**' என்ற குறியீட்டினை நினைவுறுத்துவது. அமிழ்தத்திற்கு இணையானது தமிழ். கரும்பு போல் இனிப்பது தமிழ் என்பது திருவிசைப்பா ஆசிரியர்களின் அனுபவம். ''**தமிழுக்கு அமுதென்று பேர்**'' என்று புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பாடுதல் இவண் எண்ணத்தக்கது. கருப்பஞ்சாறு போல் இனிமை தருவது தமிழ் என்ற மொழிச் சிறப்புக்கள் பாவேந்தர் பாடல்களிலும் மிகுதியாகச் சுட்டப்பெறுதல் இங்குக் குறிப்பிடத்தக்கது. திருமுறைக் காலத்திற்குப் பின்னர் மீண்டும் ஒரு தமிழியக்கம் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றி ஆங்கில ஆதிக்கம், வடமொழிப் பிடிப்பு ஆகியவற்றினின்றும் தமிழை மீட்பதற்குப் போராடிய பரிதிமாற்கலைஞர், மறைமலையடிகள், திரு. வி. க., பாவேந்தர், பாவாணர் என்ற தமிழ்ச் சான்றோர்களின் பெரும் பணி இயைபு கருதி எண்ணிப் பார்த்தற்கு உரியது.

திருவிசைப்பா ஆசிரியர், தம் பெயருடன் சார்த்தித் தமிழ்த் திறனைப் போற்றினர். இத்திருமுறையில்,

''**பூந்துருத்திக் காடன் தமிழ்மாலை பத்தும்**''
(9-4-2-10)

''**ஆரா இன்சொல் கண்டராதித்தன் அருந்தமிழ்மாலை**''
(9-5-1-10)

''அமுதவாலி சொன்ன **தமிழ்மாலைப்**
**பால்நேர் பாடல்பத்தும்**'' (9-7-3-11)

எனவரும் பாடற் பகுதிகள் எண்ணத்தக்கவை. தமிழகத்தில் பாடல் பெற்ற தலங்கள் பலவற்றைக் கற்றளிகளாக எடுக்கக் காரணமாக விளங்கியவரும், முதலாம் இராசராசனைச் சிவ நெறியிற் செல்லுமாறு வளர்த்தவரும் ஆகிய செம்பியன் மாதேவியின் கணவரே சிவஞான கண்டராதித்தர் ஆவர். இச்சோழ வேந்தன் தில்லைக்கோயிலைப் பாடிய திருவிசைப் பாவினை **'அருந்தமிழ் மாலை''** என்று சுட்டுதல் அறிந்தின்புறத் தக்கது. **'இன்தமிழ்'** என்ற வழக்கும் திருவிசைப்பாவில் இடம் பெற்றுள்ளது (9-7-4-10).

தமிழைப் போற்றும் பாங்கில் தேவார மரபினைத் திருவிசைப்பா அடியொற்றிச் சென்றுள்ள உண்மையினை மேற்சுட்டிய மேற்கோள் பகுதிகள் உறுதிப்படுத்துவன. பிற் காலச் சோழர்கள் காலத்தில் தமிழர் ஆட்சி நாவல நாட்டிலும், கடல் கடந்து கடாரம், மலேயா, சாவகம், இலங்கை முதலிய நாடுகளிலும் பரவியிருந்த வரலாற்றுச் சிறப்பும் திருவிசைப்பா குறிப்பாகச் சுட்டுகிறது. (9.16.3). எனவே, பெருமிதம் தோன்றத் திருவிசைப்பா ஆகியோர்கள் தமிழின் மாட்சியைப் பொறித்துள்ளனர் எனலாம்.

**திருமந்திரத்தில்**

பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தில் அருமைத் தமிழ் மொழியைப் பற்றிய அரிய செய்திகள் குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றைச் சுருக்கமாக இங்குக் காண்போம்.

திருமூலர் தமிழ், வடமொழி உள்ளிட்ட பதினெட்டு மொழிகளில் புலமை படைத்தவர். இம்மொழிகள் யாவும் நாவல நாடாகிய இந்தியாவிலும், ஈழம், தென்கிழக்காசியத் தீவுகள், சீனம் முதலிய நாடுகளிலும் பேசப்பெற்றவை. இம் மொழிகள் வழங்கிய நாட்டவர் தமிழகத்தாருடன் கலை, சமயம், வாணிபம் முதலிய தொடர்புகள் கொண்டு விளங்கினர் என்பது வரலாறு காட்டும் உண்மை. திருமந்திரத்தில்,

''பண்டித ராவார் பதினெட்டுப் பாடையும்
கண்டவர் கூறும் கருத்தறி வார்என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறம்சொன்ன வாறே'' (59)

எனவரும் பாடல் பதினெண் மொழிகளையும் பரம்பொருளே மக்களின் தரப்பிரிவிற்குத்தக வழங்கினார் என்று சுட்டுகின்றது. எனவே, மொழிகளில் உயர்வு, தாழ்வு கற்பிப்பதும் தேவபாடை, மனிதபாடை என்று பிரிப்பதும் திருமூலர்க்கு உடன்பாடில்லை என்பது புலனாகும். காஞ்சி மாநகரில் பதினெண் மொழிகள் பேசிய மாந்தர் வாழ்ந்தனர் என்ற செய்தியைச் சாத்தனார் மணிமேகலையில் குறித்துள்ளார் (28.221). பதினெண் மொழிகள் வழங்கும் நாடுகளை,

''சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக்குடகம்
கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம்
கலிங்கம் வங்கம்
கங்கம் மகதம் கடாரம் கவுடம் கடுங்குசலம்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே''

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. மொழிப்பொதுமை பேணிய திருமூலர் இம்மொழிகளில் சிறப்பாக விதந்து கூறப்பெறும் தமிழ், வடமொழி ஆகிய இருபெரும் மொழிகளையும் உமையம்மைக்கு ஈசனே புகட்டியதாகத் திருமூலர் சுட்டியுள்ளார்.

''ஆரியமும் தமிழும் உடனே சொல்லிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே'' (65)

என்பது திருமந்திரம், இவ்விரு மொழிகளாலும் மெய்ப்பொருளை உணர்த்தல். உணர்தல், முடியும் என்ற கருத்தினை,

''தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலும் ஆமே'' (66)

எனவரும் பாடலில் தெளிவுறுத்தியுள்ளார். பல்வகைக் கலைச் செல்வங்களும் அறிவுக்கூறுகளும் மெய்ஞ்ஞானமும் உணர்த்தும் பனுவல்களைப் படைத்தவை இவ்விரு மொழிகளும் என்பதால் திருமூலர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார்.

மெய்ப்பொருள் நூலினைத் **'தமிழ்ச் சாத்திரம்'** (87) என்று திருமூலர் குறித்தனர். திருமந்திரம் முதல் தமிழ் ஆகமம் என்பதைச் சேக்கிழார் சுட்டினார். சிவயோகம் பயின்று ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல்களைத் திருமூலர் வழங்கினார் என்று பெரியபுராணம் புகல்கிறது. எனவே திருமந்திரத்திற்குத் **'தமிழ் மூவாயிரம்'** என்ற பெயரினைச் சேக்கிழார் குறித்தனர்.

ஊன்றி நோக்கின், திருமந்திரத்திலேயே இதற்கு மூலம் காணப் படுகிறது. இந்நூலின் பாயிரத்தில்,

> ''மூலன் உரைசெய்த **மூவாயிரம்தமிழ்**'' (99)

எனவரும் பகுதி இங்கு எண்ணத்தக்கது. தன்னை இறைவன் படைத்தமையின் நோக்கமே ஆகமப் பொருண்மையினை அருந் தமிழில் சாரமாகப் பிழிந்து நன்கு உணர்த்துதற்குத்தான் என்று சுட்டியுள்ளார்;

> ''என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
> தன்னைநன் றாகத் **தமிழ்செய்யு மாறே**'' (81)

எனவே, திருமூலர் தான் எடுத்த பிறவியின் நோக்கத்தை நன்கறிந்து செயற்பட்டவர் என்பது தெளிவு. இப்பாடலில் **'தமிழ்செய்தல்'** எனவரும் தொடர் நோக்கத்தது. தமிழாகமம் பாடுதலை இத்தொடர் புலப்படுத்துதல் உணரத்தக்கது.

ஆதியாகிய இறைவனைத் தமிழால் வழிபடுவதைப் பெரிதும் விரும்பியுள்ளார் திருமூலர். எனவேதான்,

> ''செந்தமிழ் ஆதி தெளிந்து வழிபடு
> நந்தி இதனை நவம்உரைத் தானே'' (1089)

என்று நந்தியின் உரையாகத் தம் கருத்தினைச் சுட்டியுள்ளார். திருமூலர் காலத்தில் தமிழ் கூறும் நல்லுலகம் ஐந்து பகுதிகளாகப் பிரிந்து விளங்கியது, சங்க காலத்தில் சேரமண்டலம், பாண்டிய மண்டலம், சோழ மண்டலம் என்று மும்மண்டலங்களாகத் திகழ்ந்த தமிழகம், சங்கம் மருவிய காலத்தில் ஐந்தாக விரி வடைந்தது. சோழ மண்டலத்தின் வடபகுதி தொண்டை மண்டலம் என்றும், சேரநாட்டின் ஒரு பகுதி கொங்கு மண்டலம் என்றும் விரிவுபெற்றமையால்,

> ''**தமிழ்மணடலம் ஐந்தும்** தழுவிய ஞானம்'' (1646)

என்று திருமூலர் குறித்தனர். தமிழ் வழங்கிய ஐந்தாகிய மண்டலங்கள் தமிழகப் பகுதிகளைக் குறித்ததாக எண்ணுதல் ஒரு கருத்து. காந்தம் உள்ளிட்ட வடமொழி இலக்கியங்களில் **பஞ்சத்திராவிடம்** என்ற வழக்கு காணப்படுகிறது. திருமூலர் சுட்டியது பஞ்சத்திராவிடத்தை என்று கருதினால் ''**தமிழ் மண்டலம் ஐந்து**'' என்ற தொடர்க்கு அதற்குத்தக விளக்கம்

திருதல் வேண்டும். தமிழ் என்ற சொல் வடமொழியில் திராவிடம் என்று மாறியது என்பர் மொழிநூலறிஞர். திராவிடம் (தமிழகமும் கேரளமும்), கருநாடகம், கூர்ச்சரம் (குஜராட்டம்), மகாராட்டிரம், தைலிங்கம் (திரிலிங்கம்-ஆந்திர மாநிலம்) ஆகிய ஐந்து நிலப்பகுதிகளையும் ஒழுங்கிணைத்துப் **பஞ்சத்திராவிடம் என்று வடமொழிவாணர் பகர்வர்.** திருமூலர் இவ்வைந்தும் சுட்டினார் என்று கொள்ளுதற்கும் இடம் உண்டு. தெய்வச்சிலையார் உரையில் பஞ்சத்திராவிடம் பற்றி குறிப்பு காணப்படுகிறது [1] தமிழ், கன்னடம், தெலுங்கு என்பன ஐயத்திற்கு இடமின்றித் திராவிடக் குடும்பமொழிகள். எனின், கூர்ச்சரம்(குஜராட்டம்)மகாராட்டிரம் வடமொழிச் சார்புடைய ப்ராகத மொழிகள் என்பர். எனின், மகாராட்டிரத்தில் தமிழ்ச் சொற்கள் பல காணப்படுதலை அண்மைக்கால மொழியியல் அறிஞர்கள் கண்டுணர்த்தியுள்ளனர். மணிமேகலையில் மராட்டக் கம்மர் (19.107) குறிக்கப் பெற்றனர். சம்பாபதியின் கோயிலைக் கட்டியவர் கூர்ச்சரக் கைவினைஞராதலின் அதனைக் குச்சரக் குடிகை (18.149) என்றே சாத்தனார் சுட்டினர். மராட்டக் கம்மரும் கூர்ச்சர வினைஞரும் பூம்புகாரில் வாழ்ந்தவர்கள்.

எனவே, **பஞ்சத்திராவிடம்** என்ற கொள்கை ஒருவகையில் பொருத்தம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. எங்ஙனமாயினும், திருமூலரின் மொழிக் கொள்கை பரந்த பார்வை கொண்டது என்பதும் தமிழ் மொழியினைப் பெரிதும் போற்றிய திறம் அவர் பாடல்களினால் தெளியப்படும் என்பதும் எண்ணற்பாலன.

இனி, பிரபந்தமாலை எனப் போற்றப்படும் பதினோராம் திருமுறையில் செந்தமிழ் பற்றிய சிறந்த குறிப்புக்கள் சிலவற்றைக் கண்டறிதல் அருளாசிரியர்களின் மொழி உணர்வினைப் புரிந்து கொள்ளுதற்குப் பெரிதும் பயன்தரும்.

**பிரபந்த மாலையில்**

தமிழில் முதன்முதல் பதிகம் பாடிய சிறப்புக்குரியவர் காரைக்காலம்மையார். இவர் அருளிச் செய்த திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தில்,

''செப்பிய **செந்தமிழ் பத்தும்** வல்லார்'' (1-11)

என்று பதிகப்பாங்கு பகரப்பெற்றது. திருஞானசம்பந்தர்; சுந்தரர், திருவிசைப்பா ஆசிரியர்கள் திருக்கடைக்காப்புப் பாடுத்தும்

1. **தெய்வச்சிலையார் உரைத்திறம்,** ப. 28-9.

பல காலத்திற்கு முன்னரே பதிகத்தினை ஓதுவதால் விளையும் பயனும், பாடியவர் பெயரும், பாடிய தமிழின் தகவும் ஒருங்கே உணர்த்தியவர் அம்மையார். தொல்காப்பியர் காலம் முதலே நல்ல தமிழைச் 'செந்தமிழ்' என்று சொல்லும் மரபு காணப்படுகிறது. ''**செந்தமிழ்** சேர்ந்த பன்னிரு நிலத்தும்'' என்ற சொல்லதிகார நூற்பா எண்ணத்தக்கது. தொல்காப்பியப் பாயிரத்தில், ''**செந்தமிழ்**இயற்கைச் சிவணிய நிலத்தொடு, முந்துநூல் கண்டு'' என்று பனம்பாரனார் செவ்விய தமிழின் சிறப்பினைக் குறித்தனர். இம்மரபு கி. பி. 5ஆம் நூற்றாண்டினராகிய காரைக்காலம்மையார் காலத்திலும் பேணப் பெற்றுள்ள பாங்கினை மேற்சுட்டிய திருக்கடைக் காப்புத் தொடர் தெளிவுறுத்துகிறது.

நக்கீரதேவர் அருளிய **பெருந்தேவபாணி** என்ற பிரபந்தத்திலும் தமிழின் சிறப்பினை மறவாது குறித்துள்ளார். இவ்விலக்கியத்தில்,

''**அருந்தமிழ்** பழித்தனன்'' (13-66)

என்று தமிழின் அருமைத் தன்மை போற்றப்பெற்றது. பழித்தல், பழிச்சுதல் என்பன போற்றுதற் பொருண்மையில் வரும். கபிலதேவர் அருளிய சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை என்ற பிரபந்தத்தில் ''**இயலிசை நாடகமாய்**'' (21.24) இறைவன் காட்சி தருதலைக் குறித்தலின் வாயிலாக முத்தமிழின் தெய்வப் பொலிவினைச் சுட்டினார். இடைக்காலத்தில் இயல், இசை, நாடகம் என்ற மும்மைத் தமிழும் இறையியல் தொடர்புடையதாகச் சிறந்து விளங்கிய காரணத்தினால் இங்ஙனம் ஏற்றம் தந்து அருளாளர்கள் பலரும் பாடியுள்ளனர். உலகியல் (Secular) பற்றிப் பாடுதலைவிட உயிரியல் (Spiritual) பற்றியதாக இறைவனைப் பாடுவதும், பண்ணிசைப்பதும், பரமனின் பண்புகளைச் சொல்லி ஆடுவதும் ஆன்மநிறைவினை அளிக்கும் என்ற நம்பிக்கையில் மிக்கவர்கள் அருளாசிரியர்கள். எனவேதான் முத்தமிழையும் தெய்வத் தமிழாகப் போற்றிப் புகழ்ந்தனர். நூறு பசுவின் பாலைப் பொழிந்து நூறு மலர்களைச் சொரிந்து நூறு பெயர்களைச் சொல்வதைக் காட்டிலும் தெய்வமணம் கமழும் செந்தமிழ்ப் பாடல் ஒன்றினால் மனம் ஒன்றி விடையேறியாகிய ஈசனைப் போற்றிப் பாடினாலே போதுமானது என்ற கருத்தினர் கபிலதேவர். இவர் அருளிச் செய்த சிவபெருமான் திருவந்தாதியில்,

''நூறான் பயன்ஆட்டி நூறு மலர்சொரிந்து
நூறா நொடிவதனின் மிக்கதோ-நூறா
உடையான் பரித்தளிர் உத்தமனை வெள்ளே(று)
உடையானைப் பாடலால் ஒன்று (22-100)

எனவரும் பாடல் நற்றமிழ் ஆற்றலை நன்கு உணர்த்துதல் காணலாம்

நம்பியாண்டார் நம்பி அருளிச் செய்த பிரபந்தங்களில் தமிழின் அருமை பெருமைகள் மிகுதியாகச் சுட்டப்பெறுகின்றன. தமிழ்த் திறங்களை வாயாரப் போற்றி நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரின் பதிகங்களில் தோய்ந்து தெளிந்தவராகிய நம்பியாண்டார் நம்பி, தமிழின் மாண்பினை நன்கு உணர்ந்து போற்றியவர். தமிழே திருவுருவமாகக்கொண்டு திருஞானசம்பந்தர் விளங்கிய திறத்தினை எண்ணி வியந்து மகிழ்ந்து,

''நடையும் நகையும் **தமிழா கரன்தன்** புகலிநற்றேன்
அடையும் மொழியும் எழுதிடில் சால அதிசயமே?''
(34-35)

என்று ஆளுடை பிள்ளையார் திருவந்தாதியில் பாடியுள்ளார், இதே பிரபந்தத்தில் ''சூடுநற்றார்த் **தமிழாகரன்**,' (34.45.) ''**அருளும் தமிழாகரன்**'' (34.74), ''**நல்ல செந்தமிழால் ஒப்புடை மாலைத் தமிழாகரன்**'' (34.97), ''**முத்தமிழாகரன்**'' (38-6) என்று நம்பியாண்டார்நம்பி ஞானசம்பந்தரின் தமிழாற்றலை வியந்து பாராட்டினார்.

தமிழில் முற்றும் துறைபோகிய அறிவும் ஆற்றலும் சால்பும் நுட்பமும் ஒட்பமும் நிறைந்த திருஞானசம்பந்தரை **தமிழ்விரகன்** (38.22.23) என்று போற்றினர், அங்ஙனம் போற்றுங்கால் தமிழின் மாண்பினைத் தெரிக்கும் பாங்கில் அடையொடு புணர்த்துப் பரவுதல் நம்பியாண்டார்நம்பியின் வழக்கம், சான்றாக,

''ஏழிசை யாழை எண்டிசை அறியத்
துண்டப் படுத்த **தண்டமிழ் விரகன்**'' (36-1)

''எண்டிசை நிறைந்த **தண்டமிழ் விரகன்**'' (36-16)

''பொற்பமர் தோளா! **நற்றமிழ் விரக**!'' (36-10)

''கழுமல நாதன் கவுணியர் குலபதி
**தண்டமிழ் விரகன்** சைவ சிகாமணி'' (38-37)

''தாளம் பிரியாத் தடக்கை அசைத்துச்
சிறுகூத் தியற்றிச் சிவன்அருள் பெற்ற
**நற்றமிழ் விரகன்**'' (36-19)

''**மாத்தமிழ் விரகன்**'' (38-38)

''**ஞானத்தமிழ் விரகன்**'' (38-24)

எனவரும் தொடர்களைச் சுட்டுதல் ஏற்புடையது. சம்பந்தரின் தமிழ், பயில்வார்க்கு ஞானம் தருவது. ஞானப்பால் பருகிப் பாடிய சாரம் அவர்தம் பாடலில் பதிதல் இயல்பே. எனவே தான், பிறவிப் பெருங்கடலை நீந்துதற்குப் பெருந்தோணியாக அவர் தமிழ் பயன் தருகிறது. இத்திறத்தினை நம்பியாண்டார் நம்பி

''பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி கண்டீர் - நிறைஉலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை **ஞானத் தமிழ்**'' (36-11)

என்று பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் அருளிச் செய்தவை பதினாறாயிரம் பைந்தமிழ்ப் பதிகப் பனுவல் என்ற உண்மையினை,

''பன்னு **தமிழ்ப்பதினா றாயிரம் நற்பனுவல்**
மன்னு புவியவர்க்கு வாய்ப்பவும்'' (37-63-4)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை தெளிவுறுத்துகிறது. எனின், இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் 384 பதிகங்களில் உள்ளவை 4169 பாடல்கள் ஆகும். எனவே, சங்கப்பாக்கள் பலவற்றைத் தமிழர்கள் கவனக்குறைவாலும் இயற்கைச் சீற்றத்தாலும் இழந்தமை போல, சம்பந்தர் பதிகங்கள் பலவற்றை இழந்துவிட்டனர் எனத் தெரிகின்றது. அவர் ஆற்றிய சமயப் பணியினால், தமிழ்த் தொண்டினால் தமிழர்களின் கண் எனப் போற்றப் பெற்றார். ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்,

''**தீந்தமிழோர், கண்ணெனை ஓங்கும் கவுணியர் தீபன்**''
(34-27)

எனப் புகழப்படுகிறார்.

ஆளுடை பிள்ளையார் திருக்கலம்பகத்தில் நம்பியாண்டார் நம்பி,

''பாவேறிய **மதுரத்தமிழ் விரகன்** புகலியர்மன்'' (38-21)

என்று சம்பந்தர் தமிழின் இனிமைச் சுவையினைச் சுட்டியுள்ளார். மேலும்,

**''அறிவாகி இன்பஞ்செய் தமிழ்''** (38-8)

என்றும் தமிழ் ஆற்றல், அறிவு, இன்பப் பயன் என்ற திறங்கள் எழிலுற இயம்பப் பெறுதல் நோக்கத்தக்கது.

**தமிழாகரன்** எனப் போற்றப் பெற்ற திருஞானசம்பந்தரைத் **தமிழ்க்கடல்** என்றும் நம்பி போற்றியுள்ளார் :

''கழுமல நற்பதி அதிப! **தமிழ்க்கடல்!**
கவுணிய நற்குல திலகன்!'' (88-17)

இத்தகைய தமிழ்க்கடல் ஆகிய சம்பந்தர் தோன்றிய பன்னிரு திருப்பெயர்களைக் கொண்ட சீகாழிப் பதியினைச் சுட்டுமிடத்து

**''ஒண்முத்தமிழ் பயந்தான் ஊர்''** (36-23)

என்று போற்றப்பெறுதல் எண்ணத்தக்கது.

முத்தமிழ் என்ற இலக்கியக் கோட்பாடு தமிழ்மொழிக்குத் தனிச் சிறப்புத் தருவது. எங்ஙனம் பொருளிலக்கணம் தமிழுக்கே உரியதென்று கூறப்பெறுகிறதோ அங்ஙனமே இயலும் இசையும் நாடகமாகிய கூத்தும் கூடிய மும்மைத் தமிழ் என்ற பாகுபாடும் நம்மொழிக்குத் தனித் தன்மை வாய்ந்ததாகக் கொள்ளப்பெறுகிறது. முத்தும் முத்தமிழும் பாண்டிய நாட்டிற்கே சிறப்புரிமை உடையன என்று எண்ணிய கம்பர், இவ்விரண்டும் விண்ணகத்தில் கிடைக்காத காரணத்தால், தேவர் உலகைவிடத் தென் பாண்டி நாடே மேம்பட்டது என்றார் (கிட்கிந்தை 1551). பரஞ்ஜோதி முனிவர், சிவபிரான் தண்டமிழ் மூன்றும் வல்லோன் என்பதைச் சுட்டுதல்போல் திருநீற்றினைத் திரிபுண்டரமாக அணிந்தனன் என்பர். (திருவிளை 52-99) ஆதலின், முத்தமிழின் சிறப்பு தொடர்ந்து கருதப்பெற்ற உண்மை புலனாகும்.

முத்தமிழ் வித்தகராக விளங்கும் சம்பந்தரின் தமிழ் நலத்தை **''இருந்தமிழ்''** (34-39), **''செந்தமிழ்''** (34-80-97) எனப் புகழ்தல் சுட்டுதற்குரியது. மதுரகவியாகவும் வித்தாரக் கவியாகவும்

விளங்கியதால் அவர் பாடிய தமிழை '**மதுரத்தமிழ்**', '**இருந்தமிழ்**' எனப் போற்றியுள்ளனர் என்பது புலனாகும்.

திருஞானசம்பந்தரிடம் நிறைந்த அன்பு பூண்டவரும், அவரால் 'அப்பரே' என்று அழைக்கப்பெற்றவருமாகிய திருநாவுக்கரசரின் திருப்பதிகங்களிலும் நம்பியாண்டார்நம்பி திளைத்து இன்புற்றவர். இவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நம்பி பாடியுள்ள **''திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை''** என்னும் பிரபந்தத்தில்,

> **''பதிகம்ஏழ் எழுநூறு பகருமா கவியோகி**
> பரசுநா வரசான பரமகாரண வீசன்'' (7)

என்று அப்பர் போற்றப்பெறுதல் காணத்தக்கது. எனவே அப்பரடிகள் 49,000 பாடற்பதிகம் பாடியுள்ளார் என்பது புலனாகும். எனின், இப்போது நமக்குக் கிடைப்பன 311 பதிகங்களில் உள்ள 3067 பாடல்களே ஆகும். சம்பந்தர் பாடல்கள் பல மறைந்தமை போலவே அப்பர் பாடல்களும் மறைந்துவிட்டன. தில்லையில் இவர்களின் அருளிச் செயல்கள் வரையப் பெற்ற ஓலைகள் புற்று மூடி அழிந்தமை போக எஞ்சியனவே நமக்குக் கிடைப்பன என்பர். கனிந்த தொண்டராகிய அப்பரின் தமிழ்ப் பாங்கினை,

> ''உழவாரப் படை கையில் உடையான் வைத்தன
> தமிழ்'' (2)

என்று நம்பி போற்றிப் பரவுதல் நோக்கத்தக்கது. திருத்தொண்டர் திருவந்தாதியில்,

> ''மணியினை மாமறைக் காட்டு மருந்தினை
> வன்மொழியால்
> திணியன நீள்கதவம் திறப்பித்தன தெண்கடலில்
> பிணியன கல்மிதப்பித்தன **சைவப் பெருநெறிக்கே**
> **அணியன நாவுக் கரையர் பிரான்தன் அருந்தமிழே''**
> (25)

என்று அப்பர் பெருமானின் அருந்தமிழ் விளைத்த அற்புதங்களை அழகுறப் புலப்படுத்தியுள்ளார் நம்பி.

சுந்தரர் செந்தமிழ்த் திறத்தையும் நம்பியாண்டார் நம்பி நன்கு உணர்ந்து மகிழ்ந்தவர். சம்பந்தர், அப்பர் ஆகியோர் பாடிய செந்தமிழ்ப் பாசுரங்களில் திளைத்து இன்புற்ற சுந்தரர்

அருளிய தண்டமிழ்ப் பதிகங்களின் மாண்பினை ''**செந்தமிழ் பாடி**'' (33.32) என்ற தொடரில் குறித்துள்ளார்.

எனவே, பதினோராம் திருமுறை ஆசிரியர்களில் பதிகப் பெருவழியை நன்கு போற்றியவரும் அருந்தமிழின் பெருமைகளை அறிந்து போற்றியவரும் நம்பியாண்டார் நம்பி என்பது புலனாகும். இறைவனையே பொருளாகக் கொண்டு பாடிய அருளாளர்கள், இறைவனை உணர்தற்கும் உணர்த்தற்கும் உரிய ஏற்றமிகு எழில்மொழியாகத் தமிழைப் பேணினர் என்ற உண்மையினைப் பதினோராம் திருமுறை பாடிய அருளாசிரியர் களும் தெளிவுறுத்தியுள்ளனர் என்ற உண்மை அறியத்தக்கது. திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய சங்க காலத்தில் பத்தி இலக்கியங்களில் வெண்ணெய் போன்றிருந்த தமிழ்ச் சொற்கள் திருமுறைப் பாடல்களில் நெய்யாக உருகி உள்ளமை உணரத்தக்கது.

இனி, திருமுறைகளின் சாரமாகவும் திருக்கடைக்காப்புப் போல் பயன் உரைப்பதாகவும் வரலாற்றுக் கலைக்களஞ்சிய மாகவும் கோயில் திருமுறையாகவும் திகழும் திருத்தொண்டர் புராணத்தில் தமிழின் பன்மாண் சிறப்புக்களும் பாரித்துரைக்கப் பெற்றுள்ள பாங்கினை ஒரு சிறிது உற்று நோக்குவோம்.

### திருத்தொண்டர் புராணத்தில்

சேக்கிழார் பெருமான் தேவார ஆசிரியர் மூவரையும் சிறப்பாகச் சுட்டும் பாடல்களில் தமிழ்க் காவலர்களாக விளங்கிய அவர்தம் மொழித்திறத்தினையும் தலைமையினையும் தகவுறப் போற்றியிருத்தல் குறிப்பிடத்தக்கது. அவர்களைக் குறிப்பிடு தற்குச் சேக்கிழார் வழங்கியுள்ள அடையொடு பொருந்திய சிறப்புப் பெயர்கள் தமக்கு முற்பட்ட நம்பியாண்டார் நம்பியின் பாடல்களிலும் திருகடைக்காப்புச் செய்யுள்களிலும் காணப் பெறும் குறிப்புக்களை அடிப்படையாகக் கொண்டு விளங்குவன. முதலில் இறைவனின் திருமகனார் (28.996) என உபசாரமாகப் போற்றப்பெறும் திருஞானசம்பந்தரைப் பற்றிய தமிழ்த் தொடர்புறுத்திய சிறப்புப் பெயர்களைக் குறித்தல் சாலும்.

நம்பியாண்டார் நம்பியைப் போலவே சேக்கிழார் திருஞான சம்பந்தரைத் **தமிழாகரர்** என்று போற்றியுள்ளார்.

> ''**அருந்தமிழாகரர்** சரிதை அடியேனுக்கு அவர்பாதம்
> தரும்பரிசால் அறிந்தபடி துதிசெய்தேன்'' (28-1256)

என்வரும் பெரியபுராணச் செய்யுள் காணத்தக்கது. சம்பந்தரைத் **தமிழ்விரகர்** எனப் பல பாடல்களில் சுட்டியுள்ளார் (28.500, 881; 50-1). ஒரு பாடலில் **''இயலிசைத் தலைவனார்''**(28.361) என்று பரவிய சேக்கிழார், இயலிசை நாடகம் ஆகிய முத்தமிழி லும் முற்றிய ஞானம் வாய்ந்தவர் சம்பந்தர் என்றும் ஏத்தி யுள்ளார்.

> ''**முத்தமிழ் விரகர்** தாமும் முதல்வர் கோபுரத்து
> முன்னர்'' (28-125)
>
> ''முதிரும் அன்பர்கள் **முத்தமிழ் விரகர்தம்**
> முன்வந்து'' (28-379)
>
> ''**மும்மைநிலைத் தமிழ் விரகர்**'' (28-392)
>
> ''முன்புபோற்றியே புறம்பணை **முத்தமிழ் விரகர்**''
> (28-421)

என்று வரும் பாடற் பகுதிகள் எண்ணற்பாலன. மேலும், **''மதுர முத்தமிழ் வாசகர்''** (28.373) என்றும் சேக்கிழார் சம்பந்தரைக் குறித்துள்ளார். **''செந்தமிழ் ஞானசம்பந்தர்''** (28.268) என்று பெரியபுராணத்தில் இடம்பெறும் தொடர், திருஞானசம்பந்தரின் திருக்கடைக்காப்பில் இடம்பெற்றுள்ள **'தமிழ்ஞான சம்பந்தன்'** என்றதற்சுட்டிய தனிப்பெயரை நினை வுறுத்தும். இப்பெருந்தகை அருளிய பதிகங்கள் யாவும் தமிழ் மறை என்பதில் சேக்கிழார்க்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. சமயக்குரவர் நால்வரிலும் **'ஆணை நமதே'** என்ற முத்திரைக் குறிப்புடன் பாடவல்லவர் சிறிய பெருந்தகையார் என்று சேக்கிழாரால் போற்றப்பெறும் திருஞானசம்பந்தரே ஆவர். தொல்காப்பியர்,

> ''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப''
> (தொல். பொருள். நூ. 480)

என்று வாய்மொழியாக மந்திரச் செய்யுளுக்கு இலக்கணம் கூறினர். சால்பு நிறைந்த சான்றோர் ஆணையிட்டுக் கூறும் மறைமொழிகளை மந்திரம் என்று கூறுதல் தமிழ் மரபு. அவ்வகையில் சம்பந்தரின் பாடல்கள் யாவும் மறைமொழிகளே. தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர், ''தானே எனப் பிரித்தான் இவை தமிழ் மந்திரம் என்பது அறிவுறுத் தற்கு'' என்று எழுதியுள்ள உரைப்பகுதி காணத்தக்கது.[2]

---

2. **புரட்சிக்காவியம்**, ப. 70-72.

கல்வெட்டுக்களில், ''ஆணைநமது என்ற பெருமாள்'' என்று சம்பந்தர் சுட்டப் பெறுதல் நோக்கத்தக்கது. எனவேதான் சேக்கிழார்,

''**தமிழ்வேதம்** பாடினார் தாளம் பெற்றார்''
(28-260)

''அக்கரைப் பரமர்பால் அன்புறும் பரிவுகூர்
**மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்''**
(28-362)

என்று திருஞானசம்பந்தர் அருளியவை தமிழ்வேதம் என்பதைத் தெளிவுறுத்திக் கூறியுள்ளார்.

திருஞானசம்பந்தருக்கு ஒப்பாகப் போற்றப்பெறும் திருநாவுக்கரசரையும் சேக்கிழார் தமிழ்கெழு அடையுடன் தக்க வாறு பரவிப் பாடியுள்ளார். சான்றாக,

''வெஞ்சமண் குண்டர்கள் செய்வித்த தீய மிறைகள் எல்லாம்
எஞ்சவென் றேறிய **இன்தமிழ் ஈசர்** எழுந்தருள''
(21-137)

''இந்நாளில் திருப்பணிகள் செய்கின்ற **இன்தமிழ்க்கு**
**மன்னான வாகீசத் திருமுனியும்''** (21-147)

''தவமுன் புரிதலின் வருதொண் டெனுநிலை
தலைநின் றுயர்தமிழிறையோர்'' (21-160)

''**சண்**பைநா டுடைய வள்ளல் **தமிழ்மொழித்தலைவரோடு**
மண்பயில் சீர்த்திச் செல்வ மாமறைக் காட்டு வைகி''
(28-598)

எனவரும் பெரியபுராணப் பாடற் பகுதிகளைச் சுட்டுதல் தகும். **இன்தமிழீசர் இன்தமிழ் மன்னன்** தமிழிறையோர் **தமிழ்மொழித் தலைவர்** என்ற பட்டங்களைத் திருநாவுக்கரசர்க்குத் தந்து போற்றுகிறார் சேக்கிழார். மேலும், ''அஞ்சொல் தொடைத் **தமிழாளியாரும்''** (28.588) என்று பாராட்டினார். தமிழை ஆட்சி செய்யும் சொல்வேந்தர் அப்பர் என்பது புலனாகும். ஆண்டிலும் அனுபவத்திலும் முதிர்ந்த வாகீசராகிய அப்பர் பொறுமையும் தகைமையும் மிக்க முனிவராகவும் திருப்பணிகள்

ஆற்றிய சிலராகவும் தமிழ்மொழிக்குத் தலைவராகவும் தொண்டாற்றிய பெற்றியைச் சைவ நன்மக்கள் என்றும் போற்றுவர்;

சம்பந்தர், அப்பர் இருவரையும் அடுத்துத் தமிழ்ப்பணியும் சைவப்பணியும் ஒருங்கே ஆற்றி வந்த சுந்தரரின் தமிழ்ப் பற்றையும் புலமை மாட்சியையும் ஞானத் திறத்தையும் சேக்கிழார் போதிய அளவில் போற்றிப் பாடியுள்ளார். தடுத்தாட் கொண்ட புராணத்தில்,

''தன்முடி அப்பால் வைத்தே துயிலமர்ந்தான்
**தமிழ்நாதன்**'' (1-5-86)

என்று சுந்தரரைச் சேக்கிழார் ஏத்துதல் எண்ணத்தக்கது. சுந்தரர் தமிழ்நாதன் தான். மற்றுமொரு பாடலில் ''**நற்றமிழ் நாவலர்கோன்**'' (1.5.125) என்று ஆரூரரைச் சேக்கிழார் பாராட்டுதல் அறிந்தின்புறற்பாலது. ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தில்,

''சங்கரர்தாள் பணிந்திருந்து **தமிழ்வேந்தர்**
மொழிகின்றார்'' (29-248)

என்று சுந்தரரை ''**தமிழ்வேந்தர்**'' எனப் போற்றுதல் நோக்கத் தக்கது. இந்நாளில் கல்வி உலகில் 'வேந்தர்' என்ற சொல்லினால் ''Chancellor'' குறிக்கப் பெறுதல் எண்ணத்தக்கது. தமிழுக்குத் தலைவராய். நாதராய், வேந்தராய் விளங்கியவர் சுந்தரர். பாண்டிய நாட்டினைத் தமிழ்நாடு என்றலும், அம்மன்னனைத் தமிழ்வேந்தன் என்றலும் தமிழிலக்கியங்களில் ஒருமரபாகவே வழங்கிவரக் காணலாம். அவ்வகையில் நின்றசீர் நெடுமாறனைச் சேக்கிழார்.

''**நற்றமிழ் வேந்தனும் உய்ந்து**'' (28-659)

என்று சுட்டியுள்ளார். எனவே, தமிழ்வேந்தர் என்ற சொல்லாட்சி சுந்தரரைக் குறிக்கும் பாங்கும், பாண்டியனைச் சுட்டும் நிலையும் வேறுபிரித்து உணர்ந்து கொள்ளுதற்கு உரியன,

இனி தமிழ்மொழியின்பால், சேக்கிழார் கொண்டிருந்த அளவற்ற அன்பு அவர் பாடிய காப்பியம் முழுதும் தொடர்ந்து வெளிப்படுதல் நோக்கத்தக்கது. தமிழ்மொழிக்கு அவர் வழங்கும் அடைமொழிகள் அம்மொழியின் ஆற்றலையும் அழகினையும்

மேம்பாட்டினையும் தெற்றெனப் புலப்படுத்துவனவாம். ஒருசில சான்றுகளை இங்குக் காண்போம்.

இயல்பாக வெளிப்படும் பாட்டும் உரையுமாகிய பகுதியை இயற்றமிழ் என்றும், உள்ளத்தை உருக்குவதாய் இசைவதாய் உருப்பெறும் ஓசையினிமை மிக்க ஒலிநயத்தை இசைத்தமிழ் என்றும், உள்ளக் குறிப்புக்களை உடம்பின்வழி மெய்ப்பாடுகளின் வாயிலாகப் புலப்படுத்தவல்ல நடிப்பியலைக் கூத்து அல்லது நாடகம் என்றும் கூறுதல் தொன்மைத்தமிழ் மரபாகும். இயல், இசை, நாடகம் அல்லது கூத்து என்பன எம்மொழியிலும் காணப் பெறினும் அவை மூன்றினையும் ஒருங்கிணைத்து ஒரு கொத்தாகக் கூறும் மரபு தமிழ்மொழியில் மட்டுமே காணப்பெறும் தனிச் சிறப்பாகும். பரிபாடலில், ''தெரிமாண் **தமிழ்மும்மைத்** தென்னம் பொருப்பன்'' என்று வருவதைப் பரிமேலழகர் திருக்குறள் உரையில் குறித்துள்ளார். திருமுறைகளில் முத்தமிழ்க் குறிப்புப் பயின்றுள்ள பாங்கினை முன்னரும் கண்டோம், இம்மரபினை ஒட்டியே **முத்தமிழ் விரகன்** என்று சம்பந்தரை நம்பியாண்டார் நம்பியும் சேக்கிழாரும் போற்றினர். மூர்த்தி நாயனார் புராணத்தில்,

''சால்பாய **மும்மைத் தமிழ்**'' (15-5)

என்று சேக்கிழார் முத்தமிழின் சால்பறிந்து போற்றுதல் நோக்கத்தக்கது. இதே புராணத்தில்,

**''ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத் தமிழும்''** (15-5)

என்று உலகம் முழுமையும் பரவியிருந்த மேன்மைமிக்க தெய்வத் தன்மை பொருந்திய தமிழின் ஆற்றலைப்போற்றுதல் காணலாம். உலகமே ஒரு வீடாகவும் உலக மக்களை ஒரு குடும்பமாகவும் கொண்ட தமிழ்மரபு தமிழினை உலகமொழியாக எண்ணி இன்புற்றது. தங்களின் இறைவன் உலகம் முழுமைக்கும் ஒப்பற்ற முதல்வனாக விளங்குதலை எண்ணி வியந்து மணி வாசகப் பெருமான் போற்றுதலை,

''தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி'' (4:164-5)

என்று பாடுவதாலும்;

''**அனைத்துலகும் தொழுந்தில்லை** அம்பலத்தே
கண்டேனே'' (31-2)

என்றிசைப்பதாலும் உணர்ந்தின்புறலாம். சுந்தரர். ''அப்பாலும் அடிச்சார்ந்தார்'' என்று திருத்தொண்டத் தொகையில் சுட்டும் தொகையடியார், உலகெங்கிலும் பல்வேறு காலங்களிலும் தோன்றும் சிவனருட் செல்வர்களைக் குறிக்கும் தொடராக எண்ணப் பெறுதலின், சைவ நன்னெறியின் உலகு தழுவிய பெருநோக்கு தெள்ளிதிற் புலனாகும்.

சேக்கிழார் பெருமான் அருமை, இருமை, இனிமை, செழுமை முதலிய பண்புகள் வாய்ந்த தமிழின் திறத்தினைச் சுட்டும் இடங்களிற் சிலவற்றைக் காண்போம்:

1, **அருஞானச் செந்தமிழ்** *28, 411.*

2. **அருந்தமிழ்** *28, 85, 167, 279, 305.*

3. **இருந்தமிழ் நாடு** *66,1.*

4. **இன்தமிழ்** *28-426, 1028.*

5, **இன்னிசைத்தமிழ்** *28,364.*

6. **இன்னைசச் செந்தமிழ்** *28-433.*

7. **பண்ணார்ந்த தமிழ்** *28-623.*

8. **கோதில்தமிழ்** *21-249.*

9. **செந்தமிழ்** *1-5-114; 2-1-9; 21-74, 144, 190, 29, 127, 268, 301, 629; 47-5.*

10. **செழுந்தமிழ்** *21-244, 28-44, 89, 392.*

11. **சொற்றமிழ்** *1-5-70*

12. **தீந்தமிழ்** *21-261,*

13. **தென்தமிழ்நாடு** *28-750.*

14. **நற்றமிழ்** *1-5-125; 30-2.*

15. **நன்மைபுரி தீந்தமிழ்** *21-211.*

16. **மல்லல் நெடுந்தமிழ்** *28-75.*

17. **மெய்யம்மைப் பொருளாம் தமிழ்நூலின்** 4-5-7.

18. **வண்தமிழ்** *21-125, 135, 178, 180, 215; 28-23, 233, 525, 436, 495.*

இங்ஙனம் உள்ளம் குளிர்ந்து ஒண்தமிழ் மாண்பினைப் போற்றிப் புகழ்ந்துள்ள சேக்கிழாரின் தமிழ்க் காதலை அளவிட்டுரைத்தல் அரிது. தமிழ்மொழியின் செம்மைக்குக் காரணமாய்ச் சிரிய இலக்கணமாகத் திகழும் தொல்காப்பியத்தினை ''**அருந்தமிழ்**'' என்று சேக்கிழார் ஓரிடத்தில் போற்றியுள்ளார். திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்தில்,

> ''**அங்கண் முல்லையின் தெய்வமென்று அருந்தமிழ்**
> **உரைக்கும்**
> **செங்கண்மான்**'' *(19-18)*

என்று வரும் பகுதி, ''மாயோன் மேய காடுறை உலகமும்'' என்ற தொல்காப்பியத்தை மேற்கோள் கொண்டு கூறிய பாங்குடையதாய்த் திகழ்தல் எண்ணற்பாலது. இசை நலம் கெழுமத் திருஞானசம்பந்தர் அருளிய திருவையாற்றுப் பதிகத்தினை,

> ''**புந்திநிறை செந்தமிழின் சந்தஇசை**
> போற்றிசைத்தார் புகலி வேந்தர்'' *(28-301)*

என்று சந்தம் கொழிக்கும் செந்தமிழ் வளம் வாய்த்ததாகச் சுவைத்துப் பாடி மகிழ்ந்தவர் சேக்கிழார். தேவார ஆசிரியர்களின் அருளிச் செயல்களை, '**செந்தமிழ்மாலை**' *(1.5.114; 21.190; 28.127)*, ''**பாவுற்ற தமிழ் மாலை**'' *(21.197)*, '**வண்தமிழ் மாலை**' *(21.135)*, **ஏழிசை வண்தமிழ் மாலை**' *(21.128)* என்று பெருமிதமும் பெருமையும் மிளிரப் போற்றிப் புகழ்தல் அறிந்தின்புறத்தக்கது. தமிழின் ஆற்றலையும் அருமையினையும் நன்கு உணர்ந்தவராகிய சேக்கிழார் பெருமான்,

> ''அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின்
> துறைவெல்ல'' *(28-24)*

எனவரும் பாடற்பகுதியில் அயல்நெறிகளுக்குரிய மொழிகளின் வழக்காற்றினைச் சைவநெறிக்குரிய செழுந்தமிழ் வென்று வாகை சூடுதல் வேண்டும் என்ற குறிக்கோளுடன் திருஞானசம்பந்தர் தோன்றினார் என்று எண்ணும் வகையில் பாடியுள்ளார்.

அனபாய குலோத்துங்க சோழனின் தலைமை அமைச்சராக விளங்கி அரசியல் பணிபுரிந்தவரும், பின்னர் அரசியலைத்துறந்து ஆன்மீகநெறிக்கு முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு தொண்டர்கள் வரலாற்றை இனிய கவிதைகளாகப் பாடித்

**தொண்டர் சீர் பரவுவார்** எனப் பேர்ற்றப் பெற்றவரும் ஆகிய சேக்கிழார் **செந்தமிழ் சீர் பரவுவார்** என்ற சிறப்புக்கும் உரியவ ராகத் திகழ்ந்துள்ளனர்.

இதுகாறும் எழுதியவற்றால் செந்தமிழ் மொழியின் ஏற்றத்தைப் பாடியவர்கள் திருமுறை ஆசிரியர்கள் என்பதும், திருவருளைப் பெறுதற்கு வாய்ப்பான மொழி செழுந்தமிழே என்று அறிவுறுத்தியுள்ளனர் என்பதும் தெளிவாகப் புலனாதல் காணலாம். பத்தி இயக்கத்தைத் தமிழியக்கமாக நடத்திய வர்கள் திருமுறை ஆசிரியர்கள் என்பது தெளிவு.

**அயல்மொழிகள்**

பத்தி இயக்கத்தின் தலைவர்களும் தொண்டர்களும் ஆகிய சைவசமயச் சான்றோர்கள் நாளும் இன்னிசையால் நானிலம் எங்கும் தமிழ்பரப்பிய தகைமையாளர்கள். பத்தி இயக்கம் மக்கள் இயக்கமாக விளங்கியதால் மக்கள் புரிந்து கொள்ளக் கூடிய இனிய தாய்மொழியாகிய தண்தமிழ் மொழியிலேயே இறைவனை நோக்கி இயல்பாகப் பாடினார்கள். இறைவனே தமிழில் அடியவர் பாடுவதை விரும்பினார் என்று திருமுறை உணர்த்துகின்றது. விலையுடை அருந்தமிழில் எழுந்த மறை யாகத் திருமுறைகள் இல்லத்திலும் இறை விளங்கும் கோயில் களிலும் ஓதப்பெற்று வந்துள்ளன.

எனினும் தமிழ்மொழி ஒப்ப மதித்து வடமொழியையும் இணைத்துச் சுட்டும் மரபு திருமுறைகளில் காணப்படாமல் இல்லை. சான்றாக,

''தமிழ்ச்சொல்லும் வடசொலும் தாணிழற்சேர''
(1-77-4)

''செந்தமிழர் தெய்வமறை நாவர்
செழுநற் கலை தெரிந்தவரொடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரனூர்'' (3-80-4)

''செந்தமிழோ டாரியனைச் சீரியானை (-46-10)

''முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்''
(6-23-9)

''ஆரியம் தமிழோடிசையானவன்'' (5-18-3)

''வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்'' (6-87-1)

என்றுவரும் தேவாரப் பகுதிகளைக் குறிப்பிடுதல் சாலும். வடமொழியிலும் தமிழ் அறிஞர்கள் புலமை பெற்றுப் பலவகைப் பனுவல்கள் படைத்துள்ளனர் என்பது அம்மொழிக் குரிய இலக்கிய வரலாற்றினால் அறியலாம். அரசியல், வாணிபம் காரணமாக ஏனைய மாநிலங்களையும் நாடுகளையும் சார்ந்த மாந்தர் பலரும் தமிழகத்தில் குடியேறி வாழ்ந்து வந்துள்ளனர். அவர்கள் தத்தமக்குரிய தாய் மொழியினால் சிவபரம் பொருளைச் சிந்தித்து வழிபட்டனர் என்பதும்,

''தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி
எழில்நரம்பெடுத்து
அஞ்சுநெஞ் சிருள்நீங்கத் தொழுதெழு தொல்புக
லூரில்'' (2-92-7)

எனவரும் திருஞானசம்பந்தரின் பாடலால் தெளியலாம். அயல் மாநிலங்கள், அயல் நாடுகள் முதலிய வேறு வேறு திசைக்குரிய பகுதிகளிலிருந்து தமிழகத்திற்கு வந்து கலை, வாணிபம், சமயம் ஆகியவற்றின் பொருட்டுத் தங்கி வாழும் ஆடவர், மகளிர் ஆகிய இருபாலினரும் நன்றாகத் தமிழ் பயின்று இசையுடன் இறைவனை ஏத்தி வழிபட்டனர். இவ்வுண்மை யினைத் திருஞானசம்பந்தர்,

''ஊறு பொருளின்தமிழ் இயற்கிளவி தேருமட
மாதருடனார்
வேறு திசை ஆடவர்கள் கூறஇசை தேரும்எழில்
வேதவனமே'' (3-76-4)

எனவரும் திருமறைக் காட்டுப்பதிகத்தில் குறித்திருத்தல் வரலாற்றாசிரியர்களால் கூர்ந்து நோக்கத்தக்கது. சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய திருமுறைக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில் சுட்டப் பெறும் தமிழகத்தில் தங்கியிருந்த அயல்நாட்டார் குடியிருப்புக்கள் பற்றிய செய்திகளை இங்கு இயைபுறுத்தி எண்ணிப் பார்த்தல் ஏற் புடையது. அயல்நாட்டவர்களாகிய வேற்று மொழியாளர்கள் தமிழகத்தில் வாழ்வு மேற்கொள்ளும் நிலையில் தமிழ் மொழி,

பண்பாடு, சமயம், வழிபாடு முதலியவற்றைச் சார்ந்து தமிழ் மக்களோடு இணங்கி வாழ்ந்தனர் என்பதற்குப் பழைய பனுவல்களேயன்றித் தேவாரக் குறிப்புகளும் சான்றாக விளங்குகின்றன.

எனினும், வடமொழி குறித்த வெறுப்புணர்வும் அருளாளர் ஒருசிலரின் பாடல்களில் காணப்படுகிறது. நக்கீரதேவர்,

''கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போலவோர்
**ஆரியப் புத்தகப் பேய்**கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர் மானுடம் போன்று
பெட்டினை உரைப்போர் பேதையர்''

என்று **கோபப் பிரசாதம்** என்ற தம் நூலில் குறித்துள்ளார். திருமாளிகைத்தேவர்,

'':திசைக்கு மிக்குலவு சீர்த்தித் தில்லைக் கூத்து
உகந்தீர்
நசிக்கவெண் ணீற தாகும் நமர்களை நணுகா
நாய்கள்
அசிக்க ஆரியங்கள் ஓதும் ஆதரைப் பேத வாதப்
பிசுக்கரைக் காணா கண்; வாய் பேசாது
அப்பேய்க ளோடே''

என்று திருவிசைப்பாவில் பாடியுள்ளார்.

இங்குச் சுட்டப்பெற்றுள்ள பாடல்களில் இறையுண்மைக்கு முரணாகப் பேதவாதங்களைப் பேசும் ஆரியப்பாடல்களை ஓதும் புறச்சமயத்தவர்களைக் கடிந்து பேசியுள்ளனர் திருமுறை யாசிரியர்கள் என்று எண்ணுதல் வேண்டும். கடவுள் உண்மையினை ஒத்துக்கொள்ளாது வேதத்தை மட்டும் ஏற்றுக் கொண்ட மீமாம்சகர்களை இப்பாடல்கள் கண்டித்தன எனலாம். அன்றியும் சமணர்களுக்குரிய பிராகிருத மொழியும் ஈனயான பௌத்தர்களுக்குரிய பாலிமொழியும், மகாயான பௌத்தர்களுக்குரிய வடமொழியும் ''**ஆரியங்கள்**'' என்று பன்மை வாசகத்தால் சுட்டப்பட்டன எனலாம். இம்மொழிகள் யாவும் வடமொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை என்பதைக் கருத்திற் கொள்ளுதல் வேண்டும். இறைவனை உடன்படாத பூர்வ மீமாம்சகர்கள் நான்மறை ஓதி வேள்வி புரிவதால்

வேண்டியவற்றைப் பெறலாம் என்று பேசியவர்கள். அவர் களையும் சமண், பௌத்தர்களையும் கருத்திற் கொண்டே, ''நமர்களை நணுகா நாய்கள்'', ''ஆரியங்கள் ஓதும் ஆதர்'', ''பேதவாதப் பிசுக்கர்'' என்று திருவிசைப்பா ஆசிரியர் பாடியுள்ளார் எனத் தோன்றுகிறது.

சமணர், பௌத்தர் ஆகிய புறச்சமயத்தார் முறையே பாகதம், பாலி ஆகிய அவ்வந்நெறிக்குரிய மொழிகளை ஆதரித்து வந்தனர். வடமொழிச் சிதைவாகிய பாகத மொழியை மேற்கொண்ட சமணர்களுக்குச் செந்தமிழ், வடமொழி ஆகிய இருபெரும் மொழிகளின் பயன் அறியாதா ராய் இவ்விரண்டும் விரலிய மணிப்பிரவாளத்தையும் அறிமுகம் செய்து மொழி மாண்பினைக் குலைத்தனர் என்ற உண்மையினை.

''சந்துசேனனும் இந்துசேனனும் தருமசேனனும்
கருமைசேர்
கந்துசேனனும் கனகசேனனும் முதலாகிய
பெயர்கொளா
மந்திபோல்திரிந் **தாரியத்தொடு செந்தமிழ்ப்பயன்
அறிகிலா**
அந்தகர்க்கெளி யேனலேன்திரு வாலவாய் அரன்
நிற்கவே'' (3-39-4)

எனவரும் பாடலில் திருஞானசம்பந்தர் சுட்டியுள்ளார். சமணர்களின் பெயரிடும் பாங்கு முன்னிரு அடிகளில் காணலாம்.

சமணர்களின் மந்திரங்கள் பலவும் மூக்கினொலியால் (Nasal Sounds) அமைதலின் செவிக்கு இனிமை பயவாமையின், ''**மூக்கினால் மூன்று ஓதி**'' (5-58-2) என்று அப்பர் சுட்டினார். சுந்தரர்,

''நமண நந்தியும் கரும வீரனும் தரும சேனனும்
என்றிவர்
குமண மாமலைக் குன்றுபோல் நின்று தங்கள்
கூறைஒன் றின்றியே
**ஞமண ஞாஞண ஞாண ஞோணம்என் றோதி**
யாரையும் நாணிலா
அமணராற் பழிப்புடையரோ நமக்கு அடிகள் ஆகிய
அடிகளே'' (7-33-9)

என்று சம்பந்தர், அப்பர் ஆகிய இருவர் கருத்தையும் வழி மொழிந்து சமணர்களின் மெல்லோசை மிக்க பாகத மொழியின் குறைபாட்டினைக் குறித்துள்ளனர். தமிழ்வளம், வடமொழித் திறம் இரண்டுமே இவர்கள் மந்திர மொழிகளில் இடம்பெறாமை ஒரு குறையாகவே எண்ணப்பெற்றது எனலாம். ஆயினும், திருமுறை ஆசிரியர்கள் மொழி வெறுப்பாளர் ஆகார் என்பதை அடுத்து நோக்குவோம்.

**உலகமொழி**

முழுமுதற் கடவுளாகிய பரம்பொருள் உலகம் எங்கும் ஏழுலக அண்டங்களிலும் நீக்கமற வியாபித்து விளங்குபவன். எவ்வகைப் பொருளிலும் எவ்வகை இடத்தும் கலந்தும் கடந்தும் நிற்பவன். எனவே, பிரபஞ்சம் முழுமைக்கும் ஈசன் பொதுவான வன் என்று மதித்துத் துதித்தவர்கள் தமிழ் ஞானிகள், ஆதலின் அப்பரம்பொருளைப் பிரபஞ்ச மொழியினால் பாடுதலே நிறைவு தருவதாக அமையும். உலகப் பொதுமொழி ஒன்றினை நம்மால் அமைத்துக் கொள்ள இயலாத நிலையில் நம்நாடு அயல்நாடு என்ற வேற்றுமை அகன்று, நம்மொழி அயல்மொழி என்ற பேதம் நீங்கி, அவரவர் மொழியினால் அனைவர்க்கும் பொதுவாய் விளங்கும் பரம்பொருளை ஏத்தித் தொழுது இன்புற்று வாழ்தல் வேண்டும். இவ்விழுமிய குறிக்கோளினை

**''எல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த''**

என்று வரும் இனிய பாடலடியில் **தமிழ் ஞானசம்பந்தர்** தெளி வுறுத்திக் கூறியிருத்தல் உலகமாந்தரால் எண்ணி மகிழ்ந்து வியந்து பாராட்டத்தக்கது. எனவே திருமுறை அருளாசிரி யரின் பரந்து விரிந்து உயர்ந்த ''விசும்புதோய் உள்ளப்பாங்கு'' தெள்ளிதிற் புலனாகும். உலகநோக்கே தமிழ் நோக்கு. தமிழின் தலையாய இலக்கியங்கள் பலவும் திருமுறையின் உலகப் பார்வையை மேலும் சிறப்பித்துக் கூறுவனவாக விளங்குவன.

இதுகாறும் எழுதியவற்றால் திருமுறையாசிரியர்களின் இறை நெறி சார்ந்த செந்தமிழ்ப் பற்றும் பிறமொழிகளை ஒப்ப மதிக்கும் பண்பும் புலனாதல் காணலாம்.

திருமுறைகள் சிறந்த இலக்கியங்களாக மதிக்கப்பெறுவன. இலக்கியச் செழுமைக்கு அடிப்படையாக எண்ணப்பெறும் இயற்கைப் புனைவுகள், கற்பனைத் திறம் என்பன திருமுறை யாசிரியர்களின் படைப்பாற்றலுக்குச் சான்றாக அமைவன. முதலில் திருமுறைகளில் இடம்பெற்றுள்ள இயற்கைக் காட்சிகள் குறித்து அடுத்த இயலில் நோக்குவோம்.

# திருமுறையில் இயற்கை

இறைவனின் எல்லையற்ற ஆற்றலையும் அளப்பரும் அருள் மாட்சியையும் அன்பர்க்கு எளிவரும் இரக்கத்தையும் பல்வகை மறக்கருணைத் திறத்தையும் பாங்குடன் பாடியவர்கள் திருமுறை ஆசிரியர்கள். பரந்து விரிந்து விளங்கும் இயற்கைப்படைப்பினைப் பார்க்கும் பொழுதெல்லாம் வரம்பற்ற முழுமுதலின் காட்சியையும், கைபுனைந்தியற்றாக் கவின்பெரு வனப்பினையும் கண்டு உளங்குளிர்ந்து உருகிப் பாடியவர்கள். இயற்கையுடன் இதயங்கலிந்து உறவாடியவர்கள். சங்கப் புலவர்கள் காதலைக் கவிதையாகப் பாடுதற்கு இயற்கைப் பின்னணி எங்ஙனம் வாய்ப்பாக அமைந்ததோ, அங்ஙனமே திருமுறைக் கவிஞர்கள் கடவுளைக் கசிந்துருகிப் பாடுவதற்குப் பல்வகை இயற்கைக் காட்சிகளும் பின்புலமாக அமைந்துள்ளன.

நிலவியல் அமைப்பினை ஐந்திணைகளாகப் பகுத்து அவற்றில் கருக்கொண்டு வளரும் செடி, கொடி, மரம் முதலிய தாவரங்கள், பறவைகள், விலங்குகள் முதலிய இயற்கைப் பொருட்கள் பலவும் எக்காலத்தும் பெருங்கவிஞர்களின் கற்பனைக்கு விருந்தாக விளங்கி வருவன. திருமுறைக்கவிஞர்களின் கற்பனை ஆற்றலை இயற்கைக் காட்சிகள் வெளிப்படுத்தின. வானம், கடல், ஞாயிறு, திங்கள், விண்மீன்கள், கொண்மூ, நிலம், பெரும்பொழுது, சிறுபொழுது, உயிர்வகைகள், மலர்கள் மற்றும் சிந்தைக்கினிய இயற்கைப் பொருள்கள் யாவும் தெய்வக் கவிதைகளாகிய திருமுறைகளில் வனப்புறப் புனையப் பெற்றுள்ளன.

எல்லோர்க்கும் முதல்வனாகிய ஈசன் கோயில் கொண்டுள்ள தலங்கள் யாவும் திணைவளம் கொழிக்கும் இயற்கை எழில் கொஞ்சும் இடங்களில் எழுந்து விளங்கின. தலங்களைக் கண்ணாரக் கண்டும் தலையாரக் கும்பிட்டும் வாயார வாழ்த்தியும் பத்திப் பெருக்கினைப் புலப்படுத்திய அருளாசிரியர்கள் இறைவன்

இயற்கைச் சூழலில் எழுந்தருளியிருக்கும் பொலிவினை எண்ணில் இன்புற்றுப் பாடினர். இயற்கையினையும் இறைவனையும் இணைத்துப் பாடிய அருட்பாவலர்கள் எங்கும் எப்பொருளிலும் எஞ்ஞான்றும் கரந்தும் கடந்தும் இயக்கும் ஆற்றலாகப் பரம்பொருளைஅனுபவித்தனர். இயற்கையின் வாயிலாக மாந்தர்க்குப் பல அரிய வாழ்வியல் உண்மைகளையும் உணர்த்த முற்பட்டனர். ஒருசில இயற்கைச் சித்திரங்கள் மரபுவழிப்பட்டனவாகக் காட்சி தரினும், பற்பல சொல்லோவியங்கள் திருமுறையாசிரியர்களின் அழகியல் உணர்விற்கும் (Aesthetic enjoyment) கற்பனைத் திறத்திற்கும் கட்டியம் கூறுவன. இன்புறுத்தலும் அறிவுறுத்தலும் இலக்கியத்தின் பயன்கள் என்பர் திறனாய்வாளர்கள். இவ்விரு பயன்களையும் திருமுறையாசிரியர்கள் படைத்துள்ள இயற்கைச் சித்திரங்களினால் இனிதின் உணரலாகும்.

திருமுறையாசிரியர்களில் திருஞானசம்பந்தரின் இயற்கைப் புனைவுகள் நனிசிறந்து விளங்குவன. ஏனைய அருளாளரின் பாடல்களிலும் இயற்கைச் சொல்லோவியங்கள் போதிய அளவில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் ஒருசில காட்சிகளை மட்டும் இங்கு உற்று நோக்குவோம்.

## முதுகுன்றக் காட்சி

நடுநாட்டுத் தலங்களில் நாயகமாகத் திகழ்வது முதுகுன்றம். இதன் சிறப்பினை, ''முருகனது பெருமை பகர் முதுகுன்று'' (1.12.10) என்று சம்பந்தர் பாடியுள்ளார். இவர் காலத்தில் இத்தலம் குறிஞ்சி வளமும் மருத வளமும் படைத்திருந்தது. முத்தாறு பாயும் முதுகுன்றம் என்பதால் வயல்வளம் அறியப்படும் இத்தலத்தின் வயல்களில் இனிய மாமரங்கள் ஒருபுறம். செழுமை மிக்க வருக்கைப் பலா மரங்கள் இன்னொரு புறம். கதலி, கமுகு, தென்னை மரங்கள் எண்ணில. இவை மல்கிய சோலைகள் இருவிழிக்கும் இன்பம் தருவன. மா, பலா, வாழை என்ற பயன்தரு தருக்களின் சுவைதரு கனிகளின் சாறு ஆறுபோல் ஒழுகியதால் வயல்கள் சேறாகிவிட்டன என்று இயற்கைக் காட்சியைக் கற்பனைக்கவின் பொருந்தப் பாடுகிறார் சம்பந்தர்:

''கொக்கினிய கொழும்வருக்கை கதலிகமுகு
உயர்தெங்கின் குலைகொள் சோலை
முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே'' (1-131-3)

முக்கனி என்ற சொல்வழக்கு முதல்முதல் சம்பந்தர் பாடலில் தான் காணப்படுகிறது, தமிழர் நாகரிகத்தில் மலர் சிறப்பிடம் பெறுதல் போல் முக்கனியும் விளங்குதல் காணலாம். இப்பாடற் பகுதி.

"சோறு வாக்கிய கொழுங்கஞ்சி
யாறுபோலப் பரந்தொழுகி
ஏறுபொரச் சேறாகி" (44-46)

எனவரும் பட்டினப்பாலைப் பகுதியை நமக்கு நினைவூட்டுகிறது, வளத்தைக் காட்டும் கவிதைப் படைப்புக்கள் இவை. கூடுதலான கற்பனையுடன் படைக்கப் பெற்றிருப்பினும் அக்காலச் சூழலில் எழிலும் வளமும் செழுமிய இயற்கையின் மாட்சியையும் மக்களின் செழுமையினையும் உணர்த்துவனவாக இச்சொல்லோவியங்கள் ஒளிர்கின்றன.

முக்கனி வளம் பற்றிய மற்றொரு காட்சி திருக்குறும் பலாத் திருப்பதிகத்தில் காணப்படுகிறது இயைபுநோக்கி இக்காட்சியை இங்கு நோக்குதல் பொருந்தும். திருக்குற்றாலத்தில் குறும்பலாவின் நீழலின் கோயில் கொண்டுள்ள பெருமானைச் சம்பந்தர் வழிபடுதற்கு வருகிறார். ஏலம் கமழும் சோலைகள், குருந்த மலர்களின் மணம், வண்டுகளின் யாழிசை யாவும் அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. மலைச் சாரலில் பலாப்பழங்களைக் கிளையோடு குரங்குகள் உண்டன. மந்தி உண்டு எஞ்சிய சுளையைக் கடுவன் உண்டு துள்ளும் காட்சியைக் காண்கிறார் சம்பந்தர். வெண்காந்தள் மலர் மணம்கமழும் ஒருபால். குவளை மலர்கள் கண்மலர வண்டரற்றும் ஒருபால். கோல மடமஞ்ஞை பேடையோடு ஆடல்புரியும் ஒருபால் (2.71.1-4). மூத்த மூங்கிற்காடுகள் சூழ்ந்திருக்கும் மலையில் இழியும் அருவிநீர் பசும்பொன்னை அடித்துவரும். வாழைக்குலையின் தீங்கனியும் மாங்கனியும் தேன்பிலிற்றும் நலம் குறும்பலா என்று பாடுகிறார்:

"முதுவேய் சூழ்ந்த
மலைவாய் அசும்பு பசும்பொன் கொழித்திழியு
மல்குசாரல்
குலைவாழைத் தீங்கனியும் மாங்கனியும் தேன்
பிலிற்றும் குறும்பலாவே" (2-71-5)

திருக்குற்றாலக் கோயிலின் தலவிருட்சம் குறும்பலா ஆகும். தலத்திற்கும் இதுவே பெயராக அமைந்தது. வாழை, மாங்கனி களைக் குறித்துள்ள சம்பந்தர் 'குறும்பலாவே' என்று சுட்டியதால் முக்கனி வளமும் பாடியதாக அமைகிறது. முன்னைப் பாடலில் (2.71.2) பலாக்கனி வெளிப்படையாகவே சுட்டப்பெற்றது,

தாம் தோன்றிய புகலிப்பதியின் இயற்கைப் பொலிவினைப் பாடும் பதிகம் ஒன்றில்,

''கொக்கு வாழை பலவின் கொழுந்தண் கனி
கொன்றைகள்
புக்க வாசப் புன்னை பொன்திரள் காட்டும் புகலியே''
(2-122-6)

என்று முக்கனி வளத்தையும் கொன்றை, புன்னை மலர்கள் பொற்குலை போல் பூத்துக் குலுங்கும் பொற்பினையும் உளங் குளிரப் பாடியிருத்தல் உணர்ந்து மகிழத்தக்கது. முக்கனியின் சுவை போல முக்கணான் திருவருள் சுவை பயப்பது என்ற குறிப்பும் இத்தகைய காட்சிகளால் புலனாகும்.

இனி, திருமுதுகுன்றப் பதிகத்தில் இடம்பெறும் மற்றொரு காட்சியையும் நோக்குவோம்.

### குறச்சிறுமியர் விளையாட்டு

முதுகுன்றப் பதியை வளப்படுத்துவது அங்கு ஓடிவரும் மணி முத்தாறு. இதனை இக்காலத்தார் மணிமுத்தா நதி என்பர். இந்த ஆற்றின் அலைகள் அடித்துவரும் மணிகளும் முத்துக்களும் கரையோரம் வாழும் குறச்சிறுமிகளைக் கவர்கின்றன.

அப்பிள்ளைகள் முறங்களினால் அவற்றை முகந்தெடுத்துக் கொழிக்கிறார்கள். மணிகளை அப்புறப்படுத்துகிறார்கள். அரிசிபோல் விளங்குவதால் முத்துக்களைத் தனியே தொகுத்து உலையில் பெய்து சோறாக்கி விளையாடுகிறார்கள் என்கிறார்:

''திறங்கொள் மணித்தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமி மார்கள்
முறங்களினால் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே'' (1-131-7)

அரிசி வகைகளில் முத்துச்சம்பா என்பது அண்மைக்காலம் வரை தமிழ் மக்களால் விரும்பப் பெற்ற உணவுப் பொருளாக விளங்கிய உண்மையினை இங்குச் சுட்டுதல் சாலும். பெரும்பாலும் ஆற்றங்கரையில் உள்ள தலங்களை வருணிக்கும் பாடல்களில் நவமணிகள், அகில், தேக்கு முதலிய தருவகைகள் அலைகளினால் தள்ளி வரப்படும் கற்பனைகள் நிரம்பக் காணப்படுகின்றன.

### காழிநகரின் கவின்

பன்னிரு திருப்பெயர்களைப் பெற்ற சீர்காழி தொன்மைமிக்க நன்னகராகும். சங்க இலக்கியத்தில் இந்நகர் கழுமலம் என்றும் மணிமேகலையில் சண்பை என்றும் சுட்டப்பெற்றது. இவ்விரு பெயர்களையும் தம் பதிகங்களில் சம்பந்தர் குறித்துள்ளார்.

சம்பந்தர்காலத்தில் காழி கடற்கரைப் பட்டினமாக விளங்கியது. எனின், காவிரியின் வளம்கொழிக்கும் கழனிகளும் அந்நகரின் ஒரு பால் திகழ்ந்தன. நெய்தல் வளமும் மருத வளமும் விரவிய இந்நகர் காவிரிப்பூம்பட்டினத்தின் ஒருபகுதியாக அல்லது அணுக்கப்பகுதியாக இருந்திருத்தல் வேண்டும். இயல்பாகவே இயற்கைப் படைப்புக்களை ஊடுருவி நோக்கும் உள்ளம் வாய்ந்த திருஞானசம்பந்தர் தம் சொந்த ஊரில் கண்ணைக் கவரும் கவின் மிகு காட்சிகள் பலவற்றில் கருத்தைச் செலுத்தி இயற்கை அழகினைச் சுவைத்திருத்தல் இயல்பு. அவரை ஈர்த்த இயற்கைக்காட்சிகளில் கமுகின் ஈட்டம் சிறப்பாகப் பொலிகிறது. பாக்குமரங்களிற் பொலியும் வெள்ளிய பிஞ்சுகள். பசிய காய்கள், சிவந்த பழங்கள் என்பனவற்றை ஊன்றி நோக்கும் இளைய உள்ளத்தில் அவை முறையே முத்துக்கள், மரகதங்கள், பவளங்கள் போலக் காட்சி அளிக்கின்றன. வண்ணம், வடிவம் பற்றி இங்ஙனம் உவமை கூறிக் கவிபுனைதல் சிறப்புடையதுதான். ஆயினும் கவிதையுணர்வு முற்றிய காழியர்கோன் ஆகிய சம்பந்தர் அங்ஙனம் உப்புச் சப்பின்றி உரைத்திலர். அக்காட்சியை இனிய சொல்லோவியமாக, கவிதையாக வடிக்கின்றார். கண்கவரும் கமுக மரங்கள் முத்துக்களை ஈன்று, மரகதங்களைக் காய்த்துப் பவளங்களாகப் பழுத்தன என்று அணிநயம் தோன்றப் பாடுகிறார்:

''எண்ணார் முத்தம் ஈன்று மரகதம்போல் காய்த்துக்
கண்ணார் கமுகு பவளம் பழுக்கும் கடற்காழி''

(1-102-4)

இக்கவிதையினைப் பயில்வோர் கமுகின் இயல்பினை முன்பு அறிந்திலரேனும், அதன் பிஞ்சுகள் முத்துப்போல் வெண்மை யாகவும், காய்கள் மரகதம் போல் பசுமையாகவும், முற்றிய கனிகளாகிய உலர்ந்த பாக்குகள் பவளம்போல் சிவப்பாகவும் ஒளிர்வன என்று உணர்ந்து கொள்ளுதல் கூடும். நாட்டு வளத்தைக் காட்டும் இப்பாடல் அவர்தம் பிறப்பிடத்தின் பெருமையினையும் சுட்டுவதாக அமைந்துள்ளது.

வேழத்தின் கை போல வாழைத்தார்கள் குலை தள்ளி யிருக்கும் குளிர்ந்த காட்சியையும் கவிஞராக நின்று சம்பந்தர் கண்டு மகிழ்கிறார்.

> ''மொய்சேர் வண்டுண் மும்மத நால்வாய் முரண்வேழக்
> கைபோல் வாழை காய்குலை ஈனும் கலிக்காழி''
> (1-102-2)

வாழைக் குலைகளைச் சிறப்பிக்க வந்த கவிஞர் வண்டுகள் மொய்க்கும் மும்மதங்கள் பொருந்திய களிற்றின் பொலிவினையும் குறித்தனர்.

காழிப்பதியில் நீர்நிலைகள் ஆகிய பொய்கைகள் பற்பல. அவற்றில் எண்ண இனிக்கும் வண்ண வண்ண மலர்கள் பூத்துள்ளன. தாமரை மலர்கள் மங்கையரின் முகத்தைக் காட்டு கின்றன. செங்குமுத மலர்கள் அவர்தம் செவ்வாயினை நினைவூட்டுவன. நீலம், குவளை, நெய்தல் முதலிய பூக்கள் அவர்களின் விழியினைக் காண்பிப்பன என்று கற்பனை செய்து இயற்கையழகின் ஈடுபாட்டினைப் புலப்படுத்துகிறார்:

> ''வாவிதொறும் வண்கமலம் முகம்காட்டச் செங்குமுதம்
> வாய்கள் காட்டக்
> காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண்காட்டும்
> கழுமலமே'' (1-129-1)

பெண்களின் ஒவ்வோர் உறுப்பின் மென்மைத் தன்மையினை நோக்கி உரிய மலர்களை உவமை கூறும் இலக்கிய மரபினை இப்பாடலில் காண்கிறோம். பின்னால் தோன்றிய புலவர் ஒருவர், நங்கையின் எல்லா உறுப்புக்களையும் மென்மையான மலராகப் படைத்தவன் இதயத்தை மட்டும் வன்மையான கல்லாகப் படைத்துவிட்டானே என்று முரண்அணி தோன்றப்

பாடுதற்கும் இத்தகைய பாடல்கள் ஒருவகையில் முன்னோடி எனலாம்.

திருநாவுக்கரசர் அவதரித்த திருமுனைப்பாடி நாட்டினைப் புனைந்து பாடும் சேக்கிழார்க்கு மேற்சுட்டிய தேவாரக் கற்பனைகள் வழிகாட்டின என்பது தெளிவு.

காழிப்பதியின் மருதவளக் காட்சியைப் பாடிய சம்பந்தர் கடற்காட்சியையும் சுவை குன்றாமல் பாடியுள்ளார். கடலில் வாழும் சங்குகள் கடற்கரையில் வாழும் மீனவர்களின் குடிசைகளைத் தேடிவந்து முத்துக்களை ஈனும். இவ்வினிய காட்சியை,

''மீனாரும்,
வங்கம் மேவு கடல்வாழ் பரதர் மனைக்கே
நுளைமூக்கின்
சங்கம் ஏறி முத்தம் ஈனும் சண்பை நகராரே''
(1-66-1)

எனவரும் பாடலில் எழிலுறப் பாடியுள்ளார்.

மேலும், மலைபோல் எழும்பும் கடல் வெள்ளலின் அலைக் கைகளினால் கடல்படு பொருள்களாகிய முத்துக்களும் பவளங்களும் கரைக்கு வந்து சேரும் காட்சியும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. அதன் விளைவாக,

''...... அளக்கர் வரையார் திரைக்கையால்
தரளத்தொடு பவளம் ஈனும் சண்பை நகராரே''
(1-66-8)

எனவரும் இனிய கவிதை உருப்பெற்றது. இத்தகைய இயற்கைக் கொடை மிக்க நகரில் எழுந்துள்ள பெருமானும் அன்பர்க்கு வேண்டுவன வழங்கும் அருளாளன் என்ற குறிப்புப் பொருளும் தொனிக்கிறது.

மரக்கலங்களில் அயல்நாட்டுப் பொருள்கள் பல காழித் துறைமுகத்திற்கு வருதல் உண்டு. இக்காட்சியை,

''கலங்கள்தன் சரக்கொடு நிரக்கவந் தேறும்
கழுமலம் நினையநம் வினைகரிசறுமே''
(1-79-9)

என்று எழிற் கவிதையாக அமைத்துள்ளார். வரலாற்றாசிரியர்கள், அகழ்வாய்வு புரியும் ஆராய்ச்சியாளர் முதலியோர் திருப்பதிகங்களில் இடம்பெறும் குறிப்புக்களையும் கருத்திற் கொண்டு ஆராய்ச்சி மேற்கொள்ளின் பல வரலாற்றுண்மைகள் புலப்படுதற்கு வாய்ப்பு உண்டு. பூம்புகார் உலக வாணிக மக்களைக் கவர்ந்த துறைமுகமாக விளங்கியமை போலக் கழுமலமும் விளங்கியமை சம்பந்தர் தேவாரத்தினால் உறுதியாகிறது.

இளையர் உள்ளத்தை இயல்பாகவே இயற்கைக் காட்சிகள் கவர்தல் காணலாம். ஆண்டில் இளையராகக் கவிபாடும் ஆற்றல் படைத்த திருஞானசம்பந்தரின் பார்வையில் படும் இயற்கைப் பொருள்கள் வனப்புமிக்க கவிதையாக வடிவம் கொள்ளுதல் இயல்பே. எல்லாத் தலங்களிலும் ஈடுபாடு கொண்டிருப்பினும் சீர்காழி, திருவீழிமிழலை ஆகிய இரு பதிகளில் எல்லையற்ற அன்பு கொண்டவர் கவுணியர்கோன் ஆகிய சம்பந்தர். இவ்விரு தலங்களைப் பற்றி இவர் பாடிய பாடல்கள் மிகப்பல. எனவேதான், **'காழி பாதி வீழி பாதி'** என்று கூறும் பழமொழி கூட எழுவதாயிற்று.

திருவீழிமிழலையின் இயற்கைப் பொலிவில் நெஞ்சம் கொடுத்த சம்பந்தர் பல அரிய காட்சிகளைச் சொற்சித்திரங்களாகப் புனைந்துள்ளார். இந்நகர் பற்றிய எழிலோவியங்களைக் காண்போம்.

### மிழலையின் வனப்பு

திருவீழிமிழலை சோழநாட்டுத் தலங்களில் சுட்டத்தக்கது. இயற்கை அன்னை கொலுவீற்றிருக்கும் திருநகராக இப்பதி விளங்குகிறது. இவ்வூரில், ஓங்கிய மலைமிசை தவழும் முகில்கள் இடிக்கின்றன. இக்காட்சி முழவு வாசித்தல்போல் உள்ளது. பக்கவாத்தியம் பாங்குடன் அமைவதால் அழகிய மயில்கள் தோகையினை விரித்து ஆடுகின்றன. ஆடலுக்கு ஏற்றப் பாடல்களை வண்டுகள் ஒலிக்கின்றன. இக்கலைநிகழ்ச்சி நடக்கும் சோலையில் உள்ள காந்தள் மலர் விரிந்து கையேற்பதுபோல் காட்சிதர, கொன்றை தன் பொன்னாகிய மலரைப் பரிசாக வழங்குகிறது என்று இயற்கைப் பொலிவில் கலையழகையும் ஈகை உணர்வையும் எண்ணி மகிழ்ந்து பாடுகிறார் :

''வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல
நடமாட வண்டு பாட
விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள்
கையேற்கும் மிழலை யாமே'' (1-132-4)

கலைஞர்க்குப் பரிசளிக்கும் கொடைக்காட்சியும் இப்பாட்டில் காண்கிறோம். இத்தகைய ஒரு காட்சியைப் புறவம் என்ற பெயருடைய காழிப்பதியிலும் கண்டு காட்டுகிறார் சம்பந்தர்

''மாதவி மேய வண்டிசை பாட மயிலாடப்
போதலர் செம்பொன் புன்னைகொடுக்கும்
புறவம்மே'' (1-97-2).

குருக்கத்திக்கொடியில் உள்ள மலர்களில் தேன்கொள்ளும் வண்டுகள் இசைபாடவும் அவ்விசைக்கு ஏற்ப மயில்கள் ஆடவும் புன்னை மரங்கள் செம்மலர்களாகிய பொன்னைப் பரிசிலாக வழங்கும். இந்த இயற்கைக் காட்கியைப் பார்த்தாவது கலையைச் சுவைக்கவும் பாராட்டவும் மாந்தர் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற குறிப்பும் நுணுகி நோக்குவோர்க்குப் புலனாகும். கலைவல்லவர்க்குப் போதிய பொருள் கொடுத்துப் போற்றுதல் வேண்டும் என்ற கருத்தும் இக்காட்சி நமக்குக் காட்டுகிறது.

சம்பந்தரின் சமகாலத்தவரான அப்பர் பெருமான் இப்படி ஒரு காட்சியைத் தம் பாடல் ஒன்றில் தந்துள்ளார். அப்பாட்ல் வருமாறு :

''மின்காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை
யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டும் செழும்புறவின் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண் அவனென் சிந்தையானே''
(6-76-3).

இத்தாண்டகத்தில் இறையனார் பாடிய 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலைத் தருமி என்ற அந்தணன் பெற்று மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் முன்னிலையில் பொற்கிழி பெற்ற வரலாறு குறிப்பிடப்பெறுகிறது. சங்கப்புலவர்களில் இறையனார் என்பவர் ஒருவர். இவரையும் ஆலவாயில் அவிர்சடைக்கடவுள் ஆகிய இறைவனையும் ஒன்றாகக் கருதிய தமிழ்வாணர் சிலர் சுவைமிகுந்த ஒரு கதையினைப் புனைந்துவிட்டனர் என்றே தோன்றுகின்றது. வடமொழி மட்டுமே தெய்வமொழி என்று கருதிய முற்காலப் பல்லவர் காலத்தில், தென்மொழியாகிய தண்டமிழ் மொழியும் இறைத்தன்மை வாய்ந்து உயர்மொழியே என்ற குரலை மொழிப் பற்றாளர் உரக்க ஒலித்தனராதல் வேண்டும். இறையனார் களவியலும், அதன் உரையும் தோன்றிய வரலாறு இங்கு எண்ணற்பாலன. மூவகைச் சங்கங் களைப் பற்றிய செய்தியும். முதற்சங்கத்திலேயே திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த குமரவேளும் புலவர் களுடன் வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்த செய்தியும் இறையனார் களவியல் உரையில்தான் முதலில் காண்கிறோம். எனவே, கி.பி. 6, 7-ஆம் நூற்றாண்டளவில் இச்செய்தி சமயச் சான்றோர்களிடம் வலிமை பெற்றதால் அப்பரடிகள் ஈசனைச் சங்கப் புலவனாகப் படைத்துப் பரவுகின்றார். கல்லாடம் என்ற இலக்கியத்திலும் இச்செய்தி காணப்படுதல் இங்குச் சுட்டத் தக்கது.

புரவலர் இல்லையேல் புலமை வளர்வதில்லை. இதனை நன்குணர்ந்த அப்பரடிகள், கொன்றை பொன்னைக் கொடுக்கக் காந்தள் பெற்றுக்கொள்ளும் காட்சியை அமைத்தனர் எனலாம். கொன்றைமலர் ஐந்திதழ் கொண்டது. ஐந்தெழுத்தை நினை ஊட்டுவது. தூய பொன்னிறமாவது. செம்மேனி எம்மானின் வண்ணம் கொண்டது. காந்தள்மலர் கைபோன்றது, எனவே, இயல்பாக மலர்ந்திருக்கும் காந்தள் தன் கையினை விரித்துப் பரிசிலை ஏற்பதாகக் கற்பனை புரிதல் சம்பந்தர், அப்பர் பாடல்களில் மட்டுமன்றி நக்கீரதேவர் கவிதையிலும் காணப்படு கிறது. இக்கவிஞர் கோமான்,

''காந்தளங் கைத்தலங்கள் காட்டக் களிமஞ்ஞை
கூந்தல் விரித்துடனே கூத்தாடச்-சாய்ந்திரங்கி
ஏர்க்கொன்றை பொன்கொடுக்கும் ஈங்கோயே
செஞ்சடைமேல்
கார்க்கொன்றை ஏற்றான் கடறு''

என்று திருவீங்கோய்மலை எழுபது என்ற பிரபந்தத்தில் புனைந்துள்ளார். எனவே இங்ஙனம் இயற்கைக் காட்சியைப் படைத்துக் காட்டுதல் ஓர் இலக்கிய மரபாகக் கொள்ளத்தக்கது.

எண்ணுதற்கு இன்பமும் பயில்வதற்குச் சுவையும் பயக்கும் இன்னோரன்ன கவிதைகளில் படைப்பாளரின் திறமும் அழகியல் பாங்கும் முருகியல் உணர்வும் முற்றி விளங்குதல் சிறப்பாகச் சுட்டுதற்கு உரியது.

### இயற்கை வழிபடுதல்

இயற்கைக் காட்சிகளைக் கவிதைநலம் சிறக்கவும் கற்பனை வளம் கொழிக்கவும் பாடிய சம்பந்தர் விலங்குகள், பறவைகள் கூட மக்களைப்போல ஈசனைப் போற்றிப் பூசனை புரிந்தன என்று பத்திமை தோன்றப் பாடியுள்ளார். ஒருசில பகுதிகளை மட்டும் இங்குச் சுட்டுதல் சாலும்.

பெரும்பாலும் மலைமிசை உள்ள கோயில்களின் குரங்குகள் கூட்டமாய் வருதல் உண்டு. வழிபாடு புரியவரும் பத்தர்களிடம் பழம், தேங்காய் முதலியன பெறுதல் காண்கிறோம். எனின், சம்பந்தர் பார்வையில் அவை இறைவனை ஏத்துவதாகவே காட்சி தந்தன. எனவேதான்,

''மந்தி வந்து கடுவன்னொடும் கூடி வணங்கும்
வலிதாயம்'' (1-3-5)

என்று பாடினார். சுந்தரரும்,

''மந்தி கடுவனுக்கு உண்பழம் நாடி மலைப்புறம்
முந்தி அடிதொழ நின்ற சீர்முது குன்றரே'' (7-43-8)

என்றும்.

''மந்தி கடுவனுக்கு உண்பழம் நாடி மலைப்புறம்
சந்திகள் தோறும் சலம்புட்பம் இட்டு வழிபட''
(7-92-7)

என்றும் பாடுதல் காணத்தக்கது. ஒன்றிலும் நில்லாது அங்கும் இங்கும் அலைபாயும் மனத்தைக்கூட, குரங்கு என்று கூறும் இலக்கிய மரபு உண்டு. அலையும் மனத்தை ஒன்றில் நிறுத்தி ஓர் உணர்வில் அழுந்தி நிற்றலே வழிபாட்டின் உண்மை வடிவம். இதனைச் சுட்டுதல்போல் மந்தியும் கடுவனும் சேர்ந்து வழிபடும்

தலம் வலிதாயம் என்ற குறிப்பு அமைந்துள்ளது. அன்றியும், குரங்குகள் கூட அலைதல், திரிதல் இன்றி ஒருமுகப்பட்டு ஒன்றையே நோக்கி உள்ளன. அவற்றைப் பார்த்தாவது ஆறறிவு படைத்த மாந்தர் அகவுணர்வை ஒருவழிப்படுத்தி இறைவனை ஏத்துதல் கூடாதா என்று அறிவுறுத்துதல் போலவும் மேற்சுட்டிய இயற்கைக் காட்சி இலங்குகிறது எனலாம்.

தொல்காப்பியர் ஆறறிவு படைத்த மனிதர்களுடன் குரங்கு, யானை ஆகிய விலங்குகளையும் ஒருங்குவைத்துக் கருதியுள்ளார்.

> ''மக்கள் தாமே ஆறறி வுயிரே
> பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே''
> ''ஒருசால் விலங்கும் உளவென மொழிப''
>
> (தொல். பொருள். 577-8)

இளம்பூரணர், 'அவையாவன கிளியும் குரங்கும் யானையும் முதலாயின' என்று குறித்தல் காண்க. டார்வின் முதலிய நவீன விஞ்ஞானிகள் கூட குரங்கிலிருந்து பரிணாமப்பட்டு மனிதன் தோன்றினான் என்று எண்ணினார். பழங்கற்கால மனிதர்கள் யானைபோல் பேருருப் பெற்றிருந்தனர். விலங்குகளில் கையுடைய விலங்கு யானை மட்டுமே. மற்ற விலங்குகளுக்குப் பின்கால்களுக்கிடையே பாலூட்டும் மடி உண்டு. எனின், பிடி யானைக்கு முன்னங்கால்களின் இடையே இருத்தல் நோக்கத்தக்கது. மனிதப்பிறவியின் சாயலை இது நினைவூட்டுகிறது. அறிவுத்திறத்தில் குரங்கினைப்போல, யானையும் சிறந்துநிற்றல் காணலாம். யானையும் இறைவனை வழிபடும் பேறு பெற்றுள்ளது. அதனால் திருவானைக்கா என்றே தலமும் பெயர் பெற்றமை சுட்டத்தக்கது. பூத்துக் குலுங்கும் வேங்கையின் நறுங்கொத்துக்களை ஒடித்து மத்தகத்தில் சுமந்து வந்து பிடியும் களிறும் குறும்பலாநாதரைப் பரவின என்று ஒரு பாடலில் குறித்துள்ளார் சம்பந்தர். (207.8). புலர்காலையில் அவை பொய்கையில் நீராடி மலர்கொண்டு வணங்கிய திறத்தை,

> ''பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
> விடியலே தடம்மூழ்கி விதியினால் வழிபடும்''
>
> (3-26-1)

எனவரும் பாடற்பகுதி சுட்டுகிறது. மனிதனைப் போலவே விலங்குகளும் இறையுணர்வு பெற்று வழிபாடு புரிந்தன என்பது

விந்தையாக இருக்கலாம். எனின், கற்பனை என்று கருதாமல் சம்பந்தர் காலத்து நிலை என்று எண்ணுதல் சாலும்.

உலகியலில் மாந்தர்க்கிடையே பல குழுப்பகுப்பும் பகைமையும் காணப்படுதல் போல் விலங்கு, பறவை முதலிய உயிர் வகைகளிலும் இருத்தல் உண்டு. எனினும், இறைவன் திருமுன்னர் வேற்றுமை நீங்கி, பகை உணர்வு அகன்று ஒருணர்வுடன் திருவடியைப் போற்றின என்று சம்பந்தர் பாடுகிறார்:

''புலியும் மானும்,
அல்லாத சாதிகளும் அங்கழல்மேல் கைகூப்ப அடியார் கூடிச்
செல்லா அருநெறிக்கே செல்ல அருள்புரியும்
திருநணாவே'' (208-6)

திருநணா என்பது தலத்தின் பெயர். உண்மையான பத்திமை வாய்ந்தவர்க்குப் பகையும் முரணும் இல்லை என்பதை இப் பாடல் நமக்கு உணர்த்துகிறது. அன்றியும், விலங்குகளைக் கண்டாவது மாந்தர் நேயத்தால் இணைந்து ஒன்றுபட்டு விளங்கவும் எல்லோர்க்கும் முதல்வனாகிய பரம்பொருளை எண்ணி ஏத்தவும் கற்றுக் கொள்வார்களாக என்ற குறிப்பும் தோன்றுகிறது.

கோயில்களின் மருங்கிருக்கும் சோலைகள், நந்தவனங்கள், இளமரக்கா. நீர்நிலைகள் முதலியவற்றில் வாழும் பல்வகைப் பறவையினங்களும் ஆரவாரம் செய்தல் உண்டு. இவையாவும் பல்வேறு குரல்களில் பரமனைத் தோத்திரம் செய்தன என்றே திருஞானசம்பந்தரின் அருட்செவியில் ஒலித்திருத்தல் வேண்டும். எனவேதான்,

''பகரத் தாரா அன்னம் பகன்றில் பாதம் பணிந்தேத்தத்
தகரப் புன்னை தாழைப் புனல்சேர் சண்பைநகராரே'
(1-66-3)

என்று பாடினரோ எனக் கருதுகிறோம். பல்வேறு உயிரினங்களும் பேசும் இயற்கை மொழியினை இச்சிறிய பெருந்தகை அறிந்தவராதல் கூடும். சேரமான் பெருமாள் நாயனார் இத்தகைய ஞானம் பெற்றவர் என்பதைப் பெரியபுராணம் சுட்டுகிறது. அணிநூலார், கவிஞர்கள் தம் குறிப்புக்களை இயற்கையின் செயல்களுக்கு ஏற்றிக்கூறும் இயல்பினர் என்பர்.

இவர்வழி நோக்கின் தற்குறிப்பேற்றவணி தோன்றச் சம்பந்தர் பறவைகளின் பல்குரல் வழிபாட்டினைக் குறித்தவர் என்று கொள்ளுதல் வேண்டும்.

மேலே சுட்டப்பெற்ற இளம்பூரணர் உரையில் குரங்கு, யானை முதலியவற்றுடன் கிளியும் ஆறறிவு படைத்த மனிதருடன் ஒருங்கு வைத்து எண்ணத்தகும் என்ற கருத்தின்படி கிளிகளின் பத்திமைத் திறத்தினையும் அருளாளர்கள் பாடி யிருத்தல் நோக்கத்தக்கது. அந்தணர்கள் மிகுதியாக வாழும் திருவீழிமிழலையில் பொழிலில் வைகும் கிள்ளைகள் வேத விற்பன்னர்கள் நாள்தோறும் மறையோதும் ஓசையினைச் செவிமடுத்துத் தாமும் ஓதின. அன்றியும் வேதங்களுக்குப் பொருள்கூறும் ஆற்றலும் பயிற்சியின் பயனாய்ப் பெற்றிருந்தன என்னும் செய்தியை,

''பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும்
ஓசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்
சொல்லும் மிழலை யாமே'' (1-131-1)

எனவரும் பாடலில் சம்பந்தர் குறித்துள்ளார். பெரும் பாணாற்றுப்படையில், அந்தணர் அகத்துள்ள கிளிகள் மறை பயிலும் பாங்கினைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் சுட்டினார் (300.1). அக்குறிப்பினின்றும் ஒருபடி உயர்ந்த கற்பனையினைச் சம்பந்தர் பாடலில் காண்கிறோம். எனின், சுந்தரர் காணும் பைங்கிளி தமிழ்பாடும் ஆற்றல் பெற்றது, திருநின்றவூர்ப் பதிகத்தில்,

''திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியும்
தெய்வத் தென்திரு நின்றி யூரானே'' (7-65-2)

எனச் சுட்டுதல் காணத்தக்கது. அகத்திணை, புறத்திணை என்ற மரபுகளைக் கொண்ட செந்தமிழ்ப் பாசுரங்கள் தெரிந்த பச்சைக் கிளிகள் தெய்வமணம் கமழும் திருநின்றியூர்ப் பொழிலில் இருந்தன என்பதால், அவ்வூர் மக்கள் பழந்தமிழ் இலக்கியங் களைப் பயிலும் பாங்கும், அவற்றைக் கேட்டிருக்கும் கிளிகளும் திருப்பிச் சொல்லும் திறமும் இப்பாடற் பகுதியினால் உய்த் துணரலாம். மற்றுமொரு பாடலில்,

''பசுங்கிளி சொல் துதிக்க'' (7-16-8)

என்று கலயநல்லூர்க்கண்ணுதலானைப் பரவிப் போற்றிய செய்தியையும் சுந்தரர் சுட்டினார்.

சேக்கிழார் காலத்தில் கிளிகள் பதிகங்கள் பாடின, அவற்றைப் பூவைகள் (நாகணவாய்ப்பறவை, மைனா) கேட்டு மகிழ்ந்தன. இத்தகைய காட்சியை திருவாரூரில் வைத்துக் காட்டுகின்றார்:

''உள்ளம் ஆர்உரு காதவர் ஊர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்'' (பெரிய 1-3-8)

இங்ஙனம் பாடுதற்குத் திருமுறைப் பாசுரங்களில் சேக்கிழார்பெருமான்கொண்ட மீக்கூர்ந்த ஆர்வமும் அன்புமே காரணமாகத் தோன்றினும் திருவாரூர்ச் சைவர்கள் திருமுறை ஓதும் நாவினராதலின் அவர்தம் இல்லங்களில் வளர்க்கப்பெறும் கிள்ளைகள், அவர்கள் பாடும் திருப்பதிகங்களைத் தாமும் கேட்டுப் பாடின என்றும் அவற்றை உடன் வளர்வனவாகிய பூவைகள் கேட்டு மகிழ்ந்தன என்றும் எண்ணுதல் கூடும். அருளுருவான அப்பரடிகளின் திருவடியைக் கண்ணுற்ற கிளிகளும் பூவைகளும் 'அரகர' என்ற சிவமுன் பயில்மொழி பகர்ந்தன என்பர் சேக்கிழார் (21.160), அன்றியும் கிளிகளின் மொழியாற்றல் சங்க காலத்திலிருந்து சம்பந்தர், சுந்தரர், சேக்கிழார் காலங்களில் கற்பனை வண்ணம் பெற்றுப் புனைந்துரைக்கப் பெற்ற இலக்கிய மரபு புலனாதல் காணலாம். கிள், கிள, கிளத்தல் என்ற வேர்ச்சொல் பேசுதல் என்று பொருள்தரும். பேசும் பறவைக்குக் கிள்ளை, கிளி என்ற பெயர்கள் இவ்வேர்ச் சொல்லினின்றும் தோன்றின என்று எண்ணலாம், நன்றாகவும் அழகாகவும் பேசும் பெண்ணைக் கிளியைச் சுட்டும் தத்தை என்ற பெயர் தந்து அழைத்தலைச் சீவகசிந்தாமணியால் அறியலாம், அருணகிரிப் பெருமான் கிளியுருவில் இருந்து கந்தரனுபூதி பாடிய வரலாறும் இங்கு இயைபு கருதி எண்ணற்பாலது.

பறவை, விலங்கு, செடி, கொடி முதலிய தாவர சங்கமங்கள் ஆகிய இயற்கைப் பொருள்கள் இறைவனை ஏத்திப்பரவின என்ற திருமுறைச் செய்தி கற்பனையாகத் தோன்றினாலும் ஓர் அரிய மறைபொருளை உணர்த்துவதாகக் கொள்ளுதற்குரியது. எவ்வகை உயிர்களையும் வினைக்கீடாகப் பல்வேறு உடல்களில் சேர்த்து வினைப்போகம் உண்பித்து

முடிவில் தன்னை அடையச் செய்யும் அளப்பிலா அருளாளனாக இறைவன் திகழ்கிறான் என்ற உண்மை சைவசித்தாந்தத்தின் முடிந்த பொருளாகும். எனவே, பல்வேறு உயிர்வகையும் தத்தம் நிலைக்கேற்பப் பரமனைப் பரவுதல் உண்டு என்பது சித்தாந்திகட்கு உடன்பாடான கருத்தாகும். இலக்கிய நோக்கில் அணுகுவோர்க்கு உயர்வு நவிற்சி, தற்குறிப்பேற்றம், கற்பனை எனத் தோன்றும் இயற்கைக் காட்சிகள் மெய்ப் பொருளியல் நோக்கில் நுணுகி எண்ணுவோர்க்கு வழிபாடாகவே தோன்றும்.

இனி, அப்பர் பெருமானின் அருளிச் செயல்களில் மிளிரும் இயற்கைக் காட்சிகள் சிலவற்றை இங்குக் காண்போம்.

**அப்பரின் இயற்கைக் காட்சி**

அனுபவம் கனிந்த அப்பர் பெருமானின் பாடல்களில் இறைவனின் எழிற்கோலத்தை வருணித்துக் கூறும் பகுதிகளும், அவன் அருட்செயல்களையும் மறக்கருணையினையும், புலப் படுத்தும் பகுதிகளுமே மிகுதியாக உள்ளன. எனின், ஈசன் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தலங்களையும் பதிகளை யும் அவற்றைச் சூழ்ந்திருக்கும் சோலைகள், பொழில்கள் முதலியவற்றையும் பாடியுள்ள பகுதிகளினால், இயற்கைக் காட்சியில் அப்பர் அடிகளுக்கு இயல்பில் அமைந்திருந்த ஈடு பாட்டினை நன்கு உணர்தல் இயலும். முதலில் தலங்களை வருணிக்கும் காட்சிகள் சிலவற்றைக் காண்போம்.

**கெடில வீரட்டம்**

சூலைநோய் தவிர்த்துத் தன்னை ஆண்டு கொண்ட திருவதிகை வீரட்டானர் கோயில் கொண்டு விளங்கும் பகுதியின் வனப்பினை அப்பர் அருமையாகப் பாடியுள்ளார். கெடில நதியின் வடகரையில் இக்கோயில் திகழ்வது. இறைவன் புரிந்த எட்டு வீரச் செயல்களில் திரிபுரதகனம் செய்த தலம் திருவதிகை என்பர். வீரம்+தானம் என்பது வீரட்டானம் என்று வந்தது. தானம் என்பது இடத்தைக் குறிக்கும் ஸ்தானம் என்ற வட சொல்லின் தமிழ்வடிவம் கெடிலநதியில் வெள்ளம் பெருகி வருகிறது. மணிகளை அடித்துவரும் திரைப்பெருக்கினை, **'மணிநீர்த் திரைத்தொகுதி'** என்று சுட்டுகிறார். அலைத் தொகுதி எழுந்து விழுந்து மேலும் எழுந்து புரளும் காட்சி ஒரு வகையில் நோக்கின் ஒளிவீசும் வாளினைச் சுழற்றுதல்போல் உள்ளது. அதுவே ஆடும் ஊசலைப்போலவும் மறிந்தும்

அசைந்தும் காட்சி தருகிறது. அந்த ஊசலில் ஒளிபொருந்திய இறக்கையுடைய அன்னம் ஆடிய பின்னர்க் கரையில் உள்ள சோலையில் உறங்கும். நீலமலர்களில் உள்ள தேனைப்பருகிய வண்டுகள் பண்ணிசைக்கின்றன. பாடற்பரிசாகத் தான் அடித்துக் கொணரும் மணிகளைக் கெடிலம் வீசும். இத்தகைய இயற்கை எழில் தவழும் காட்சியை,

> ''மாசில்ஒள் வாள்போல் மறியும் மணிநீர்த் திரைத்
> தொகுதி
> ஊசலை ஆடியங் கொண்சிறை அன்னம்
> உறங்கலுற்றால்
> பாசறை நீலம் பருகிய வண்டு பண்பாடல் கண்டு
> வீசும் கெடில வடகரைத்தே எந்தை வீரட்டமே''
> (4-104-1)

எனச் சொல்லோவியம் செய்துள்ளார் அப்பரடிகள். வீரர்கள் வாளைப் புரட்டுவதுபோல் அலைத்தொகுதி புரண்டு எழுந்து வருகிறது. அதுவே ஊசலாகக் காட்சிதருவதால், அன்னம் அதன்மிசை தவழ்தல் ஆடல்புரிதல் போல் உள்ளது. சில நிலை களில் அலைமிசை இவரும் மீன்களைக் கவர்தற்குக்கூட நீர்ப் பறவைகள் வருதல் உண்டு. ஆடிக் களைத்தபின் ஆற்றின் அருகில் உள்ள சோலையில் உறங்கும். 'அங்கு' என்ற சொல் லாற்றலினால் இங்ஙனம் பொருள் கொள்ளப் பெற்றது. பாசறை என்பது பசிய அறை போல் காட்சிதரும் பொழில் களையாகும். நீலமலர்களில் உள்ள தேனைப்பருகி என்ற கருத்தினை 'நீலம் பருகி' என்றார். நீலம் இங்கு ஆகுபெயராக அதில் தோன்றும் தேனைச் சுட்டியது. மதுமயக்கத்தால் வண்டுகள் பாடும் என்பது ஒரு கவிமரபு. இத்தகைய எழிலார்ந்த வீரட்டம் வடகரையில் திகழ்வது. வீரட்டானம் என்ற பெயர் வீரட்டம் என்று மரூஉ வழக்கமாகப் பயின்றுள்ளது.

### திருநல்லூர்ப் பூஞ்சோலை

திருநல்லூர் இறைவனை வழிபடுதற் பொருட்டு நாவுக்கரசர் இத்தலம் நோக்கி வருகிறார். அவர் கண்ணைக் கவர்வன அங்குப் பொலிவுடன் காட்சிதரும் பூஞ்சோலைகளே ஆகும். தெய்வத் தன்மை பொருந்தியதும் கண்டாரால் விரும்பப்படுவதுமாகிய செந்தாமரை மலர்களும், எழில்மிகும் செங்கழுநீர்ப் பூக்களும், நெய்தற் பூக்களும், ஒளிவளரும் கோங்க மலர்களும், குரா, மகிழம், சண்பகம், கொன்றை, வன்னி முதலியவற்றின் காட்சியும் அப்பர் பெருமானின் உள்ளத்தில் தெய்வீக உணர்வை

மிகுவித்தனவாதல் வேண்டும். நீண்ட கொடிகள் கட்டப்பெற்ற மாட கூடங்கள்மலிந்த மறையோர்களின் நல்லூர் இயற்கை எழில்மிக்கது. இங்கே கோயில் கொண்ட உமையொருபாகனை நினைந்து வழிபடுவோம் என்று பாடுகிறார்.

''திருவளர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொள் நெய்தல்
குருவமர் கோங்கம் குராமகிழ் சண்பகம் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாடம் மலிமறை யோர்கள்நல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை உள்குதுமே''
(4-97-10)

இப்பாடலில் தன்மைநவிற்சி அணி தோன்ற இயற்கைக் காட்சியைச் சொல்லோவியம் செய்துள்ளார் அப்பரடிகள். இதன் முதலடியின் முற்பகுதி மணிவாசகப் பெருமானின் திருச் சிற்றம்பலக் கோவையாரின் முதற்பாடலின் முற்பகுதியுடன் ஒத்து வருதல் உன்னற்பாலது.

## ஒற்றியூர் எழில்

தொண்டை நாட்டுத் தலங்களில் அடியார்கள் பலரையும் ஈர்த்தது திருவொற்றியூர் ஆகும், நெய்தல் மருதம் ஆகிய இருவகை வளமும் கொழிக்கும் இயற்கைச் சூமிழலில் இலங்கும் இத்தலத்தினை வழிபடுதற்கு அப்பர் அணுகுகிறார். கடல் அலைகள் எற்றும் கரையில் ஒற்றியூர் விளங்குகிறது. அலைக் கைகளில் அள்ளிவரும் உயரிய வளையும் முத்துக்களும் கரைக்கு வந்து சேர்கின்றன. இயற்கையாகக் கடல், முத்துக்களை வழங்கும் கொடைச்செயல் தன்னை வந்து வழிபடும் அன்பர்க்கு ஈசன் அருள்வழங்கும் அன்புச்செயலைக் குறிப்பாகச் சுட்டுகிறது. நெய்தல் வளம் காட்டும் பாடற்பகுதியைக் காண்போம்:

''அலைகொள் முந்நீர்,
மல்லல் திரைச்சங்க நித்திலம் கொண்டுவம் பக்கரைக்கே
ஒல்லைத் திரைக்கொணர்ந் தெற்றுஒற்றி யூருறை உத்தமனே'' (4-86-2)

ஒற்றியூரின் ஒருபகுதி மருதவளம் சான்றது. வளம் சுருங்காத இவ்வூரில் கன்னலும் செந்நெல்லும் கழனிகளில் விளைந்து வளம்

பயக்கும். அவற்றின் அருகில் ஆங்காங்கே சோலைகள் தழைத்து நின்று இன்பம் தரும். இத்தகைய எழிற்காட்சியை,

> ''......வாரிகுன்றா
> ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி அருகணைந்த
> சோலைத் திருவெற்றி யூரைஎப் போதும்
> தொழுமின்களே'' (4-86-5)

எனவரும் பாடற்பகுதியில் காணலாம்.

## தில்லைப்பொலிவு

அப்பர் பெருமான் அத்தலின் ஆடல்காண ஆர்வத்துடன் தில்லைக்கு வருகிறார். ஞானத்தின் எல்லையாகிய தில்லையின் எம்மருங்கும் சோலைகள் நெஞ்சைக் குளிர்விப்பன. தில்லைச் சிற்றம்பலவனைத் '**தேனொத்து எனக்கு இனியான்**' என்று பாடும் அப்பருக்கு எழிற்காட்சியும் இனிமை பயந்தது. ஆதலின்,

> ''மஞ்சடை சோலைத் தில்லை'' (4-22-1; 23-9)
> ''நாறுபூஞ் சோலைத் தில்லை'' (4-22-2)
> ''வண்டுபண் பாடும் சோலை மல்கு சிற்றம்பலத்தே''
> (4-25-5)

என்று சிறப்பித்துப் பாடினார். சோலைகளுடன் பல்வகை மரங்களும் தில்லைப் பொலிவிற்கு ஏதுவாக அமையும் பாங்கினை

> ''பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடம் நெருங்கி
> எங்கும்
> வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல்
> தில்லைதன்னுள் (4-80-1)
> செய்ஞ்ஞின்ற நீலம் மலர்கின்ற தில்லைச்
> சிற்றம்பலவன்'' (4-80-5)

எனவரும் பாடல்கள் எடுத்திசைப்பன.

## திருவாரூர் செழுங்காட்சி

சோழவள நாட்டின் மிகப்பழைய தலங்களுள் சிறப்பாகப் போற்றப் பெறுவது திருவாரூர் ஆகும். தியாகேசப் பெருமாள் கோயில் கொண்டிருக்கும் இத்தலத்திற்கு வழிபட வரும் அப்பர்

பெருமான் இந்நகரைச் சூழ்ந்துள்ள இயற்கை வளங்களில் பெரிதும் ஈடுபட்டு நோக்குகிறார். தூய சைவராயினும் ஆற்றிற்கு வளம் சேர்ப்பன அதில் வரும் மீன் வகைகள் என்பதை நன்கு அறிந்தவராகத் தோன்றுகிறார். எனவேதான்,

''முடங்குஇறால் முதுநீர் மலங்கு, இள வாளை,
செங்கயல், சேல், வரால் களிறு
அடைந்த தண்கழனி அணி ஆரூர் அம்மானே''(4-20-2)

என்று மீன் வளத்தைப் பாடுகிறார். இறால் மீன் முடங்கி இருப்பது. மலங்கு, வாளை, கயல், சேல், வரால் என்பவற்றுடன் களிறு என்ற சுறாமீன் வகையும் சுட்டப்பெறுதல் காணலாம். வாய்க்காலில் ஓடிவரும் நீரில் இம் மீன்களின் திரள் வயலுக்குள் வந்து அழகு செய்யும் ஆரூரின் சிறப்பினை அருமையாகப் பாடியுள்ளார். அருமை+ஊர் என்பதுதான் ஆரூர் என்று ஆகியுள்ளது. ஊரின் அருமைக்கும் பெருமைக்கும் மருதவளமே முதற்காரணம். எனவே மற்றொரு பாடலில் அங்கு விளையும் நெல்வகைகளின் சிறப்பினைப் பாடுகிறார்.

''பெரிய செந்நெல், பிரம்புரி, கெந்தசாலி, திப்பியம்
என்றிவை அகத்து
அரியும் தண்கழனி அணிஆரூர் அம்மானே!'' (4-20-7)

இத்தகைய எழில்நகரில் சோலைக்குயில்கள் கூவ மயில்கள் தோகை விரித்து ஆடல்புரியும் திறத்தினை,

''கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும்
ஆரூரரை'' (4-5-1)

எனவரும் சொல்லோவியம் புலப்படுகிறது.

திருவாரூரின் எல்லையற்ற பெருவனப்பினைப் பல்வேறு பாடல்களில் அப்பர் புனைந்து போற்றியுள்ளார். முக்கனிகளுடன் ஏனைய கனிவகையும் விரவி வளம்தரும் ஆரூர்அழகினை

''ஓங்குதெங் கிலையார் கழுகின் வாழை மாவொடு
மாதுளம், பல
தீங்கனி சிதறும் திருவாரூர் அம்மானே'' (4-20-4)

என்று சிறப்பித்துப் பாடுகின்றார். பலா என்பது பல என வந்தது, தெங்கு, கமுகு, வாழை, மா, மாதுளம், பலா ஆகிய தருவகைகள் நகரின் செழுமைக்கும் வளமைக்கும் பொலிவிற்கும்

ஆதாரமாக அமைவன. இவற்றின் வளம் மக்கள் வளத்திற்கு ஓர் அடையாளம்.

மற்றும் ஒரு காட்சியையும் அப்பர் அடிகள் வழங்தியுள்ளார். ஆறு கால்களையும் அகலவிரித்து வண்டும் தும்பியும் மலர்வதற்கு சமைந்துள்ள பூக்களில் ஊன்றிய அளவில் இதழ்வழியே வழியும் தேன் ஆறாகப் பெருகி ஓடும் என்கிறார்.

''ஏறி வண்டொடு தும்பியஞ் சிறகு ஊன்றவிண்ட
மலர்இதழ்வழி
தேறல்பாய்ந் தொழுகும் திருவாரூர் அம்மானே''
(4-20-5)

இத்தகைய இயற்கைக் காட்சிகள் முற்றத்துறந்த முனிவரையும் கவர்ந்துள்ள திறம் எண்ணற்பாலது. முருகியல் உணர்வும் அழகியற் சுவையும் இவர் பாடல்களை விழுமிய படைப்பாக உயர்த்திக் காட்டுவன எனலாம்.

வயல்களில் வளைகளில் பிரிந்துசென்ற நண்டுகள் பின்னர்த் திரும்பிவந்து சேர்ந்ததும் அவற்றைத் தேடிக்கண்டு களித்துப் பெடை நண்டுகள் மகிழும் குளிர்ந்த வயல்களைக் கொண்டது ஆரூர். இத்தகைய சிற்றுயிர் வகையின் இன்ப வாழ்வியலை,

''அளைப்பிரிந்த அலவன்போய்ப் புகுந்த காலமும்
கண்டு தன்பெடை
திளைக்கும் தண்கழனித் திருவாரூர் அம்மானே''
(4-20-9)

என்று பாடிப் பரவுகின்றார். பத்திமணம் கமழும் ஆரூரில் கலை மணம்சிறக்கவும் அருள்வளம் கொழிக்கவும் ஆதாரமாகஅமைவது நீர்வளம் பொருந்திய நிலவளமே என்பது தெளிவு.

**பிற தலங்களின் பொலிவு**

நீண்ட வருணனைகள் இன்றி ஒரொரு அருந்தொடரினால் இயற்கையின் எழிலைப் புனைந்து பாடும் எளிமையும் இனிமையும் அப்பர் தேவாரத்தின் தனிச்சிறப்பு எனலாம். ஒருசில சான்று களை இங்குக் காண்போம்;

''கனபவளம் சிந்தும் கழிப்பாலை'' 4-6-1

''கரும்பானல் பூக்கும் கழிப்பாலை 4-6-4

''கண்ணார் பூஞ்சோலைக் கழிப்பாலை 4-6-6

''பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும்
பழனத்தான்'' 4-12-1.

''பஞ்சிக்கால் சிறகன்னம் பரந்தார்க்கும்
பழனத்தான்'' 4-12-10.

என்று கடற்கரைத்தலம் ஆகிய திருக்கழிப்பாலையினையும், மருதத்தலமாகிய திருப்பழனத்தையும் சித்திரித்துள்ளார். இங்ஙனமே, குருகு இனங்கள் திரண்டு கும்மாளமிட்டு இறகுகளை உலர்த்தும் காட்சியைத் திருவலம்புரப் பதிகத்தில் குறித்தனர் (4.55.8). **திரைகள் முத்தால் வணங்கும் திருவிராமேச்சரத்தைப்** போற்றினர் (4.61.11).

**இயற்கையில் இறைமை**

எனினும் அழகியலுணர்வுடன் தெய்வ நோக்கும் திருநாவுக்கரசர்க்கு அமைந்திருந்த உண்மையினைத் திருவையாற்றுப் பதிகத்தில் பார்க்கிறோம். கயிலைக் காட்சி காணச் சென்ற அப்பர் பெருமான் இறைவனால் உணர்த்தப் பெற்ற வண்ணம் திருவையாற்றில் அப்புனிதக் காட்சியை அனுபவத்தில் காண்கிறார். குயில், அன்னம், மயில், அன்றில், ஏனம் (-பன்றி), மான், நாரை, கிளி, மாடு என்பன ஆணும் பெண்ணுமாய் இணைந்திணைந்து வரும் காட்சியை நோக்கும் அப்பருக்கு விண்டுரைக்க முடியாத அரிய அனுபவம் (Mystic Experience) வாய்த்தது. அதன் பயனாக உலகுக்கெல்லாம் அம்மையப்பராக ஒளிரும் பரம்பொருளைத் தரிசித்து அளவற்ற பேரானந்தம் எய்தினார். திருவையாற்றுப் பதிகத்தில் (4-3-1-11),

''காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன
கண்டேன்''

''கோழி பெடையொடும் கூடிக் குளிர்ந்து வருவன
கண்டேன்''

''வரிக்குயில் பேடையோ டாடி வைகி வருவன
கண்டேன்''

''சிறையிளம் பேடையோ டாடிச் சேவல் வருவன
கண்டேன்''

''பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன
கண்டேன்''

''வண்ணப் பகன்றிலோ டாடி வைகி வருவன
கண்டேன்''

''இடிகுரல் அன்னதோர் ஏனம் இசைந்து வருவன
கண்டேன்''

''கருங்கலை பேடையோ டாடிக் கலந்து வருவன
கண்டேன்''

''நற்றுணைப் பேடையோ டாடி நாரை வருவன
கண்டேன்''

பைங்கிளி பேடையோ டாடிப் பறந்து வருவன
கண்டேன்''

''இறைமண நாகு தழுவி ஏறு வருவன கண்டேன்''

எனவரும் கோலக் காட்சிகளில் தெய்வீகப் பொலிவினை அப்பர் பெருமான் கண்டு பெற்ற அனுபவத்தினை ஒவ்வொரு பாடலின் அடிதொறும், **''கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறி யாதன கண்டேன்''** என்று தொடர்ந்து மொழிவதால் உணரலாம். உலகப் பத்தி இலக்கிய வரலாற்றில் இத்தகைய வியப்புக் காட்சி அப்பரைத் தவிர அடைந்தவர் இலர் என்றே தோன்றுகிறது.

சமயக்குரவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகை யான காட்சியைத் தந்து ஆட்கொண்ட பரம்பொருள் அப்பர் பெருமானுக்கு இத்தகைய இயற்கைப் பொலிவினைத் தோன்றச் செய்து படைப்பின் மறைபொருளை (இரகசியத்தை) உணர்த்தி மெய்ப்பொருளின் முடிந்த பயனையும் புலப்படுத்தியருளியதிறம் எண்ணுந்தொறும் வியப்பும் இன்பமும் ஒருங்கே வழங்குதல் காணலாம்.

இதுகாறும் அப்பர் தேவாரத்தில் இயற்கையின் எழிலும், இறைமையும் தெளிவாக உணர்த்தப்பெற்ற திறம் கண்டோம். இனி, சுந்தரர் தேவாரத்தில் காணப்பெறும் இயற்கைக் காட்சிகள் சிலவற்றை நோக்குவோம்.

## சுந்தரரின் இயற்கை ஈடுபாடு

திருஞான சம்பந்தரைப் போலவே சுந்தரர் இயற்கைப் படைப்பில் எழில் கொஞ்சும் மலர்கள், சோலைகள், மரங்கள், பறவைகள் முதலியவற்றின் காட்சியில் பெரிதும் ஈடுபட்டவர். அத்தகைய காட்சிகளைச் சுந்தரச் சொற்களால் செந்தமிழ் ஓவியம் புனைந்தவர். இயற்கைப் பொலிவுடன் விளங்கும் திருத்தலங்களை எண்ணிப் பாடியவர். இறைவனை அறிந்து வழிபடுதற்கு இயற்கையினை அறிந்து போற்றுதல் உறுதுணையாக விளங்கியது. ஆற்றுவளம் சேர்க்கும் அழகிய பதிகளைப் புனைந்து பாடும் சுந்தரரின் சொல்லோவியங்கள் சிலவற்றை நோக்குவோம்.

## கலயநல்லூரின் கவின்காட்சி

அரிசிலாற்றின் தென்கரையில் விற்றிலங்கும் திருத்தலங் களில் கலயநல்லூர் இயற்கை எழில் மிஞ்சுவது. வினா விடைப்பாங்கில் சுந்தரர் இத்தலத்திற்குரிய பதிகத்தினைப் பாடியுள்ளார். ஒவ்வொரு பாடலும் முற்பகுதியில் இறைவனின் சிறப்புக்களைக் கூறி, இத்தகைய பெருமைக்குரிய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் ஊர் யாது என வினவின், இவ்வகை இயற்கைப் பொலிவுடைய கலயநல்லூர் என்ற பாங்கில் தலத்தின் வனப்பு பாடலின் பிற்பகுதியில் சொல்லோவிய மாகப் புனையப் பெற்றுள்ள திறம் எண்ணி இன்புறுதற் குரியது. ஒருசில காட்சிகளைக் காண்போம்.

எழில் பொழியும் பொழில்களில் மலருதற்குரிய செவ்வி வாய்ந்த பேரரும்புகளின் அருகில் சென்று ஆண்வண்டுகள் இசை கூட்டவும், தொடர்ந்து பெண் வண்டுகள் இனிய பண்களை மிழற்றவும் அகமகிழ்ந்து அழகிய மயில்கள் தோகை விரித்து ஆடவும், இவ்வினிய காட்சியைச் சுவைத்தபடி வயல் களில் உள்ள கரும்புகளின் அருகே நீர்நிலைகளில் தவழும் கருங்குவளை மலர்கள் கண் வளரும். காலைக் கதிரவனைக் கண்டு தாமரைகள் முகமலரும் என்று பாடுகிறார்.

''அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ்
அயலின்

கரும்பருகே கருங்குவளை கண்வளரும் கழனிக்
கமலங்கள் முகமலரும் கலயநல்லூர் காணே''
(7-61-1)

காரிகையரின் கண் போன்றிருப்பது கருங்குவளை. முகம் போன்றிருப்பது செந்தாமரை. ஆதலின் இவ்விரு மலர்களும கதிரவனைக் கண்டு முறையே கூம்புதலும் விரிதலும் நோக்கிக் 'கண் வளரும்' என்றும் 'முகம் மலரும்' என்றும் நயம்பட இயம்பினார். மலரின் மணமும் மதுவும் நோக்கி வண்டுகள் இசைத்தலும், கோலமயில்கள் ஆடல் புரிதலும் கவிஞர்களை இயல்பாக ஈர்ப்பன. ஒருபாதிப் பாடலில் சிறப்பித்துச் சொல்லப் பெறும் இறைவனுக்கு இணையாக, மறுபாதிப் பாடலில் இயற்கைப் பொலிவினைச் சித்திரித்துக் கூறுதலின், இறைவனை யும் இயற்கையினையும் ஒருங்கே உணர்ந்து பாராட்டும் சுந்தரரின் இறையுணர்வு கலந்த கவியுள்ளம் தெளிவாக விளங்குகிறது.

இதே பதிகத்தில் இடம்பெறும் இன்னொரு கவின்காட்சியை நோக்குவோம். சோலைகளில் மலிந்திருக்கும் குயில்கள் இன்குரல் எடுத்துக் கூவுகின்றன. கோலமயில்கள் கூத்தாடுகின்றன. பல்வேறு வண்டினங்கள் இசைகூட்டிப் பாடுகின்றன. அடியார்கள் பாடும் பாசுரங்களைக் கேட்டிருக்கும் பைங்கிளிகள் மறவாது இறைவனைத் துதிபாடுகின்றன. கசிந்த மனத்தவராகிய அடியவர்கள் காலை, மாலை எப்பொழுதும் கலயநல்லூர்க் கண்ணுதலானின் கழலடியைப் பணிந்து பரவிப் போற்று கின்றனர். இறைவழிபாட்டில் இயற்கைப் பின்புலம் அமைந் திருக்கும் எழிலைச் சுந்தரர் அனுபவித்து உளங்குளிர்ந்து பாடுகிறார்.

''சோலைமலி குயில்கூவக் கோலமயில் ஆலச்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளி
சொல்துதிக்கக்
காலையிலும் மாலையிலும் கடவுள்அடி பணிந்து
கசிந்துமனத் தவர்பயிலும் கலயநல்லூர் காணே''
(7-16-8)

காட்சிப் புனைவுக்கேற்ப சொல்லழகும் பண்ணழகும் கலந்து பயில்வார்க்குப் பாடல் பெருவிருந்தாக அமைதல் சுட்டத் தக்கது. அரிசிலாற்றில் அடித்துவரும் இயற்கைப் பொருள் களையும் அழகுற அடுக்கிக் கூறுகிறார் சுந்தரர். யானைமருப்பு, அகில், சந்தனம் முதலியவற்றை அலைகள் சுமந்து வருவன (4). முல்லை, மல்லிகை, செண்பகம் ஆகியவற்றின் கொடி

களும் (6). பல்வகைப் பழங்கள், மணிவகை, பொன், பாதிரி, சந்து, அகில், கேதகை முதலியவற்றையும் ஆறு சுமந்து வருகிறது (7).கவிதையாக இருப்பதால் ஒரு பாடலில் சொல்லப் பெற்ற பொருள்களில் சில வேறு பாடலிலும் மீண்டும் கூறப்படுகின்றன. ஏலம், இலவங்கம்(9). வெண்கவரி,கரும்பீலி, வேங்கை, கோங்கு முதலியனவும் ஆற்றில் மிதந்து கலயநல்லூர்க்கு வந்து சேர்வன (10). இத்தகைய காட்சிகளினால் மலைபடு பொருள்களையும் மற்ற திணைகளின் வளத்தையும் அரிசிலாற்றின் அலைகள் ஏந்திவரும் அழகு பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாக அமையும்.

## புத்தூர்ப் பொலிவு

அரிசிலாற்றின் தென்கரைத் திருத்தலங்களில் புத்தூர் என்பதும் சுட்டத்தகுவது. ஏனைய புத்தூர்களினின்றும் இதனை வேறுபிரித்துக் காட்டும் பொருட்டு இதனை **'அரிசிற்கரைப் புத்தூர்'** என்றே வழங்கி வந்தனர். மலைபடு பொருள்களும் மருத வளங்களும் அரிசிலாற்றில் அடித்து வரப்பெறும் அழகிய அருங்காட்சியில் சுந்தரர் ஈடுபட்டுப் பாடுகிறார். கலைமானின் கொம்புகள், யானையின் தந்தங்கள், மயிற்பீலிகள், வயிரம் பாய்ந்த அகில் மரங்கள் என்பன பெருவெள்ளத்தின் புதுவரவாக பொலிவோடு சுமந்துவரும் ஆற்றின் அழகிய சூழலில் ஒப்பிலா அழகன் ஆகிய ஈசன் எழுந்தருளியிருக்கும் வனப்புமிகு தோற்றத்தினை,

''கலைக்கொம்பும் கரிமருப்பும் மிடறிக்
கலவம்மயிற் பீலியும் காரகிலும்
அலைக்கும்புனல் சேரரி சிற்றென்கரை
அழகார்திருப் புத்தூர் அழகினிரே'' (7-9-1)

எனவரும் பாடலில் எழிலுறப் புலப்படுத்தியுள்ளார். மற்றுமொரு பாடலில் ஆற்றில் வரும் மீன்வகைகளைச் சுட்டுகிறார். கயல், சேல், வாளை, கெண்டை முதலிய மீன்கள் துள்ளிக் குதிக்கின்றன. முன்பு கூம்பி வாளா நின்ற அன்னம் முதலிய நீர்ப் பறவைகள் அவற்றைக் கொத்தும் குணத்தைக் காட்டும் காட்சியையும் புனைந்து பாடுகிறார்:

''இணங்கிக் கயல்சேல் இளவாளை பாய
இனக்கெண்டை துள்ளக் கண்டிருந்த அன்னம்

அணங்கிக் குணங்கொள் அரிசிற் றென்கரை
அழகார்திருப் புத்தூர் அழகனீரே'' (7-9-5)

இப்பாடலைப் படிக்கும் நமக்கு, 'கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து' என்ற வள்ளுவரின் வாய்மொழி நினைவுக்கு வருகிறது. ஒன்றிற்கு ஒன்று ஆதாரமாகவும் ஆகாரமாகவும் அமைந்துள்ள படைப்பு விந்தையினையும் பார்த்தறிகிறோம்.

கண்விழித்துப் பார்ப்பதுபோல் தோன்றும் வட்டப்புள்ளிகள் பொருந்திய பீலிகள், ஏலம் முதலிய நறுமணப்பொருள்கள், மணி, முத்து, பொன் முதலிய விலையற்ற உயர் பொருள்கள் யாவும் இவ்வாற்றின் அலைகள் எடுத்துவரும் அழகினையும் காண் கிறோம் (7-9-7).

இன்னோரன்ன காட்சிகள் பத்திப்பாடல்களுக்கு இலக்கியச் சுவை பயப்பனவாக இலங்குகின்றன. பாடிய அருட்கவிஞரின் படைப்பாற்றலையும் அழகியல் உணர்வையும் இவை எழிலுறப் புலப்படுத்தக் காணலாம்.

மலை, புறவு, மருதநிலம் முதலிய எல்லா இடங்களிலும் உள்ள தாவரங்களையும் மற்ற உயிரினங்களையும் அழித்துப் பொருளாக்க முயலும் நவீன சமுதாயத்தில், சுற்றுப்புறச் சூழலைத் தூய்மையாகவும் பொலிவாகவும் வைத்திருத்தல் வேண்டியதன் அவசியத்தைக் கற்பிக்கும் அறிவியல் (Ecology) இன்று பெரிதும் பேசப்படுகிறது. இயற்கை எழிலோடு இணைந்து இன்புற்று மனம் அமைதி பெற்று முழுமுதலைப் பணிந்து முறையாக வாழ்ந்த திருமுறை ஆசிரியர்களின் வாழ்வியல் இன்றைய மாந்தர்க்குப் புத்துணர்ச்சி தருவதாகுக!

சுந்தரர் தரும் இயற்கைக் காட்சிகள் பற்பல. மேலும் சிலவற்றை இங்குக் காண்போம்.

**கானாட்டு முள்ளூரின் காட்சி**

கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் விளங்கும் திருத்தலம் திருக்கானாட்டு முள்ளூர் ஆகும். இவ்வூரில் கோயில் கொண் டுள்ள இறைவனை வழிபடுவதற்கு வருகின்ற சுந்தரர் மருதவளக் காட்சியில் மனம் ஈடுபடுகிறார். இத்தலத்துக்குரிய பதிகப் பாடலின் அமைப்பும் கலயநல்லூர்ப் பதிக அமைப்பினைப் பெரிதும் ஒத்துள்ளது. பாடலின் முற்பகுதியில் இறைவனின் சிறப்பும் அருள்திறமும், பிற்பகுதியில் இயற்கைப் புனைவும் அமைந்து இன்பம் பயக்கும்.

கொள்ளிடம் பாய்வதால் மருதவளம் மிக்கது இவ்வூர், பாளைக் கமுகுகளின் ஈட்டமும் இளந்தெங்கின் தோட்டமும் எங்கும் திகழ்வன; தென்னங்கள்ளைப் பருகிய ஆண்வண்டுகள் இனிமையுறப் பாடவும் மயில்கள் தோகை விரித்து ஆடல் புரியவும் வளர்ந்திருக்கும் சோலை சூழ்ந்த கானாட்டுமுள்ளூரில் பரம்பொருளாகிய ஈசனைக் கண்டு கைகூப்பித் தொழும் பேறு பெற்றேன் என்று பாடுகிறார்:

''பாளைபடு பைங்கமுகின் சூழல்இளந் தெங்கின்
படுமதம்செங் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயில் ஆலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரில் கண்டுதொழு தேனே''
(7-40-4)

இயல்பாகவே வண்டின் பாடலும் மயிலின் ஆடலும் அமையினும், அவை பரமனின் திறம் குறித்தே அமைந்தன என்று அருள் உள்ளம் கொண்ட சுந்தரர்க்குத் தோன்றியிருக்கலாம். அத்தகைய பொழில்களின் நடுவே கோயில் கொண்டிலங்கும் இறைவனைக் கண்ணாரக் கண்டு தம் அன்பினையும் புலப் படுத்தினார்,

மற்றும் ஒரு இனிய காட்சியையும் சுந்தரர் படைத்துள்ளார், தழைத்திருக்கும் செந்நெல் வயலருகில் பெருமைமிக்க முத்துக் களை உடைய மென்மையான கரும்பின் கிடங்குகள் உள்ளன. அருகே ஒலிக்கும் வண்டுகள் கரும்பினில் தேன்கூட்டை அமைக் கின்றன. இங்ஙனம் வளம்கொழிக்கும் வயல்களும் பண்ணை களும் சூழ்ந்திருக்கும் கானாட்டு முள்ளூரில் கோயில் கொண்டிருக் கும் எண்டோள் ஈசனைக் கண்டு தொழுதேன் எனப் பாடுகிறார்:

''தழைதழுவு தண்ணிறத்த செந்நெலதன் அயலே
தடந்தரள மென்கரும்பின் தாழ்கிடங்கின் அருகே
கழைதழுவித் தேன்தொடுக்கும் கழனிசூழ் பழனக்
கானாட்டு முள்ளூரில் கண்டுதொழு தேனே''
(7-40-8)

இயற்கையினையும் பாடி, இறைவனையும் பாடி இன்புற்றார் சுந்தரர். இயற்கையின் பொலிவு திருக்கோயிலின் வனப்போடு சேர்ந்து அன்பர்க்குப் பெருவிருந்தாய் அமைதல் சுட்டுதற் குரியது. இயற்கையின் வளம் ஒருவகையில் திருவருளின் வளத்தைக் குறிப்பாக உணர்த்துவதாகக் கொள்ளுதல் கூடும்.

ஆற்றின் வளத்தைப் போற்றிப் பாடிய பகுதிகள் சுந்தரர் தேவாரத்தில் மிகப்பல. மேலைநாட்டுக் கவிஞர்களைப் போல ஆறு, மலை, கடல் என்று முழுமையும் இயற்கைப் பொருண்மை பற்றிப் பாடும் மரபினைத் தேவாரத் திருப்பதிகங்களில் காண இயலாது. எனினும், இயற்கையோடு இறைக்காட்சியை இயைத்துப் பாடும் இனிய கவிமரபு சிறந்து விளங்கக் காண்கிறோம்.

## பாண்டிக் கொடுமுடியின் பாங்கு

காவிரியின் தென்கரையில் திகழ்வது திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் தலம். இது கொங்குநாட்டுத்தலம் ஆகும். இக்கோயிலைக் குறுகி வழிபட்ட சுந்தரர் நமச்சிவாயத் திருப்பதிகத்தினை அருளிச் செய்தனர். இத்தலத்தின் எழில் வளத்தினை,

''நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெழில் பெற
நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதைமார் குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி'' (7-48-7)
''கொம்பின் மேல்குயில் கூவ மாமயில்
ஆடு பாண்டிக் கொடுமுடி'' (7-48-8)

எனப் புகழ்ந்து போற்றுதல் நோக்கத்தக்கது. இளமகளிர் காவிரிப்பெருக்கில் குளித்துக் களித்து நிற்கும் காட்சியையும் குறித்துள்ளார். ஆற்றங்கரையில் உள்ள மரங்களில் குயில்கள் கூவுதலும் மயில்கள் ஆடுதலும் செவிக்கும் விழிக்கும் விருந்தாக விளங்குவன.

## ஐயாற்றின் அழகு

காவிரிக்கரையில் வீற்றிருக்கும் மற்றொரு தலம் திருவையாறு. ஐயாறப்பன் அழகிய இயற்கைச்சூழலில் இனிய காட்சிதந்து அடியவர்க்கு அருள் பாலிக்கும் பெற்றியைப் பாடி மகிழ்பவர் சுந்தரர். கண்டியூரிலிருந்து ஐயாறு நோக்கிவரும் ஆரூரர், காவிரியில் வெள்ளப் பெருக்கினால் ஓடம், படகு முதலிய ஊர்திகள் செல்லஇயலாத நிலைநோக்கி ஓலமிட்டுப் பாடுகிறார். அத்தகு பாடல்களிலும் அலைக்கையினால் பொன்னி சுமந்து வரும் இயற்கைப் பொருள்களில் ஈடுபட்டுப் பாடுகிறார். ஒருசில சான்றுகள்:

''குழகா வாழைக் குலைத்தெங்கு கொணர்ந்து
கூரைமேல் எறியவே
அழகார் திரைக்காவிரிக் கோட்டத்து ஐயாறுடைய
அடிகளே'' (7-77-4)

''வார்க்கொள் அருவி பலவாரி மணியும் முத்தும்
பொன்னும்கொண்
டார்க்கும் திரைக்காவிரிக் கோட்டத்து ஐயாறுடைய
அடிகளே'' (7-77-6)

இத்தகு இயற்கைப்புனைவினை வெறும் பாடல்மரபு என்ற மட்டில் எண்ணாமல் அக்காலத்து வளநிலை சுட்டும் வனப்புறு காட்சிகள் என்று மதித்தல் சாலும்.

## முல்லைவாயில் வனப்பு

பாலியாற்றின் வடகரையில் விளங்கும் திருத்தலம் வடதிருமுல்லைவாயில். தொண்டைநாட்டுப் பொன்னியாகப் போற்றப் பெறுவது பாலியாறு. இக்காலத்து இதனைப் பாலாறு என்றே வழங்குவர். தொண்டை நாட்டினை ஆண்ட வேந்தன் ஒருவன் ஊர்ந்து சென்ற களிற்றின் காலில் முல்லைக் கொடி சுற்றிக்கொள்ள, அக்கொடியை அகற்றி மேற்செல்ல இயலாத நிலையில், தொண்டைமான் கீழே இறங்கித் தன் வாளினால் அக்கொடியினை வெட்டி விலக்க முயன்றான். அப்பொழுது நிலத்தில் இருந்து வெளிப்பட்ட சிவக்கொழுந் தினைக் கண்டு அவ்விடத்தில் கோயில் எடுத்து வழிபட்டான் என்பது பழைய வரலாறு. இச்செய்தியை சுந்தரர் குறிப்பிடு கிறார் (7.69.10), முல்லைக்கொடியினால் வெளிப்பட்ட சிவலிங்கமாதலின் இத்தலம் முல்லைவாயில் எனப் பெயர் பெற்றது. திருவாவடுதுறைக்கு அண்மையிலும் ஒருதலம் இப் பெயருடன் உள்ளது. அதனைத் தென்திருமுல்லைவாயில் என்றும் தொண்டைநாட்டுப் பதியினை வடதிருமுல்லைவாயில் என்றும் கூறுவர். மலைமிசையிருந்து மருதவயல் நோக்கி ஓடிவரும் பாலியாறு பல்வகை வளங்களையும் தாங்கிவரும் எழிற்காட்சியை,

''சந்தன வேரும் காரகிற் குறடும் தண்மயிற் பீலியும்
கரியின்
தந்தமும் தரளக் குவைகளும் பவளக் கொடிகளும்
சுமந்துகொண் டுந்தி

வந்திழி பாலி வடகரை முல்லை'' (7-69-5)

என்று இனிய சொல்லோவியமாகப் புனைந்துள்ளார் சுந்தரர்.

**நெல்வாயில் அரத்துறை**

திருப்பெண்ணாகடத்திற்கு அருகில் நிவாநதிக்கரையில் இயற்கைச் சூழலில் விளங்கும் திருக்கோயில் திருவரத்துறை எனப்பெயர் பெறும். ஊரின் பெயர் நெல்வாயில். திருவாமாத்தூர் ஈசனை வழிபட்டுத் தொண்டை நாட்டினைக் கடந்து வரும் சுந்தரர் அரத்துறை நாதரை அணுகுகிறார். உய்தற்குரிய உபாயத்தை அறிவித்தருளும்படி வேண்டுகிறார். இப்பதிகத்தின் பல பாடல்களில் நிவாநதியின் (வெள்ளாறு) வளம் பேசப் படுகிறது. சான்றாக,

''கல்வாய் அகிலும் கதிர்மா மணியும்
கலந்துந்தி வரும்நிவவின் கரைமேல்
நெல்வாயில் அரத்துறை நீடுறையும்
நிலவெண்மதி சூடிய நின்மலனே'' (7-3-1)

''கறிமா மிளகும் மிகுவன் மரமும்
மிகவுந்தி வரும் நிவவின் கரைமேல்'' (7-3-2)

''ஏலம் இலவங்கம் எழிற்கனகம்
மிகவுந்தி வரும் நிவவின் கரைமேல்'' (7-3-6)

எனவரும் பாடற் பகுதிகளைக் கூறலாம். வெள்ளாற்றின் வெள்ளத்தை நோக்கும் சுந்தர்க்கு அது தாங்கிவரும் இயற்கைப் பொருள்களே கருத்தைக் கவர்வனவாக இருந்தன என்பது தெளிவு.

சேரநாட்டுத் தலங்களில் சிறப்புற்றுத் திகழும் திருவஞ்சைக் களத்தில் கடற்கரைக் காட்சிகளையும் மரக்கலங்களின் இயக்கத்தையும் சுந்தரர் சுவையுறப் பாடியுள்ளார் (7.4).

இதுகாறும் எழுதியவற்றால் சுந்தரர் தேவாரத்தில் இயற்கைக் காட்சிகள் எழிலுறப் புனைந்து காட்டப்பெற்ற பாங்கினைத் தெளியலாம். இனி மாணிக்கவாசகரின் இயற்கைப்புனைவு பற்றிச் சிந்திப்போம்.

**மாணிக்கவாசகர் தரும் இயற்கைகாட்சி**

இயற்கையினைப் புனைந்து பாடிய வகையில் சம்பந்தரும் சுந்தரரும் ஒருநிரலில் வைத்துப் போற்றத்தக்கவர்கள். அப்பர்

அடிகள் இயற்கை ஈடுபாடு கொண்டவரேனும் கழிவிரக்கங் களைப் பாடிய பகுதியே விஞ்சிநிற்றல் காண்கிறோம். அப்பரைப் போலவே மாணிக்கவாசகரிடத்திலும் கழிவிரக்கப் பண்பே மிகுதி. தலங்களை வருணித்துப் பாடும் தேவார மரபினைத் திரு வாசகத்தில் காண்பது அரிது. கழுக்குன்றப் பதிகம், கோயில் திருப் பதிகம், கோயில் மூத்த திருபதிகம் எனவரும் பதிகங்கள் தலத் தொடர்புடையவை. அருந்தொடர், பண்பு, செயல் முதலிய தன்மையினால் பெயர் பெறும் பதிகங்கள் மிகுதி. இவற்றிலும் உத்தரகோசமங்கை, திருப்பெருந்துறை, தில்லை முதலிய தலக் குறிப்புக்கள் வருதல் உண்டு. மின்னல்கீற்றென ஓரிரு தொடர் களில் இயற்கைப் பொலிவினைத் தலத்துடன் இணைத்துச் சுட்டும் கவிமரபு மாணிக்கவாசகரின் பாடல்களில் காணப்படு கிறது. நீத்தல் விண்ணப்பத்தில்,

''அளிதேர் விளரி.
ஒலிநின்ற பூம்பொழில் உத்தர கோசமங்
கைக்கரசே'' (11)

''அணிபொழில்உத்தரகோசமங் கைக்கரசே'' (17)

என்று வண்டுகள் விளரிப்பண்பாடும் பூஞ்சோலை சூழ்ந்த தலம் உத்தரகோசமங்கை என்று எழிலுறப் பாடினார்.

இங்ஙனமே திருப்பெருந்துறையின் வனப்பினைத் திருவம் மானைப் பதிகத்தில்,

''தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்
துறையான்'' (1)

''செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்'' (15)

என்று இறைவனோடு இயைத்துப் பாடி இன்புற்றனர். பிறி தொரு பதிகத்தில் (23)

''சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ்
திருப்பெருந்துறை மேவிய சிவனே'' (9)

எனப் போற்றினார். இங்ஙனம் வரும் காட்சிகள் அரியன. இத்தலத்தின் வைகறைக் காட்சியைப் பிறகு காண்போம். தில்லையின் வனப்பினை,

''அணிகொள் தில்லை'' (1-3)

''குலாவு தில்லை'' (5)

''செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம்பலம்'' என்று கண்டபத்தில் செறிவாகப் பாடினார். (6)

மாணிக்கவாசகர் அருளிச்செய்துள்ள காமஞ் சான்ற ஞானப் பனுவல் ஆகிய திருச்சிற்றம்பலக் கோவையாரின் பாட்டுடைத் தலைவர் தில்லை நடராசப் பெருமான், எனினும் தில்லையின் இயற்கைச்சூழலை வருணித்துக் கூறும் பகுதிகள் மிகச்சிலவே. ஓரிரு சான்றுகள் காண்போம்.

''சிறைவான் புனல் தில்லைச் சிற்றம்பலத்தும்'' (20)

''பூஞ்சுனையார் புனல் தென்புலியூர்'' (19)

''குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை' (44)

புனலும் பொழிலும் சூழ்ந்த இயற்கை வனப்பமைந்த பதியாகத் தில்லை பரவப்பெற்றது. மாணிக்கவாசகர் வரலாற்றில் திருப் பெருந்துறை, உத்தரகோசமங்கை, தில்லை என்ற தலங்கள் மூன்றும் கூடுதலான முக்கியத்துவம் வாய்ந்தவை, குருந்த மரத்தின் நிழலில் குருமணியாக வந்த ஈசனிடம் உபதேசம் கேட்ட தலம் திருப்பெருந்துறை. உபதேச மொழிகளைச் சிந்தித்துத் தியானம் செய்து நிட்டை கூடிய தலம் உத்தரகோசமங்கை. ஆடலரசனின் இன்ப ஒளியில் இரண்டறக் கலந்த தலம் தில்லை. இவற்றைச் சூழ்ந்த இயற்கையினைப் புனைந்து பாடுவதைவிட இறைவனின் பொருள்சேர் புகழைப் பாடுவதையே நோக்கமாகக் கொண் டவர் மாணிக்கவாசகர்.

பறவை இனத்தில் குயில், கிளி ஆகியவற்றை விளித்துப் பேசும் வகையில் வாதவூரர் பாடிய குயிற்பத்து, திருத்தசாங்கம் என்ற பதிகங்களில் சிறுவருணனைக் காட்சிகள் அழகுற அமைந்துள்ளன. முதலில் குயில் பற்றிய கோலக் காட்சியை நோக்குவோம். பண்டைத் தமிழ்ப்புலவோர், 'வெயில் நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்' என்று ஓரடியிற் பாடி மகிழ்வர் (பெரும்பாண். 374). மாணிக்கவாசகரும் சிலவாகிய சொற்களில் குயிலின் பொலிவினைப் பாடிய பாங்கினைப் பார்ப்போம்.

## குயிலின் பொலிவு

பிரிவாற்றாது வாடும் தலைவியாகிய மணிவாசகர் தன்னிகரில்லாத் தலைவனாகிய ஆன்மநாயகனை வரும்படி

கூவுக என்று குயிலை நோக்கி வேண்டிக் கொள்ளும் வகையில் பாடப்பெற்றது குயில் பத்து. குயிலின் நீல வண்ணமும், இனிய குரலும் மாணிக்கவாசகரைக் கவர்ந்தன. மாஞ்சோலையில்தான் பெரும்பாலும் குயிலிருக்கும் என்ற இயல்பும் இவர் நன்கறிந்தவர். பூந்தாதுக்களையும் தளிர்களையும் தன் கூரிய அலகினால் கோதி எடுத்துண்ணும் பாங்கினையும் புரிந்து கொண்டவர். எனவேதான்,

''நீல உருவிற் குயிலே'' (3)
''கீதம் இனிய குயிலே'' (1)
''சீரிய வாயாற் குயிலே'' (2)
''தேன்பழச் சோலை பயிலும் சிறுகுயிலே'' (4)
''கொம்பின் மிழற்றும் குயிலே (6)
''கொந்தணவும் பொழிற்சோலைக் கூங்குயிலே'' (10)

எனவரும் சொற்சித்திரங்களைச் சுவையுணர்வு தோன்றத் தீட்டியுள்ளார். ஒரு பாடலில்,

''காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில்
வாழும் குயிலே'' (9)

என்று பாடுகிறார். பொன் என்ற சொல் இங்குத் தங்கத்தினைக் குறிக்கவில்லை. உலோகம் என்ற பழைய பொருளில் பயிலப் பெற்றது. 'காருடைப் பொன்' என்று அடைபெற்று வருதலின் கரும் பொன்னாகிய இரும்பின் நிறத்தை ஒத்த உடலழகு வாய்ந்த சோலைக்குயிலைக் குறித்தனர். திருக்குறளில், ''தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று'' என்ற பகுதியில் பயின்றுள்ள பொன் என்ற சொல் இரும்புக் கொக்கியைக் குறித்தல் இங்கு இயைபுநோக்கி எண்ணிப் பார்த்தற்கு உரியது. அனைத்திற்கும் மேலாகக் குயிலின் குரலினிமை, மேனி, அமர்ந்திருக்கும் சூழல் என்பனவெல்லாம் இணைந்து,

''சுந்தரத்து இன்பக் குயிலே'' (5)

என்ற அனுபவ மொழியினில் அடிகளைப் பாடவைத்துள்ள பாங்கு நோக்கி மகிழத்தக்கது.

இனி, கிளியின் பொலிவினை வாதவூரர் புனைந்துரைக்கும் பாங்கினைக் காண்போம்.

### கிளியின் பொலிவு

குயில்பத்தினை (18) அடுத்துவரும் திருத்தசாங்கம் (19) என்ற பதிகம் அண்டங்களை எல்லாம் அருளினால் ஆளும்

ஈசனின் திருப்பெயர், நாடு, நகர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி முதலிய பத்து உறுப்புக்களையும் கூறும்படி தலைவி, கிளியினை நோக்கிக் கேட்கும் பாங்கில் பாடப்பெற்ற சிற்றிலக்கியமாகத் திகழ்கிறது. பத்துப் பாடலிலும் கிளியே முன்னிலைப்படுத்தப் பெறுதலினால், குயில் பத்தினைப் போல் இதனைக் கிளிப்பத்து என்றே கூறலாம். சின்னஞ்சிறு கவிதைச் சொற்களால் கிளியைப் புனைந்துரைக்கும் மணிவாசகரின் சொற்சித்திரம் காண்போம்.

கிளி, தத்தை, பிள்ளை, சுகம் என்ற சொற்களினால் கூப்பிடும் மணிவாசகர், சிவந்தவாயும் பச்சைச் சிறகும் படைத்த செல்வி (4) என்றும் செல்லமாக அழைக்கிறார். மரகதமணி திரண்டாற் போல் காட்சி தருவதால் 'மரகதமே' (2) என்றும் பேசுகிறார். அழகுமிக்க பறவையாதலின், ''ஏரார் இளங்கிளியே'' (1) என்று விளிக்கிறார். செம் முருக்கம்பூப் போன்ற சிவந்த வாயழகு வாய்ந்தமையின், ''கிஞ்சுகவாய் அஞ்சுகமே'' (5) என்று கூப்பிடுகிறார். பேச்சினிமை கருதி, ''ஏதமிலா இன்சொல் மரகதமே'' (2), ''கோல்தேன் மொழிக்கிள்ளாய்'' (7), ''இன்பால் மொழிக் கிள்ளாய்'' (8) என்று பலவாறு பாராட்டிப் பேசுகிறார்' சோலையில் அமரும் சுந்தரக் கிளியை,

''தாதாடு பூஞ்சோலைத் தத்தாய்'' (3)
''சோலைப் பசுங்கிளியே'' (10)

என்று விளிக்கின்றார். அடிகளார் பாடுதற்கு எடுத்துக் கொண்ட வெண்பா யாப்பில் இங்ஙனம் சில சொற்களினால் சொற் சித்திரம் செய்தல் பொருத்தமாகவும் பொலிவாகவும் அமைந்து சிந்தனைக்கு இன்பம் பயத்தல் காணலாம்.

**காலைக்காட்சி**

புலர்காலை விழித்தெழுந்த பத்தர்கள் தம்மைப்போலவே இறைவனையும் துயிலினின்றும் எழுந்து கடைக்கண் நோக்கித் திருவருள் புரியுமாறு வேண்டும் பாங்கில் திருப்பெருந்துறையில் அருளிச்செய்த பதிகம் ''**திருப்பள்ளியெழுச்சி**'' என்று வழங்கப் பெறும். காலைக் காட்சியைக் கவினுற வாதவூரர் பாடு கின்றார்.

நீர்நிலைகளில் தாமரைகள் மலர்கின்றன. அருணோதயம் கண்டு இருள் அகன்றது. வண்டினங்கள் முரல்கின்றன. வயல்

வளம் சூழ்ந்த திருப்பெருந்துறையின் புலர்காலைப் பொழுதின் வனப்பினை,

> ''கூவின பூங்குயில் கூவின கோழி
> குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
> ஓவின தாரகை ஒளி; ஒளி உதயத்து
> ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
> தேவ! நற் செறிகழல் தாளிணை காட்டாய்''
>
> (20-3

எனவரும் பாடல் இனிய ஓவியமாகப் புலப்படுத்தக் காணலாம். குயில்கள், சேவல்கள், நீர்ப்பறவைகள், சங்குகள் ஆகியவற்றின் பல்வேறு பண்ணார்ந்த இனிய ஓசைகள் மக்களைத் துயிலி னின்றும் எழுப்புகின்றன. நட்சத்திரங்களின் ஒளி சுருங்குகிறது. கதிரவன் உதயம் ஆவதால் அதன் பேரொளி எங்கும் பரவு கின்றது. இறைவனைக் கண்டு பள்ளி எழுச்சி பாடுதற்கு இதமாக இவ்வொளி அடியவர்களைப் பரவசப்படுத்துகிறது. இத்தகைய காட்சி மரபுவழிப்பட்ட இயற்கைக் காட்சியாகத் தோன்றுகிறது. சிலப்பதிகாரத்தில்,

> ''புறஞ்சிறைப் பொழிலும் பிறங்குநீர்ப் பண்ணையும்
> இறங்குகதிர்க் கழனியும் புள்ளெழுந் தார்ப்பப்
> புலரி வைகறைப் பொய்கைத் தாமரை
> மலர்பொதி அவிழ்த்த உலகுதொழு மண்டிலம்...
> ஓங்குயர் கடல் ஊர்துயில் எழுப்ப...
> வால்வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய
> காலை முரசம் கனைகுரல் இயம்ப'' (14-1-14)

எனவரும் பகுதி இங்கு ஒப்புநோக்கி எண்ணத்தக்கது.

மாணிக்கவாசகர் அருளிய திருச்சிற்றம்பலக்கோவையாரில் பற்பல இயற்கைக் காட்சிகளைப் பார்க்கலாம். தலைவனின் நாட்டுவளத்தைக் காட்டுவதாக வரும் 'குலமுறை கூறி மறுத்தல்' என்ற துறையில் அமைந்த பாடல் சுட்டத்தக்கது. தென்னை, கமுகு, கதலி ஆகிய தருவகை ஒன்றற்கொன்று அணுக்கமாக உள்ளது. முற்றிய நெற்றினைத் தெங்கம்பழம் என்பர். தெங்கம்பழங்கள் தமக்குக் கீழே உள்ள பாக்கின் குலைகளின் மேல் தாக்கி விழுவதால், அக்குலைகள் சிதறி அயலில் நிற்கும் வாழையின் பழுத்த தார்களில் விழுவதால், அவை சிதறிப்

பூந்தாதுக்கள் பொருந்திய பழனங்களில் வீழ்ந்தன, இத்தகைய வயல்வளம் நீர்வளம் மிக்க நாட்டிற்குரியவன் தலைவன் என்கிறாள் தலைவி:

''தெங்கம் பழங்கமு கின்குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்கம் பழனத் தொளிர்குளிர் நாட்டினை நீ''

(100)

இப்பாடலில் இடம்பெறும் இயற்கைக்காட்சி பின்னர்த்தோன்றிய குறவஞ்சி. பள்ளு முதலிய சிற்றிலக்கியங்களிலும் புதுமெருகு பெற்றுப் பொலியக் காணலாம்.

மாணிக்கவாசகர் மற்ற அருளாளர்களைப் போல இயற்கைப் புனைவுகளில் பெரிய அளவில் கருத்தினைச் செலுத்திலர். எனினும், கவிஞர் என்ற வகையில் காணும் பொருள்களின் இயல்புகளைக் கவின்சுவை கலந்து கற்பனை இன்பத்துடன் படைத்துக் காட்டுவதில் தேர்ச்சி பெற்றவர் என்பதற்கு நாம் பார்த்த பாடற் பகுதிகள் போதிய சான்றாகும்.

இதுகாறும் நால்வரின் நறுந்தமிழ்ப் பாடல்களில் பயின்று வரும் இயற்கைக் காட்சிகளின் எழிலும் அவற்றின் வழியாக அவர்கள் உணர்த்தக் கருதிய செய்தியும் அனுபவமும் கண்டோம்.

இனி, ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பா ஆசிரியர்கள் படைத்துள்ள இயற்கை ஓவியங்களின் எழிலைக் காண்போம்.

## திருவிசைப்பாவில் இயற்கை

தேவார ஆசிரியர்களைப் பின்பற்றித் தலச்சிறப்பு, இயற்கைச் சூழல், இறைநயம், வழிபாடு என்ற அடிப்படையில் தெய்வமணம் கமழும் இனிய பாடல்களைத் திருவிசைப்பா ஆசிரியர்கள் பாடியுள்ளனர். இவர்கள் பலரும் கோயில் என்று சிறப்பித்துச் சொல்லப்பெறும் தில்லைச் சிற்றம்பலத்தைப் பரவிப் பணிந்தவர்கள், தாவர விசேடத்தினால் தில்லை என்றும் வியாக்கிர பாதர் வழிபட்டதால் புலியூர் என்றும் மன்றச் சிறப்பினால் சிற்றம்பலம் என்றும் ஏத்தப்பெறும் இத்தலத்தின் இயற்கைப் பொலிவினை எழிலோவியமாகப் புனைந்துள்ளனர். திருமாளிகைத்தேவர் பாடிய அரிய நான்கு பதிகங்களும் தில்லைச் சிறப்பினை தெளிவுறுத்துவன எனலாம்.

**தில்லைத் திருக்காட்சி**

நீர்வளம் மிக்க வயல்களில் கரைக்குமேல் பாயும் வாளைமீன் பிறழ்ந்து பாய்ந்து மடுக்களில் கிடக்கும். அம்மடுவில் தழைத்திருக்கும் தாமரையினையும் வயலில் உள்ள கரும்பஞ் சோலையினையும் எருமைகள் உண்டு பிரப்பம் புதர் நோக்கிச் செல்லும். செந்நெல் செழித்திருக்கும் கழனியும் செங்கழுநீர் பூத்திருக்கும் பழனமும் சூழ்ந்திருக்கும் வனப்புடையது பெரும்பற்றப்புலியூர் என்று பாடுகிறார் திருமாளிகைத்தேவர்:

''வரம்பிரி வாளை மிளிர்மடுக் கமலம்
கரும்பொடு மாந்திடு மேதி
பிரம்பிரி செந்நெற் கழனிச்செங் கழுநீர்ப்
பழனம்சூழ் பெரும்பற்றப் புலியூர்'' (2-3)

மருதக் கருப்பொருளின் வளம் இப்பாடலில் காட்சி தருகிறது.

தில்லைத் திருநகரின் அகழி, மதில் ஆகியவற்றின் சிறப்பும் தழைத்த வாழை, நீண்ட தெங்கு, இளங்கமுகு, உளங்கவரும் நெடியபலா, மா ஆகிய மரவகைகளும் துகிற் கொடியும் பிறை தவழும்படி உயர்ந்த பொழில்களும் சூழ்ந்திருக்கும் இயற்கைப் பொலிவும் தொடர்ந்து சித்திரிக்கப் பெறுகின்றன:

''நிறைதழை வாழை நிழற்கொடி நெடுந்தெங்கு
இளங்கமுகு உளங்கொள்நீள் பல, மாப்
பிறைதவழ் பொழில்சூழ் கிடங்கிடைப் பதலை
முதுமதிற் பெரும்பற்றப் புலியூர்'' (2-5)

நீர்அரண், முதுமையான மதிலரண் முதலியன பேசப்பெறுதலின், இந்நகர் சோழப் பெருவேந்தரின் சமய இராசதானியாக விளங்கியிருத்தல் மெய்யம்மையே. தில்லை நடராசப்பெருமான் சோழ மன்னர்களின் குலதெய்வம். சிற்றம்பலத்தின் கூரையை முதன்முதல் முதற்பராந்தகன் பொன்வேய்ந்ததாக வரலாற்றாசிரியர் கூறுவர். எனின், அப்பர், மாணிக்கவாசகர் அருளிச் செயல்களில் பொன்னம்பலம் பேசப்பெறுதலின் பராந்தகனுக்கு முன்பே இப்பணி நடைபெற்றமையும், பின்வந்த சோழவேந்தர்களும் தொடர்ந்து அம்பலத்தைப் பொன்வேய்ந்து கூத்தப் பெருமானை ஏத்திய சிறப்பும் எண்ணிப் பார்ப்பதற்குரியன. ஆதலின், இத்திருவிசைப்பா இயற்கைச்சூழலைப் புனைந்துரைப்பதுடன் அகழி, மதில் முதலியவற்றையும் கூறுதலின் தில்லை,

சோழவேந்தரின் கோநகர்க்கு ஒப்பாக ஒளிர்ந்த திருநகர் என்பது புலனாகும். இப்பாடற்பகுதியின் தொடர்ச்சியாக,

''சிறைகொள்நீர்த் தரளத் திரள்கொள்நித் திலத்த
செம்பொற் சிற்றம்பலக்கூத்தா!''

எனவரும் பகுதி நோக்கத்தக்கது. தில்லைக்கு அருகில் ஓடும் வெள்ளாறும், அருகில் இருக்கும் கடலும் பல்வகை முத்துக்களையும் இந்நகரில் கொண்டு வந்து கொழிக்கும் செழிப்பும் சிறப்பாகச் சுட்டப்பெற்றது.

கருவூர்த்தேவரின் திருவிசைப்பாவிலும் தில்லையின் எழில் சித்திரிக்கப்பெறுகிறது. மணம்கமழும் இனிய மாம்பொழில்கள், கமுகத்தோப்புகள் அழகினை வளர்க்குந் தில்லை என்று பாடுகிறார் (8.1). தெளிந்த தேன் பருகும் வண்டினம் பாடவும் காற்றில் சோலைகள் ஆடவும் செண்பகம் மலரும் பெரும்பற்றப் புலியூர் என்று பேசுகிறார் (8.5). புன்னை மரங்கள் பொலிவுடன் பூத்துத் தேன் பொழியும். பொழிவரி வண்டுகள் பொழிலினுள் குடைந்து சென்று பண்பாடும் இயற்கைச் சூழலையும் பொறித்துள்ளார் (8-9).

பூந்துருத்தி நம்பி காட நம்பி, கோயில் குறித்துத் திருவிசைப்பா அருளியுள்ளார். கணம்புல்லர், கண்ணப்பர், நாவுக்கரசர், சம்பந்தர், சேரமான், ஆரூரர் ஆகியோர் தில்லைக் கூத்தரின் திருவருளைப் பெற்ற சிறப்பினைப் பாடியவர். தில்லையின் வனப்பினை.

''எத்திசையும் வானவர்கள் ஏத்தும் **எழில்தில்லை**''
(9-19-1)

என்று போற்றுதல் எண்ணத்தக்கது.

கண்டராதித்தர் தன் தந்தை முதற்பராந்தகனைப் போலவே தில்லை நடராசப் பெருமானிடம் பேரன்பு கொண்டவர். இவர் பத்திச் சிறப்பினால், '**சிவஞான கண்டராதித்தர்**' என்று போற்றப் பெறுபவர். இவர்தம் பெருந்தேவி **செம்பியன் மாதேவியார்** ஆற்றிய கோயிற்பணியும் சமயப் பணியும் என்றும் ஏத்தப் பெறுவன. கண்டராதித்தர் 'என்னாரமுது' என்றும் 'எங்கள்கோ' என்றும் தில்லைக்கூத்தனைப் பரவுகின்றார். தில்லையின் இயற்கைக்கவினை இனிய கவிதைத்தொடர்களில் புனைந்து பாடுதல் காண்போம்.

',தென்னா என்று வண்டு பாடும் தென்தில்லை'' (20-1)
''தெத்தே என்று வண்டு பாடும் தென்தில்லை'' (20-3)

''சீரால் மல்கு தில்லை'' (20-6-10)

''அணிதில்லை அம்பலத்துள்'' (20-8-9)

இத்தகைய சிறுசிறு வருணனைத் தொடர்கள் ஒருவகையில் சிந்தையில் இயற்கைக் காட்சியை நிலைபெறச் செய்து இன்பம் தருவன எனலாம்,

வேணாட்டடிகள் சேரநாட்டுத் திருத்தொண்டர் எனினும், சோழநாட்டுத் தில்லை அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அவர் பாடிய ஒரே பதிகம் இத்தலத்தைப் பற்றி அமைந்தது. ஒவ்வொரு பாடலிலும், 'திருத் தில்லை' என்று போற்றினார். திரு என்பது இயற்கை அழகுடன் தெய்வீகப் பொலிவும் சேர்ந்து விரும்பப்படும் தன்மை சுட்டும் அடைச்சொல்.

திருவாலியமுதனார் நான்கு பதிகங்களில் தில்லைத் திருக்கோயிலைப் போற்றிப் பாடியுள்ளார். நீர்வளம், நிலவளம் மிக்க தில்லை வனப்பினைப் புகழ்ந்து பாடினர். அவருடைய அருஞ்சொற்கள் காட்சிகளைக் கண்முன் நிறுத்தும் ஆற்றல் படைத்தவை. 'அணிநீர் வயல்தில்லை'[3] (21.1). 'தேனமர் பொழில் சூழ் தருதில்லை' (23.9) 'தேனமர் பொழில் தில்லை' (24.7.11). 'சேல் உகளும் வயல்சூழ் தில்லை' (25.1), 'தெள்ளிய தண்பொழில்சூழ் தில்லை' (25.3) எனவரும் அருந்தொடர்கள் எண்ண இனிப்பன.

தாமரைப் பொய்கையின் தண்ணிய காட்சியும் மலரின் தேன் கொள்ள வரும் வண்டின் இசையழகும் ஒரு பாடலில் சுட்டப் பெற்றன (22,2), பசுக்கூட்டங்கள் தாமரை மலர்களை உழக்கிக் கரும்பினைச் சாய்ப்பதால் வெளிப்படும் சாறு பாய்வதால் கலக்கமுற்ற கயல்மீன்கள் மடையில் பாயும் மருதக்காட்சியைப் புனைந்து கூறுகிறார் (22.10). மடைநீரில் வாளைகள் மகிழ்ச்சியால் துள்ளும் வயல்தில்லை என்று ஒரு பாடல் குறிக்கிறது (23.7). நிவா என்னும் ஆற்றங்கரையில் தில்லை அமைந்துள்ளது என்று திருவாலியமுதனார் சுட்டுகிறார். நிவா என்பது வெள்ளாற்றைக் குறிக்கும் என்பது முன்பே சொல்லப்பெற்றது. இப்போது இந்த ஆறு தில்லைக்கு மேல்பால் புவனகிரியில் ஓடுவதைக் காணலாம். முன்பு இதன் பெருக்கு தில்லைக்கு நெருக்கமாய் இருந்ததாதல் வேண்டும். எனவேதான்,

''சந்தும் அகிலும் தழைப்பீலிகளும் சாதி பலவும் கொண்டு
உந்தி இழியும் நிவவின் கரைமேல் உயர்ந்த மதில்தில்லை'' (24-4)

''குரவம் கோங்கம் குளிர்புன்னை கைதை குவிந்த கரைகள்மேல்
திரைவந் துலவும் தில்லை......... (24-6)

என்று இவ்வாறு பல்வகைப் பொருளையும் வெள்ளாறு திரட்டி வரும் பாங்கினைத் தெளிவுறப் பாடினார்,

தில்லைக் கடற்பட்டினமாகவும் திகழ்ந்ததால்,

''கனைத் திழியும் கழனிக் கனகம் கதிர்ஒண்பவளம்
சினத்தொடு வந்தெறியும் தில்லை'' (25-6)

''சீர்வங்கம் வந்தணவும் தில்லை'' (25-8)

என்று புனைந்து போற்றப்படுதல் காணத்தக்கது.

புருடோத்தம நம்பி என்ற அருளாளரும் தில்லைக் காட்சியைப் பாடியவர். இவர்தம் திருவிசைப்பாவில்,

''தேனல்வரி வண்டறையும் தில்லை'' (27-1)

''செந்நெல் விளைகழனித் தில்லை'' (27-8)

என்று இயற்கைப்பின்புலம் இசைக்கப் பெற்றது. இவரைப் போலவே சேதிராயர் என்ற சிவனருட்செல்வரும் இத்தலத்தின் எழிலைப் பாடியவர். இவர் பாடல்களில், ''சேலுலாம் வயல் தில்லை'' (28.1), ''சிறைவண்டார் பொழில்தில்லை'' (28.8). ''தென்றலார் பொழில்தில்லை'' (28.9) என்று புனைந்துரைக்கப் பெறுதல் காணலாம்.

**பிறதலங்களின் பேரெழில்**

சேந்தனார் மிகுதியான பதிகங்கள் பாடியவர். திருவீழி மிழலையின் பொலிவினைப் பலவகையில் பொறித்துள்ளார்:

''விண்டலர் மலர்வாய் வேரிவார் பொழில்சூழ்
திருவீழி மிழலை'' (5-3)

''எண், திக்கெலாம் குலவும் புகழ்த்திரு வீழி மிழலை''
(5-6)

''திக்கெலாம் நிறைந்த புகழ்த்திரு வீழி மிழலையான்''
(5-10)

இவற்றுள் இறுதியடி ''திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி' எனவரும் சம்பந்தர் பாடலை நினைவூட்டும் (3.92.7)

அரிசிலாற்றங்கரையில் வீற்றிருக்கும் இத்தலத்தின் இயற்கை வனப்பினை,

''கங்கைநீர் அரிசிற் கரைஇரு மருங்கும்
கமழ்பொழில் தழுவிய கழனித்
திங்கள்நேர் தீண்ட நீண்ட மாளிகைசூழ்
மாடே நீடுயர் திருவீழி'' (5-7)

என்று பரவியுள்ளார்.

திருவாவடுதுறை என்னும் தலம், சேலும் கயலும் திளைக்கும் நீர்வளம்மிக்கது என்பர் (6.11). அகப்பொருட்டுறையில் இவர் பாடிய திருவிடைக்கழிப்பதிகம் முருகப் பெருமானின் சிறப்பினைப் பரவுவது. இத்தலத்தின் காட்சியை,

''சேலுலாம் கழனித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாம் தடக்கை வேந்தன்'' (7-1)

''தேனமர் பொழில் சூழ் திருவிடைக்கழி'' (7-4)

என்று போற்றுதல் காணத்தக்கது. குரா மரம் தலவிருட்சம். தெய்வத்திருவுடன் பொலியும் தரு. பொழிலின் எழில், அழகே திருமேனியாகக் கொண்ட முருகனின் தலத்திற்கு அணியாக அமைவது.

சம்பந்தர் பதிகம் பெற்ற சோழநாட்டுத் தலங்களில் கோட்டூர் ஒன்றாகும். இதனை மேல்கோட்டூர் என்றும் கூறுவர். இதன் கீழ்பால் திகழும் கீழ்க்கோட்டூர் மணியம்பலம் என்ற திருக்கோயிலைக் கருவூர்த் தேவர் கனிந்து பாடியுள்ளார். ஒளிவீசும் வண்டுகள் ஒலிக்கும் பொழில் வளமும் மக்களின் மகிழ்ச்சி ஆரவாரமும் மிக்கது இத்தலம் (10.1). கெண்டையும் கயலும் உகளும் நீர்ப்பழனங்களும் (10.2), முகில்தவழும்

மாடங்களும் (10.3), பல்வகை வாத்தியங்களும் இசையும் பொருந்திய கீழ்க்கோட்டூர் என்று பாடுகிறார் (10,8). பூஞ்சோலைக் குயில்கள் கொஞ்சிப் பேசி மாஞ்சோலைக்குச் செல்லும் பொழில் வளத்தினை,

''கிள்ளைபூம் பொதும்பிற் கொஞ்சிமாம் பொழிற்சே
கெழுவு கம்பலைசெய் கீழ்க்கோட்டூர்'' (10-4)

என்று எழிலுறப் பாடுதல் எண்ணி இன்புறத்தக்கது.

பிற்காலச் சோழர் காலத்தில் பெருஞ்சிறப்புற்ற தலங்களில் முகத்தலை என்ற திருத்தலம் குறிப்பிடத்தக்கது. நாகைக்கு அண்மையில் உள்ளது. கருவூர்த்தேவர் இத்தலத்தின் எழிலையும் பாடியுள்ளார். வரால் மீன் உகளும் நீர்வளம் (11.2). நெந்நெற் செழிப்பு (11.4) சிறப்பாகக் குறிக்கப் பெற்றன.

முதலாம் இராசராசனின் பெருந்தேவியருள் ஒருவரான திரைலோக்கிய மாதேவியின் பெயரினால் திகழும் திரைலோக்கிய சுந்தரம் என்ற பதி திருப்பனந்தாளுக்குத் தென்கிழக்கில் திகழும் திருத்தலம் ஆகும். இது கோயில் பெயரென்றும் கோட்டூரின் மரூஉவாகக் குறிக்கப்பெறும் **'கோடை'** என்பதே ஊர்ப் பெயர் என்றும் திருமுறையாராய்ச்சி அறிஞர்கள் கூறுவர். இறைவனையே அழகனாகப் போற்றும் சிறப்பும் மரபும் தமிழர்க்கு உண்டு. இறைவனைப் புவனசுந்தரம் என்று கூறும் பாங்கினை வைணவ நூல்களில் காணலாம், எல்லா அண்டங்களுக்கும் அதிபதியாகிய பரம்பொருளை மூன்று உலகத்தின் அழகன் என்று தமிழர் போற்றிய பெற்றியை, **'திரைலோக்கிய சுந்தரன்'** என்ற தொடர் உணர்த்துவதாகக் கொள்ளலாம். 'சீரோங்கும் பொழிலும்' (12.1), 'செஞ்சாலி வயலும்' (12.7) கருவூர்த் தேவரால் சிறப்பாகச் சுட்டப் பெறுவன.

தேவாரம் பாடப்பெற்ற திருப்பூவணத்தைக் கருவூர்த் தேவரும் திருவிசைப்பா பாடிப் பரவினர். வையையாற்றின் கரையில் பொலிவுற்று விளங்கும் இத்தலத்தின் காட்சியை,

''மருதர சிருங்கோங்கு அகில்மரம் சாடி
வரைவளம் கவர்ந்திழி வையைப்

பொருதிரை மருங்கோங்கு ஆவண வீதிப் பூவணம்''
(14-1)

என்று எழில்மொழியில் சித்திரித்துள்ளார். இனிய புனற் பொய்கையின் வாளைகள், அருகில் உள்ள பூஞ்சோலையிற் பாய்வதால் வெளிப்படும் தெளிந்த தேன் எங்கும் பாயும் (14.2)

முதலாம் இராசராசன் எடுப்பித்த தஞ்சை இராசராசேச் சரத்தைப் போற்றும் திருவிசைப்பாவில் கருவூர்த்தேவரின் கலையுள்ளம் காணலாம். யாழொலி, ஆடல்ஒலி முதலிய இனிய ஒலிகள் மிக்க தஞ்சை வடவாற்றின் சூழலில் அமைந் துள்ளது. வடவாற்றின் வாய்க்காலில் வாழும் முதலைகள் இடம்பெயர்ந்து தஞ்சைக் கிடங்கினை எற்றும் (16.2) என்று பாடுகிறார். பல்வகை மலர்ச்சோலைகளின் மணமிகு கோலத்தினை,

''சரளம் மாந்தாரம் சண்பகம் வகுளம்
சந்தனம் நந்தன வனத்தின்'' (16-11)

என்று பாடிப் பரவுதல் காணத்தக்கது. பொய்கைகளில் திகழும் செங்கழுநீர் மலர்கள் இஞ்சிசூழ் தஞ்சை எங்கும் இனிய மணம் பரப்பும் காட்சியையும் குறித்துள்ளார் (16.7).

இதுகாறும் திருவிசைப்பா ஆசிரியர்கள் இறைவன் கோயில் கொண்டுள்ள தலங்களைப் பாடும் இசைப்பாக்களில் இயற்கை யின் பல்வகைப் பாங்கையும் வனப்பையும் உளங்குளிரப் பாடிப் பணிந்த பண்பினைப் பார்த்தோம். இனி, பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தில் இயற்கையின் எழில் இடம் பெறும் பாங்கினைச் சிறிது நோக்குவோம்.

### திருமந்திரத்தில் இயற்கை

தவயோகியராகிய திருமூலர் தமிழாகமம் தந்தவர். திருமந்திரம் சாத்திர நூல். தோத்திரப் பாடல்களாகக் கொள்ளற்குரியன சில இருப்பினும் குறிப்பிட்ட தலத்தில் பாடப் பெற்றவையாக அவை அமையவில்லை. குருபாரம் பரியம் கூறும் பகுதியில், 'மன்று தொழுத பதஞ்சலி வியாக் கிரமர்' (67) என்று தில்லை அம்பலத்தைச் சுட்டியுள்ளார். எட்டு வீரட்டங்களைக் கூறும் பகுதியில், 'ஞாலக்கடலூர் (345), 'கொறுக்கை' (346) என்ற இருதலங்களைக் குறித் துள்ளார். எனினும், தலங்கள் அமைந்துள்ள இயற்கைச் சூழலைப் பாடும் எண்ணம் அவர்க்கு அமைந்ததாகத்

தோன்றவில்லை. மணல் இலிங்கம் அமைத்து ஆன்ஐந்தும் ஆட்டி வழிபடும் தண்டி, வழிபாட்டினைத் தடைப்படுத்திய தாதையின் தாளினைத் தடிந்த வரலாற்றினைப் பொறித்துள்ளார் (351). எனின், இந்நிகழ்ச்சி நடந்த சேய்ஞ்ஞலூரின் வனப்பினைப் பற்றி பாடினாரிலர். எனவே, பதிகப் பெருவழி காட்டிய தேவார ஆசிரியர்கள் அளவிற்கு இயற்கையினைப் பாடும் நிலை திருமூலர்க்கு அமையாவிடினும், இயற்கை பற்றிய எண்ணங்கள் பலவற்றைப் பாடல்களில் வழங்கியுள்ளார். அவற்றைத் தொகுத்து நோக்கின் இயற்கைப் பொருள்களில் அவர்க்கிருந்த ஈடுபாடு தெற்றெனப் புலனாகும்.

**பறவை வகை**

பறவைகளின் இயல்புகளைக் கூர்ந்து நோக்கி மாந்தர்க்கு அறிவுரை பகரும் வகையில் பாடிய பகுதிகள் சிந்தை கவர்வன. பறவைகளில் சிறப்பாகச் சுட்டப்பெறுவது அன்னம். மருத நிலத்துப் பறவை. தாமரை மலர்மிசை அன்னம் திகழும் காட்சியைத் திருஞானசம்பந்தரை உள்ளிட்டோர் பாடிய பாங்கினை முன்னர்க் கண்டோம். அன்னத்தின் கூர்த்த செயலொன்றினைத் திருமூலர் சுட்டுகிறார். பகுப்பாலில் கலந்துள்ள நீரைப் பிரித்துப் பாலை மட்டும் பருகும் அன்னத்தின் இயல்பினை,

''ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல்'' (120)

என்ற பாடலில் சுட்டியுள்ளார். ஈசன் திருவருள் அடியாரின் உடற்கருவிகளுடன் ஒட்டிக் கிடக்கும் தீவினைகளைப் பிரித்து விடும் திறத்திற்கு, பாலினின்றும் நீரைப் பிரிக்கும் அன்னத்தின் செயல் உவமை கூறப்பட்டது.

காக்கை குறித்துப் புலவர்கள் பல கருத்துக்களைப் பாடியுள்ளனர். இமயம் சார்ந்த காகம் பொன்னிறம் பெறும் என்பது ஒரு கருத்து. தன்னினத்தைக் கரைந்து அழைத்துக் கூட்டமாக அமர்ந்து இரையினைத் தின்னும் காக்கையின் பண்பினைத் திருவள்ளுவர் குறித்துள்ளார். ''காக்கை கரவா கரைந்துண்ணும்'' என்பது திருக்குறள். திருமூலர்,

''காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே'' (250)

என்று குறித்தல் காணலாம். தானச்சிறப்பு கூறும் பகுதியில் இடம்பெறும் இப்பாடற்பகுதி காக்கையின் பண்பினைப் பாராட்டிப் பாடியதாகக் கொள்ளுதற்கு உரியது.

குயிலைக் குறித்த பாடல்கள் பல உண்டு. திருமூலரும் குயிலைப் பற்றிப் பாடியுள்ளார். காக்கையின் கூட்டில் குயில் தன் முட்டையை இடுதலும் அதனைத் தன் முட்டையாகக் கருதி அடைகாத்தலும் பற்றி ஒரு பாட்டில் சுட்டியுள்ளார்.

''குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்''
(488)

என்பது திருமந்திரம்.

திருமூலரின் காலம் கி.பி. 5, 6 ஆம் நூற்றாண்டென்பர். கூடக்குறைய இவர் காலத்தவராக மதிக்கப்பெறும் வடமொழிப் பெருங்கவிஞர் காளிதாசர் தாம்பாடிய சாகுந்தல நாடகத்தில் இத்தகைய கருத்தினைக் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தக்கது. பிகம், கோகிலம் முதலிய பெயர்களை உடைய குயிலுக்குப் பரப்பிருதம் என்பதும் ஒரு பெயர். மற்றதனால் வளர்க்கப்பட்டது என்பது 'பரப்பிருதம்' என்பதற்குப் பொருள். ஈன்ற தாய் மேனகையால் கைவிடப்பட்டுக் கண்ணுவமுனிவரால் வளர்க்கப்பெற்ற சகுந்தலை இருபிறப்பினளாகச் சுட்டப் பெறுதல் காணலாம். சீவகசிந்தாமணியில் ஒருத்தி மகனாகப் பிறந்து ஒருத்தி மகனாக வளரும் சீவகன் நிலையும் இத்தகையது என்று குறிப்பாகச் சுட்டப்பெற்றது.

சென்னை ஆழ்வார்பேட்டையில் ஒரு வீட்டின் தோட்டத் தில் குயில் முட்டையினை அடைகாத்துக் குஞ்சு பொரித்த பின்னரும் தன் கூரிய அலகினால் அக்குஞ்சின் வாயில் உணவினை நாள் தவறாது உண்பித்த காக்கையின் படத்தினை ஆங்கில இதழான இந்து (The Hindu) 13-12-1990-இல் வெளியிட்டு இயற்கையின் விந்தையினை வியந்து பாராட்டிய செய்தியும் இங்குச் சுட்டத்தகுவது.

திருமூலர் காலத்தைய குயில், காகங்களின் நிலைஇன்றளவும் தொடர்ந்து வருதல் அறிந்து மகிழத்தக்கது.

## ஆமையும் முதலையும்

நீரில் வாழ்வனவாகிய ஆமை, முதலை பற்றிய செய்தி களையும் திருமந்திரத்தில் காண்கிறோம். ஆமையின் இயல் பினைப் பகவத்கீதையில் சாங்கியயோகப் பகுதியில் கண்ணன் குறித்துள்ளார். ''ஆமை தன் உறுப்புக்களை வெளிவிடாது

ஈர்த்துக் கொள்ளுதல்போல் ஐம்பொறிகளைப் புறத்தே போக விடாது முற்றாக உள்ளே ஈர்த்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றவனுக்கு நிறைஞானம் பொருந்துகிறது'' என்பது கீதையின் சாரம். திருவள்ளுவர், ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின் எழுமையும் ஏமாப் புடைத்து'' என்று கூறினர். ஒருபிறவியில் ஐம்புலன்களையும் அடக்கி நன்னெறியில் செலுத்த வல்லானாயின், அப்புலனடக்கத்தின் பயன் எழுபிறப் பிற்கும் ஏமம் ஆக அமையும் என்பது வள்ளுவர் கருத்து. திருமூலர்,

''ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி'' (133)

என்று ஆமையினை உவமையாக எடுத்துக் கூறினர். நான்கு கால்கள் ஒருதலை ஆகிய ஐந்துறுப்புக்களையும் தீமை புகாதபடி உள்ளிழுத்துக் கொள்ளும் ஆமையினைப்போல் யோகநிலை பயிலும் ஒருவன் ஐம்பொறிகளையும் பொருள்களின் போக்கில் போகவிடாமல் தீமை புகாதபடி தனக்குள் இழுத்து நிறுத்தல் வேண்டும் என்பது கருத்து.

முதலை பற்றிய குறிப்புக்கள் இலக்கியங்களில் மிகப்பல. கொண்டது விடாத மூர்க்கனுக்கு முதலை உவமை கூறப்படுதல் உண்டு. அகழிகளில் மிதக்கும் முதலை பகைவரைத் தடுக்கும் ஆற்றல் படைத்தது. திருமூலர்,

''ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக்கு எதிர்ப்பட்ட வாறொக்கும்'' (1642)

என்று பாடியுள்ளார். நூலறிவு பெறாத போலித்துறவியர் முறையாக நோன்பிருந்து தவம் செய்யமாட்டாராய்ப் பிச்சை கிடைக்கிறதே என்று பிழைப்பிற்காகத் துறவுவேடம் தாங்கு வதைக் கண்டிக்கும் வகையில் மேற்சுட்டிய உவமையினைத் திருமூலர் தந்துள்ளார். ஆற்றின் ஒருதுறையில் திரிந்து கொண் டிருக்கும் முதலைக்கு அஞ்சிய ஒருவன் அதனைவிடுத்து மற்றொரு துறைக்கு நீராடச் சென்று அங்கு ஈன்றணிமைப்பட்ட கரடி குளித்துக் கொண்டிருத்தலை அறியாது அதற்கு இரை யாதல் போன்றது, இல்லறத்தை விட்டுப் போலித்துறவு சார்ந்தவன் நிலை என்பது திருமந்திரக் குறிப்பாகும்.

**மரவகையும் மலர்வகையும்**

இயற்கையின் படைப்பில் எழில்தரும் மரவகைகள் பற்பல. அவற்றையும் அறிவுரை கூறும் பொருட்டுத் திருமூலர் பாடியுள்ள பாங்கினைச் சிறிது நோக்குவோம்,

பலாக்கனி போன்ற கட்டிய மனையாளைத் துய்க்காது, ஈச்சம் பழத்தை ஒத்த பிறனில் நாடும் கயமையினைக் கண்டிக்கிறார் (201). எட்டியின் இலைகள் அழகாக இருக்கும். அதற்காக அதன் கனியினை யாரும் உண்ணமாட்டார்கள். அதுபோல் பொருட்பெண்டிர் அழகாக இருப்பினும் விரும்பற்க என்று கூறுகிறார் (204). மற்றொரு பாடலில் ஈதலறியாதவன் செல்வம் எட்டிக்கனி போன்றது என்று இயம்பினார் (260). திருவள்ளுவர், ''நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள் நச்சு மரம்பழுத் தற்று'' என்று கூறிய கருத்து இங்கு எண்ணத்தக்கது.

நாலாம் தந்திரத்தில் ஈசனுக்கு உகந்த மலர் வகைகளைக் குறித்துள்ளார்:

''அம்புயம் நீலம் கழுநீர் அணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரம்
தும்பை வகுளம் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே'' (1003)

இப்பாடல் ஓர் மலர்வனமாகக் காட்சி தருகிறது. இறைவன் மலர்வழிபாட்டிற்கு இரங்குபவன். அப்பர் அடிகள், 'அரும் பொடு மலர்கள் கொண்டு'' ஆற்றும் வழிபாட்டினைப் போற்றினர். இதனைப் பூப்பலி என்று இளங்கோவடிகள் குறித்தனர். பூவைக் கொண்டு புரிவதால் பூசை தமிழ்ச்சொல் என்பர் சுநீதிகுமார் சாட்டர்சி என்னும் திராவிடவியல் வங்க அறிஞர்,

## இயற்கையின் இறைக்காட்சி

இறைவனுக்குரிய அட்ட மூர்த்தங்களில் ஐம்பூதம், ஞாயிறு, திங்கள் என்பன இயற்கையே. இயற்கையைத் தனது திருமேனி யாகக் கொண்டு உள்ளிருந்து இயக்கும் பேராற்றல் வடிவமாகவும் இறைவனைத் தமிழர் போற்றினர். திருமூலர் இயற்கைப் பொருளில் இறையினைக் கண்டு பாடுகிறார்.

''தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்
தானே மழைபொழி தையலு மாய்நிற்கும்
தானே தடவரை தண்கடல் ஆமே'' (1165)

இறைவனே சத்தியமாய் இயற்கைப் பொருள்களுக்கு ஆதார மாய் நின்று அருள்பாலிக்கும் பாங்கினை இப்பாடல் அழகாகச்

சுட்டுகிறது. பிரபஞ்சத்தில் கீழ்ப்பகுதி நிலம். மேற்பகுதி விண். நிலம், விண் ஆகிய இரண்டும் சொல்லப் பெறவே இரண்டிற்கும் இடைப்பட்ட எவ்வகை இயற்கையும் தாமே அடங்கும். நிலம், விண், தீ, இருபெருஞ் சுடர்களாகிய கதிரவன், திங்கள் என்பன யாவும் தானேயாகக் காட்சி தருகிறான், இறைவன் அருளை நினைப்பிக்கும் மழையும் சத்திமயமாகப் பேசப்பெற்றது. ''மழைபொழி தையல்'' என்ற பகுதி எண்ணதக்கது. மழைக்குரிய பெண்தெய்வத்தை மாரி என்று கூறுகிறோம். தொல்பழங் காலத்திலிருந்து மாரி வழிபாடு மக்களால் கொண்டாடப் படுகிறது என்பதற்கு இக்குறிப்பும் ஒரு சான்று. எனவே, இயற்கையின் தோற்றமாகவும் இயக்கும் ஆற்றலாகவும் இறைவனைக் கண்டு மகிழும் திருமூலரின் திருவுள்ளம் போற்றத் தகுவது.

வருணனை கூறவேண்டும் என்பதற்காகப் பாடாது இயற்கையின்வழி மக்களுக்கு அரிய கருத்துக்களை வழங்கும் வகையிலும் இறையுணர்வு பெறும் பாங்கிலும் திருமந்திரச் செய்யுள்கள் அமைந்துள்ள திறம் கண்டோம்.

இனி, பிரபந்தமாலையாகத் திகழும் பதினோராம் திருமுறை ஆசிரியர்கள் இயற்கைவனப்பில் தோய்ந்த ஈடுபாட்டினைச் சிறிது நோக்குவோம்,

### பிரபந்தமாலையில் இயற்கை

திருவாலவாயுடையார் அருளிச்செய்த திருமுகப்பாசுரம் ஆலவாயின் அழகினை முதலில் மொழிந்து பின்னர் மடற் கருத்தினைக் குறிப்பிடக் காணலாம். மதிமலிபுரிசைச் சிறப்புடைய மாடக்கடலில் பால்வண்ணம் படைத்த அழகிய அன்னப்பறவைகள் நடைபயிலும் பொழில்கள் பொலிவுதரும் பெற்றியைச் சுட்டினார் (1:1-3). தேவார ஆசிரியர்க்கெல்லாம் காலத்தால் முற்பட்ட காரைக்காலம்மையார் பாடிய மூத்ததிரு பதிகங்கள் திருவாலங்காட்டுப் பெருமானைப் போற்றுவன. இப்பதிகங்களில் இறைவனின் தாண்டவக் காட்சியை இயற்கை கடந்த கற்பனைத் தெளிவுடன் அம்மையார் பாடினர். தன்னை ஒரு பெண் பேய் என்று இயம்பும் அம்மையார் பேயின் வடிவத்தைச் சொல்லும் பகுதிகள் அபூதமாகத் தோன்றினும் இயல்பொடு இசைந்தவை என்பது புலனாகும். முதல் பதிகத்தில்,

''வாகை விரிந்து வெண்ணெற் றொலிப்ப
மயங்கிருள் கூர்நடு நாளை ஆங்கே

கூகையோ டாண்டலை பாட ஆந்தை
கோடதன் மேற்குதித்து ஓட வீசி
ஈகை படர்தொடர் கள்ளி நீழல்
ஈமம் இடுசுடு காட்ட கத்தே
ஆகம் குளிர்ந்து அனல்ஆடும் எங்கள்
அப்பன் இடம்திரு ஆலங்காடே'' (3)

எனவரும் பாடல் இடுகாட்டுப் புனைவாக இருத்தல் காணலாம். வாகை மரங்களின் முற்றிய வெண்ணெற்றுக்கள் காற்றில் சல சலப்பதால் ஒலிஎழுகிறது. நள்ளிரவில் கூகை, ஆண்டலை என்ற பறவைகள் கருங்குரலெடுத்துப் பாடுகின்றன. அவற்றைக் கேட்கும் ஆந்தைகள் ஒரு கிளையினின்றும் பிறிதொரு கிளைக்குக் குதித்து ஓடும். ஈகைக் கொடிகள் படர்ந்தும் கள்ளிச் செடிகள் அடர்ந்தும் இருக்கும் இடுதலும் சுடுதலும் உள்ள ஈமக்காட்டினை அரங்காகக் கொண்டு ஈசன் திருநடம் புரிகிறான் என்பது பாடற்பொருளாகும்.

தெய்வத்தன்மை பெற்ற அம்மையார் கணவனுக்காகத் தாங்கியிருந்த தசைப்பொதியைத்தவிர்த்துப் பரமனுக்குஆட்படும் பொருட்டுப் பேய் வடிவம் பெற்ற வரலாற்றினைச் சேக்கிழார் சிறப்பாகப் பாடியுள்ளார். ஊனடை வனப்பை எல்லாம் உதறித் தள்ளி என்பு உடம்பினராகிய அம்மையார் ''பெண்பேய்'' என்று தன்னைச் சொல்லிய நிலையும், பேய்களை வருணித்த பகுதியும், இடுகாட்டைப் புனைந்து பாடிய இடங்களும் அவர்தம் இயற்கை கடந்த இயற்கை ஈடுபாட்டினைப் புலப்படுத்துவனவாகும்.

அம்மையார்க்கு அடுத்த நிலையில் திருமுறையில் சுட்டப் பெறும் ஐயடிகள் காடவர்கோன் தம் பெயருக்கு ஏற்ப ஒரு பல்லவ வேந்தர். தில்லைச் சிற்றம்பலம் முதலாகப் பல தலங்களுக்குப் பாமாலை பாடிய அருளாளர். மூப்பினை வருணித்து முதுமை அடைவதற்கு முன் இவ்வதலத்துப் பெருமானை வழிபட்டு உய்தல் வேண்டும் என்று நெஞ்சறிவுறுத்த லாகப் பாடியுள்ள வெண்பாக்களின் தொகுதி ''**சேத்திர வெண்பா**'' என்று பெயர் பெறும். வெண்பாவாக அமைதலின்' தலத்தின் இயற்கைச் சூழலைப் புனைந்துபாடும் கற்பனைக்குப் போதிய இடம் ஏற்படவில்லை. திருவாரூர் இறைவனை,

''பாளை, அவிழ்கமுகம் பூஞ்சோலை ஆரூரற்கு'' (4)

என்று பரவும் பகுதியில் பாளைக்கமுகின் பாங்கும் பூஞ்சோலையின் பொலிவும் சுவையுறச் சுட்டப் பெற்றன.

மற்றொரு மன்னவராகிய சேரமான் பெருமாள் நாயனார் ஆரூரரின் நண்பர். யோக நெறிநின்று நாட்பூசை முடிவில் நடராசப் பெருமானின் ஆடும் கழலொலி கேட்டு ஆனந்தப்படும் அருளாளர், இயற்கையில் ஈடுபாடு மிக்கவர். இவர் படைத்துள்ள இயற்கைப்புனைவுகள் சிலவற்றைக் காண்போம்,

மேல்நின்ற வானையும் அடியமைந்த நிலத்தையும் நோக்கிய இவர்தம் காட்சி சிந்தை மகிழச் செய்வது. உறையினின்றும் ஒளிபொருந்திய வாளைப்போல வானம் மின்னுகிறது. முரசொலி போல இடி இடிக்கிறது. சிலை வளைவதுபோல் வில்லிடுகிறது. சிலையிலிருந்து செல்லும் சரங்கள்போல மழைத்துளிகள் பொழிகின்றன.

''உறைகழி ஒள்வாள் மின்னி உருமெனும்
அறைகுரல் முரசம் ஆர்ப்பக் கைபோய்
வெஞ்சிலை கோலி விரிதுளி என்னும்
மின்சரம் துரந்தது வானே'' (11-7-4: 1-4)

மழைக்காட்சியை மாணிக்கவாசகரும் ஆண்டாளும் மற்றவர்களும் கற்பனைக் கவின்தோன்றப் பாடியுள்ளனர். அவர்தம் இயற்கைப் பாடல்களுடன் இணைத்து நோக்குதற்கு உரியது இப்பாடற் பகுதியாகும்.

நிலத்தின் வனப்பினையும் சேரமான் சிறப்பாகப் பாடுகின்றார். மணங்கமழும் களவ மலர்களுடன், கொடிமுல்லைப் பூக்களும், கொத்துக் கொத்தாக மலரும் கோடற் பூக்களும் இந்திர கோபத்துடன் போட்டியிட்டு நிறத்தினால் மேம்படும் காந்தள் மலரும் காயாம் பூக்களும் மலர்ந்து எங்கும் எழிலும் மணமும் பரப்புவன :

''நிலவே,
கடிய வாகிய களவநன் மலரொடு
கொடிய வாகிய தளவமும் அந்தண்
குலைமேம் பட்ட கோடலும் கோபமொடு
அலைமேம் பட்ட காந்தளும் இவற்றொடு
காயா.........'' (11-7-4: 4-9)

திருவாரூர் மும்மணிக்கோவையில் இங்ஙனம் இடம்பெறும் இயற்கைக் காட்சிகள் மேலும் பல உள்ளன.

பறவையின் இல்லறப் பண்பினைச் சேரமான் பெருமாள் அருமையாகப் பாடியுள்ளார். வீட்டுமனையில் கூடுகட்டி வாழும் குருவியும் வளையில் இருக்கும் சேவற் பறவையும், முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பருவம் அடைந்த பேடைக் குருவியின் செவ்வி பார்த்து அன்புப் பெருக்கினால் தம்முள் முயங்கி, கரும்பின் சோலைகளைக் கரிய அலகினால் கவர்ந்து கொண்டு வந்து ஈனில் அமைக்கும். இத்தகைய பெருவளங் கெழுமிய நாட்டிற்குரிய தலைவன் என்று சுட்டுகிறார் :

''மனைஉறை குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி
**ஈனில்** இழைக்க வேண்டி ஆனா
அன்பு பொறைகூர மேன்மேல் முயங்கிக்
கண்ணுடைக் கரும்பின் நுண்தோடு கவரும்
பெருவளம் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுனல் ஊரன்'' (11-7-19: 1-7)

எனவே, இயற்கையினை நுனித்து நோக்கிப் பறவைகளின் இயல்பறிந்து பாடும் திறம், அவை பேசும் மொழியைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தமையால் கழறிற்றறிவார் எனப் பெயர்பெற்ற சேரமானுக்கே வாய்ப்பது என்பதில் ஐயமில்லை. இப்பாடலில் காணப்பெறும் ''**ஈனில்**'' என்ற அருஞ்சொல் குறுந்தொகையில் முதலில் காணப்படுவது (85.3). மகப்பேறு மருத்துவமனை என்று இக்காலத்தில் நாம் கூறும் நீண்ட தொடரினை 'ஈனில்' என்று முன்னையோர் சுருங்கச் சொல்லிய தமிழ்த்திறம் அறிந்தின்புறத்தக்கது.

இனி, பதினோராம் திருமுறையில் பல பிரபந்தங்களைப் பாடியுள்ள நக்கீர தேவரின் பாடல்களில் காணப்பெறும் இயற்கை ஓவியங்கள் சிலவற்றைப் பார்ப்போம்,

ஈங்கோய் என்னும் மலைத்தலம் தேவாரப் பாடல்பெற்ற சிறப்புக்குரியது. இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் ஈசனை ஏத்தி நக்கீரதேவர் பாடிய பிரபந்தம் **திருவீங்கோய்மலை எழுபது** ஆகும். குறிஞ்சிக் காட்சிகள் பற்பல கற்பனைவளம் சிறக்க இந்நூலில் பாடப் பெற்றுள்ளன.

குரங்குகளிடத்தில் கூட பாசஉணர்வு மிகுதியாகக் காணப் படுகிறது. மலையில் தேனடைகள் நிரம்ப உள்ளன. பெண் குரங்கு விரல்களினால் தேனை எடுத்து இளங்குழவிக்கு ஊட்டுகிறது. இவ்வினிய காட்சியை.

''ஈன்ற குழவிக்கு மந்தி இறுவரைமேல்
நான்ற நறவத்தைத் தான்நணுகித்—தோன்ற
விரலால்தேன் தோய்த்தூட்டும் ஈங்கோயே நம்மேல்
வரலாம்நோய் தீர்ப்பான் மலை'' (9)

என்று நக்கீரதேவர் பாடுகிறார். தீராநோய் தீர்த்தருள வல்லவனாகிய இறைவனின் ஈங்கோய் மலையில் உள்ள அஃறிணை விலங்கிடத்தும் அன்பு பெருகிக் காணப்படுதல் இயல்பாகவே தோன்றுகிறது.

குறிஞ்சிக் கருப்பொருளாக வரும் விலங்குகளில் யானைகள் சிறப்பிடம் பெறுவன. யானையின் காதல் வாழ்வினை மற்றொரு பாடல் காட்டுகிறது. ஊடல் கொண்டு பிடி உறங்கியது. ஊடலைத் தனித்துக் கூடி மகிழும் பொருட்டுக் களிறு கதலிக் கனிக்குலைகளைத் தேடிக் கொண்டு வந்து கொடுக்கிறது. பின்னர் கூடி மகிழ்ந்தன என்ற இன்பக் காட்சியை,

''ஊடிப் பிடிஉறங்க ஒண்கதலி வண்கனிகள்
நாடிக் களிறு நயந்தெடுத்துக்—கூடிக்
குணமருட்டிக் கொண்டாடும் ஈங்கோயே'' (11)

என்ற பாடலிற் காணலாம். மாந்தரிடையே காணப்படும் ஊடல் உவகை மற்ற உயிர்க்கும் உரியதாக அமைதல் நோக்கத் தக்கது.

குறப்பெண்கள் யானையின் தந்தத்தை உலக்கையாகக் கொண்டு உரலில் தினை மாவு இடித்துக் குறவன் கொண்டு வந்த தேனில் பிசைந்து கலந்துண்ணும் இனிய காட்சியை இன்னொரு பாடல் சுட்டுகிறது (20).

நக்கிரதேவர் பாடியுள்ள 'கார் எட்டு' என்ற சிற்றிலக்கியம் கார்ப்பருவக் காட்சிகளைப் புனைந்துபாடும் இயற்கை இலக்கியமாக இலங்குவது. வடமொழியில் காளிதாசன் ஆறு பருவங்களையும் அழகுறப் பாடியுள்ள பனுவலை 'இருது சங்காரம்' என்று கூறுவர். இருது என்பது பருவம். நக்கீரர் ஆறுபருவங்களையும் பாடாது, கார்ப்பருவத்தை மட்டும் தேர்ந்தெடுத்துப் பாடியிருப்பது அவர்தம் அழகுணர்ச்சியைப் புலப்படுத்துவதாகும். மழை தொடங்கும் காலத்தில் செடி, கொடி, மரவகைகள் தளிர்த்துச் செழித்துக் கவின் மிக்க காட்சியைத்தரும், மழைக்குரிய முகிலின் பேரழகு யாட்டிற்குப்

பொருளாக அமையும். ''கார் எட்டு'' என்ற பனுவலில் ஒருபாடற் காட்சியை நோக்குவோம்.

காந்தள் வளைந்த பாம்பைப் போல அரும்பின. திருமார்பில் அரவங்களை ஆபரணமாகச் சூடிய ஈசனின் பொன் போன்ற சடையைப் போலக் கார்மேகம் மின்விற்று. மின்னல் இடியைக் கேட்டதும் இரவில் மாணிக்கங்களை உமிழ்ந்து அதன் வெளிச்சத்தில் படம் ஆடிக்கொண்டிருந்த பாம்புகள் யாவும் அச்சத்தால் ஓடிச்சென்று வளையில் அடங்கின என்று பாடுகிறார் (5). கார்ப்பருவம் தலைவியின் கற்பாற்றலின் சிறப்பினைப் புலப்படுத்தும் காலம் என்றும் குறிக்கின்றார். முல்லைக்குரிய பெரும்பொழுது கார். பிரிந்துசென்ற கணவன் வரும்வரையும் இல்லிருந்து ஆற்றியிருக்கும் பெண்ணின் பெருமையினைக் கார் காலம் காட்டுவதாகப் புனைந்துரைத்தல் போற்றத்தகுவது.

கற்பனை வளமும் கவிதை அழகும் படைப்பாற்றலும் ஒருங்கே வாய்ந்த பெருங்கவிஞர் பட்டினத்துப் பிள்ளையார். இவர் பாடிய ஐந்து பிரபந்தங்களிலும் இயற்கையின் எழில் இனிய சொற்சித்திரங்களாகப் புனையப் பெற்றுள்ளன. பத்தியையும் மெய்ப்பொருட் சிந்தனைகளையும் இனிக்கும் கவிதைகளாகப் பாடும் பேராற்றல் இவர்பால் ஓங்கி நிற்கிறது. திருக்கழுமல மும்மணிக்கோவையில் காழிப்பதியின் கவினார் காட்சியைக் கண்டு ''பூமகள் உறையுள்'' என்று போற்றுகிறார். இந் நகர்க்குச் சிறப்பும் பெருமையும் சேர்ப்பனவற்றை சீரிய சொற்களில் நிரல்படக் கூறி நெஞ்சை மகிழ்விக்கிறார்:

''பாடலம் புன்னை ஏடவிழ் இலஞ்சி
வெளிய கற்பூரம் களிகொள் கத்தூரி
நறுமணம் எவையும் உறுமுறை பொருந்தி
உண்ணீர் பெற்ற **தண்ணீர்ப் பந்தரும்**
நெய்கமழ் கருணையும் குய்கமழ் கறியும்
மதிதரு நிலவெனப் புதியவெண் தயிரும்
வருக்கையின் கனியும் சருக்கரைக் கட்டியும்
முதல்உப கரணம் பதனொடு மரீஇத்
தளவரும் பென்ன வளமலி போனகம்
மாதவர் எவர்க்கும் ஆதுலர் எவர்க்கும்
நன்னயத் துடன்அருள் **அன்னசத்திரமும்**
பாடகச் சீறடிப் பான்மொழி மடவார்

நாடகத் தொழில்பயில் நீடரங் கவையும்
**கலைபயில் கழகமும் பவர்பயில் மன்றமும்**
உள்ளன கரவாது உவந்தெதிர்ந்து அளிக்கும்
வள்ளியோர் வாழும் **மணிநெடு வீதியும்**
பூமகள் உறையுளாம் என விளங்கும்
பெரும்புகழ்க்காழி விரும்பு சங்கரனே''

(11-27-25 : 12-29)

எனவரும் பாடற்பகுதி எண்ணத்தகுவது.

தண்ணீர்ப்பந்தலில் வெறும் நீர் வழங்கப்படவில்லை. பல்வகை மணமலர்களும் கற்பூரம், கந்தூரி முதலிய நறும் பொருள்களும் போடப்பட்ட நன்னீர் குடிப்பதற்குக் குளிர்ச்சி யையும் நலத்தையும் தரும். கடமைக்காக அன்னசத்திரம் அமையவில்லை. பல்வகைக் காய்கறிகள், சுவைமிகு புதுத்தயிர், பலாக்கனி, வெல்லக்கட்டி, முல்லையரும்பு போன்ற முனை முரியாத அரிசிச்சோறு அன்புடனும் அருள் உள்ளத்துடன் வழங்கப்பெறும் காட்சி ஒருபால். கலைகளின் முழக்கமும் விளக்கமும் காழியின் கவினுக்குப் புகழ்சேர்ப்பன. கொடைக் குணம் மிக்கவர் உறையும் வீதி சிறப்பாகச் சுட்டப்பெற்றது. இத்தகைய காட்சிகள் இலக்கிய இன்பம் பயப்பன என்றமட்டில் அமையாமல் பண்பாட்டு வரலாற்றினை அறிவதற்கும் உரியனவாக ஒளிர்வன எனலாம்.

திருவிடைமருதூரின் செவ்வியைப் பாடும் பட்டினத்தார் நாட்காலை மலரும் பூக்களின் மணம் யோசனை தூரத்திற்குக் கமழும் சிறப்பினையும் தாமரைத் தடாகத்தில் தங்கியிருக்கும் அன்னப்பறவைகள் தம் குஞ்சுகளுடன் அஞ்சும்படியாகப் பிளந்த வாயினை உடைய வாளை மீன்கள் தமக்குள் போர் புரியும் காட்சியையும் காவிரியின் வளத்தையும் பட்டினத்தார் கவினுறப் பாடியுள்ளார் (11.28.7 : 34-9).

இங்ஙனமே, தில்லை, கச்சி ஆகிய பகுதிகளின் வளத்தையும் இனிய கவிதைகளாகப் பாடியுள்ள பட்டினத்தாரின் இயற்கை ஈடுபாடு போற்றத்தகுவது.

இனி, திருமுறைகளைத் தொகுத்துதவிய பெருந் தொண்டராகிய நம்பியாண்டார் நம்பியின் இலக்கியங்களில் பயின்றுள்ள இயற்கைக் காட்சிகள் சிலவற்றைக் காண்போம்.

திருநாரையூரில் தோன்றியவர் நம்பி. அவ்வூரில் கோயில் கொண்டுள்ள விநாயகர் பேரில் இரட்டை மணிமாலை பாடியவர். பொழில்வளம் மிக்க நாரையூரின் சிறப்பினைப் போற்றியவர். தேன் பிலிற்றும் மலர்ப்பொழில்கள் இவ்வூரின் எழிலைப் பெருக்கின (11.31.13,19). வான் மதி தவழும் பொழில்கள் என்று பாடுகிறார் (31.14).

கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் தில்லையின் எல்லையில் எழிலைக் கண்குளிரக் கண்டு பாடுகிறார். அணிகொள் தில்லை (6), நறவியல் பூம்பொழில் தில்லை (13). வண்தேன் மலர்த்தில்லை (14), எழில் தில்லை (19, 20), பூந்தண் பொழில்சூழ் புலியூர் (26) என்பன சில சொற்சித்திரங்கள். நீர்வளம் மிக்க தில்லை என்ற குறிப்புடையன சில பாக்கள் (8, 12, 24).

ஆளுடையபிள்ளை ஆகிய சம்பந்தர் பேரில் ஆறு பிரபந்தங்கள் பாடிய அருங்கவி நம்பி. சிகாழியின் சீர்னைப் பரவியர். வளைந்த வெள்ளிய சங்குகள் முத்துக்களைச் சொரியும் கடலினால் புடை சூழப்பட்ட காழியின் சிறப்பினை,

''குடவெள் வளைகள்,
தரளம் சொரியும் கடல்புடை சூழ்ந்த தராய்
மன்னனே'' (34-4)

என்று இசைத்துள்ளார். மேகங்கள் தங்கும் பொழிற்காழி (34.60) எனப் பாராட்டுவார்.

திருச்சண்பை விருத்தத்தில் காழியின் நெய்தல் வளம் பேசப் படுகிறது. மரக்கலங்கள் வந்தியங்கும் காழியின் கடற்கரையில் புன்னைமரத்தின் கீழ்ச் சங்குகள் வந்து தங்கும் என்கிறார் (35.2) நாரைகள் சங்குகளைக் கொத்துவதற்கு வட்டமிடக் கண்ட கயல் மீன்கள் துள்ளும் புனல்வளம் மிக்கது காழி (35.4). பைங் கிளிகள் மாந்தளிரைக் கோதிச் சண்பகச் சோலைக்குத் தாவிச் சென்று பின்னர் கமுகங்குலைகளில் ஏறும் பொழில் வளம் பொறிக்கப்படுகிறது (35.5). விசும்பில் மின்னும் மேகத்தைக் கண்டு வண்டுகள் பறக்கும்; கொக்கு பெடையோடும் குளிர் சோலையில் உறங்கும் (35.7). அலை வரிசையில் கதிர் முத்தங் களை ஈனும் சங்குகள் ஓடும். பவளங்களைக் கடல் அலை

கொணரும் பதி திருச்சண்பை எனப்படும் சீகாழி (35.8). பொய்கைகளில் சங்குகள், செங்கயல்கள் சேறுமண்ட விளை யாடும். தேமாங்கனிகள் சிதறுவதால் ஒழுகும் பழச்சாறு வயலில் மண்டிக்கிடக்கும் (35.9). வாழைவனம், செங்கழுநீர்ப் பொய்கை, கரும்புவயல் ஆகியவற்றில் பாய்ந்து புனல் வளம் கொழிக்கும் சண்பை (35-10).

இங்ஙனம் மருதவளமும் நெய்தல் வளமும் மிக்க சீகாழியின் இயற்கைப் பொலிவு நம்பியாண்டார் நம்பியால் அழகுறப் பாடப் பெற்றுள்ள திறம் அறிந்து மகிழத்தக்கது.

இதுகாறும் பதினோராம் திருமுறைப் பாடல்களில் படைக்கப் பெற்றுள்ள இயற்கைக் காட்சிகள் சிலவற்றைக் கண்டோம். இனி, பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்தில் காணப்பெறும் இயற்கைப் புனைவுகள் சிலவற்றை நோக்குவோம்

**பெரியபுராணத்தில் இயற்கை**

சேக்கிழார் சிறந்த வரலாற்றாசிரியர். விழுமிய கவிஞர். பழுத்த ஞானி, தொண்டர்கள் வரலாற்றினைக் காவியச் சுவை பெருகப் பாடிய கற்பனை விற்பனர். திருமலை, திருநாடு, திருநகரம் ஆகியவற்றின் சிறப்புக்களைப் பாடும் பெரிய புராணத்தின் தொடக்கப் பகுதிகளிலும், நாயன்மார்கள் அவதரித்த தலங்களைப் பாடும் இடங்களிலும் இயற்கை எழில் கொஞ்சும் இனிய காட்சிகளைத் தீங்கவிதைகளாகப் பாடியவர் சேக்கிழார். இடச்சுருக்கம் கருதி இரண்டொரு காட்சிகளை மட்டும் இங்குச் சுட்டுதல் தகும்,

சோழ வளநாட்டினை மேம்படுத்தற்காக ஓடிவரும் காவிரித் தாயின் அறச் செயலுக்கு, அனைத்துயிர்த் தொகுதியையும் பேணிக் காக்கும் அம்பிகையின் கருணை வெள்ளம் உவமை கூறப் பெற்றது (1.2.6). உயிர்களைக் காத்தலின் காவிரியாற்றினைத் தாய் என்று போற்றினர். இளங்கோவடிகளும் ''பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்'' என்று போற்றினர், சோழநாட்டு மக்களைக் காவிரி அன்னையின் பிள்ளைகள் எனச் சொல்லிப் பெருமகிழ்ச்சி பெற்றார் இளங்கோ.

மருதவளம் மிக்கது சோழநாடு. இந்நாட்டு வயல்களில் வளர்ந்துள்ள நெல்லெல்லாம் கரும்புகள் போலவும், கரும்புகள் கமுகுகள் ஒப்பவும் செழித்துள்ளன (1.2.15). அன்னப் பறவைகள் திளைத்து விளையாடும் அகன்ற துறைகளையுடைய பொய்கையில் எருமைகள் துதைந்து படிவதால் இரியலுற்ற

வாளை மீன்கள் துள்ளி எழுந்து கரையில் நிற்கும் கமுகின்மேல் பாயும் காட்சி வானவில்லைப் போல் வனப்புடையது எனப் பாடுகிறார் சேக்கிழார்.

''அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்
துன்னும் மேதி படியத் துதைந்தெழும்
கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன
மன்னு வான்மிசை வானவில் போலுமால்'' (1-2-19)

பொய்கையினையும் கமுகின் உச்சியையும் ஒருசேர வளைப்பது போல் வாளைமீன் வளைந்தெழும்பிப் பாயும் காட்சி அமைந்துள்ளது. ஒட்டக்கூத்தர் பாடியதாக,

''வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறி
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்கும் சோணாடா'')

எனவரும் பாடற்பகுதியிலும் இதனுடன் இயைபுறுத்திக் கருதத் தக்க ஒரு வாளைக் காட்சி வந்துள்ளது. இவையாவும் இடைக் காலக் கற்பனைகளாக எண்ணற்பாலன.

அப்பர் பெருமான் அவதரித்த திருவாமூரைப் பாடியுள்ள பெரியபுராணப் பகுதிகள் பலவும் சேக்கிழாரின் இயற்கை ஈடுபாட்டிற்கு ஏற்ற சான்றாக இலங்குவன. சேக்கிழார் ஒரு வேளாளர். அப்பரும் வேளாண் குடியில் தோன்றியவர். ஆதலின், வயற்களங்களை வருணிக்கும் பகுதிகள் மிகவும் சிறப்பாக அமைகின்றன. திருவாமூரில் பெண்ணை ஆற்றின் வளத்தால் நிலவளம் மல்கியது. தும்பிக்கைகளை அசைத்து வரும் களிறுகளின் முகம்போல வாழைப் பெருங்குலைகள் விளங்குவன, வெற்றிதரும் குதிரைகளின் முகம்போல வளைந்துள்ள செந்நெல் கதிர்க்கற்றைகள் காட்சிதருவன. நெற்குவை யினை வீட்டிற்கு ஏற்றிச் செல்வதற்காக வந்துள்ள பெரும் வண்டிகள் தேர்கள்போல் திகழ்கின்றன. மகிழ்ச்சி ஆரவாரம் புரியும் வேளாளர் பெருமக்கள் காலாட்படை வீரர்களாகவே காட்சி தருகின்றனர். எனவே வயற்களத்தில் ஒரு போர்க்களக் காட்சியைப் படைத்துக்காட்டி, நாற்பெரும் படைசூழும் வேளாண்மைத் தொழிலால் மேம்படும் பாங்கினையும் உய்த்துணர வைத்தார். இயற்கை வளம்தான் மன்னனின் படை

பலத்திற்கு அடிப்படை என்ற கருத்தும் சுட்டப்பெற்றது. இத்தகைய கற்பனை வளம் பொருத்திய பாடல் இதுதான்.

''கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கைம்
முகம்காட்ட
மருங்குவளை கதிர்ச்செந்நெல் வயப்புரவி
முகம்காட்டப்
பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞர்ஆர்ப் பொலி
பிறங்க
நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவாம்
நிறைமருதம்'' (21-6)

இவ்வினிய பாடலில் இடம்பெறும் 'காட்ட' என்ற சொல் உவமை உருபாகத் தொல்காப்பியரால் முன்பே சுட்டப் பெற்றுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. சம்பந்தர் பாடல். களிலும் இச்சொல் உவமை உருவாக வழங்குதல் முன்பு எடுத்துக் காட்டிய பாடலினால் அறியலாம்.

பெண்ணை ஆற்றின் பெருமையினைச் சேக்கிழார் சுட்டும் திறம் காணத்தக்கது. மலையிலிருந்து வரும் வழியில் மணிக் குவியல்களையும் முல்லைப் புறவின் நறுமலர்களையும் திரைகளினால் தாங்கி வந்து இருமருங்கிலும் சார்ந்துள்ள பண்ணை வயல்களில் விசி எறிந்து விரைந்து செல்லும் பெண்ணையாறு நடுநாட்டின் வளத்தைப் பெருக்கும் நல்லாறாக உள்ளது. இதன் பொலிவினையும் கொடையினையும்,

''புனப்பன்னை மணியினொடும் புறவின்நறும்
புதுமலரின்
கனப்பெண்ணில் திரைசுமந்து கரைமருங்கு
பெரும்பகட்டேர்
இனப்பண்ணை உழும்பண்ணை எறிந்துலவி
எவ்வுலகும்
வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய்
வளம்பெருகும்'' (21-31)

எனவரும் பாடலில் சேக்கிழார் சித்திரித்துள்ளார். வள்ளுவர், ''மடுத்தவாய் எல்லாம் பகடன்னான்'' என்றார். பகடு என்பது காளை. பெருங்காளைகளை ஏரிற்பூட்டி வயல்களில் உழும் காட்சியையும் இப்பாடலில் காண்கிறோம். வேளாண்

சமுதாயத்தின் வளத்தினை அக்குடியில் தோன்றிய சேக்கிழார் அறிந்து அழகுறப் பாடியுள்ளார். பிற்காலத்தெழுந்த காப்பியங்கள், தலபுராணங்கள் முதலிய இலக்கியங்களில் ஆற்றுப்படலம் பாட முற்பட்ட பாவலர்க்கு சேக்கிழாரின் சொல்லோவியங்கள் முன்மாதிரிகளாக மிளிர்ந்துள்ளன.

இது காறும் எழுதியலாற்றால் இறைவனையும் தொண்டர் களையும் பாடவந்த அருட்கவிஞர்கள் இயற்கைக் காட்சி களையும் இயற்கை கற்பிக்கும் எண்ணங்களையும் எழிற்கவிதை களாகப் புனைந்து பாடியுள்ள பாங்கினைப் பார்த்தோம். இறைவன், இயற்கை, மனிதன் என்ற மூன்றினையும் இயைத்தும் இணைத்தும் நோக்கும் விரிவுள்ளம் இவர்கட்கே உரிய தனிச் சிறப்பு எனலாம். இவர்களை இலக்கியர்களாக நோக்குங்கால், இவர்தம் படைப்புக்களில் அரிய இனிய கற்பனைகள் பற்பல அமைந்தொளிர்தல் காணலாம். எனவே, அவர்தம் படைப் பாற்றலைப் புலப்படுத்தும் கற்பனைவளம் குறித்து அடுத்த இயலில் ஆராய்ந்து காண்போம்.

# திருமுறையில் கற்பனை

இலக்கியத்திற்குச் சுவையுணர்வையும் பொருட்சிறப்பையும் மிகுவிக்கும் கலைக் கூறுகளில் கற்பனை முதன்மை பெறுகிறது. விழுமிய உணர்வுகளைப் பயில்பவர் உள்ளத்தில் எழச் செய்யும் ஆற்றல் கற்பனைக்கு உண்டு. இயற்கைப் பொருள்களும் கலைப்படைப்புகளும் இன்பம் தருவன. கற்பனைத்திறனால் படைக்கப்பெறும் கவிதை, சிற்பம், ஓவியம் முதலிய கலைகள் இயற்கைப் பொருளைவிட எழிலும் இன்பமும் மிகுதியாகத் தருதல் சுட்டுதற்கு உரியது. கவிதைக் கண்கொண்டு இயற்கைப் பொருள்களைக் கூர்ந்துநோக்கும் ஆற்றலும்.அங்ஙனம் ஊடுருவிப் பார்க்கும்பொழுது உருவாகும் கற்பனை ஆக்கமும் படைப் பாளரிடம் சிறப்பாகக் காணப்பெறுவன.

கற்பனையின் வாயிலாக அழகு என்னும் உண்மையினைத் தரிசிக்க முடியும் என்று கீட்சு (keats) என்னும் புனைவியற் கவிஞர் கருதினார்[1] ஆக்கக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை, நினைவுகூர் கற்பனை, தொலை நோக்குக்கற்பனைஎனப் பலவாறாகக், கற்பனைகளை வகைமை செய்து திறனாய்வாளர் விளக்குதல் உண்டு. பத்தி இலக்கியம் படைத்த அருளாளர்கள் கற்பனைத்திறம் மிக்க கவி ஞர்களாகவும் படைப்பாற்றல் மிக்க பாவலர்களாகவும் திகழும் திறத்தினை ஒருசிலபாடற்பகுதிகளை நோக்கி உணர்தல் கூடும்.

**தாமரைத் தவிசு**

மருதவயல்கள் மிக்க சீகாழி, திருவீழிமிழலை ஆகிய தலங்களில் தாமரை பூத்த தடாகங்கள் தவப்பல. இத்தகைய நீர்நிலைகளில் செறிவுடைய இதழ்கள் பொருந்திய தாமரை மலர்கள் கண்ணுக்கினிய காட்சியாகத் திகழ்கின்றன. அம்மலர்

---

1. English Critical Texts, p. 256

மருங்கில் உள்ள பரந்த இலைகள் குடை பிடித்தாற்போல் தோன்றுகின்றன. செந்தாமரை மலரின்மேல் வெள்ளிய இள அண்ணபறவை வீற்றுள்ளது. அருகில் கழனியில் விளைந்துள்ள செந்நெற் கதிர்கள் காற்றில் அசைகின்றன. மிழலை நகர்க்கு வரும் சம்பந்தர்க்கு இக்காட்சி கண்ணுக்கு விருந்தாக அமைகிறது. அவருடைய கற்பனைப் பார்வையில் நீர்நிலை சார்ந்த வயல் நாளோலக்கமாகத் தெரிகிறது. தாமரை மலர் அரசர் அமர்வதற்குரிய தவிசாகக் காட்சி தருகிறது, அதில் வைகும் இளஅன்னம் இளவரசராகவே காட்சி அளிக்கிறது. இருமருங்கும் செந்நெற்கற்றைகள் அசைவது சாமரம் வீசுவது போல் தோன்றுகிறது. எனவே, நீர்நிலை, மலர், அன்னம், செந்நெல் ஆகியவற்றுடன் முறையே அரண்மனை, தவிசு, இளங்கோ, சாமரம் முதலியவற்றுடன் இயைபுபடுத்தி ஓர் அரிய கற்பனையைப் (Associative Imagination) படைத்துள்ளார். அக்கவிதை இதுவே :

''செறியிதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரை இரட்ட இளஅன்னம்
வீற்றிருக்கும் மிழலை யாமே''. (1-132-2)

இத்தகைய கற்பனையினை மற்றொரு பாடலிலும் படைத்துள்ளார்.

''சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள்!'' (1-60-6)

மேற்சுட்டிய பாடலின் கற்பனை இப்பாடலின் விரிவாகக் கொள்ளத்தக்கது. வீற்றிருத்தல் என்பது அன்னத்தின் கம்பீரமான தோற்றத்தையும் பெருமிதப் பொலிவையும் புலப்படுத்தும். பின்னும் ஒரு பாடலில்,

''அள்ளல் விளைகழனி அழகார் விரைத்தாமரை
மேல் அன்னப்
புள்ளினம் வைகிஎழும் புகலிப் பதியாமே''
(1-104-4)

என்று தாமரைத் தவிசில் வைகிஎழும் அன்னப்பறவைகள் காட்சி தருகின்றன. சேற்றிலே செந்தாமரை தோன்றுகிறது. சேறாயினும் நெல் முதலிய கூலங்களை விளைவிக்கும் கழனி

யாகவும் உள்ளது. அங்குத் தோன்றும் தாமரை மலர் அனைவர் உள்ளங்கட்கும் இன்பம் தருவது. வண்ணம், வடிவம், மணம், கவர்ச்சி முதலிய தன்மையினால் சிறந்து விளங்கும் தாமரை மலர், அன்னப்பறவைக்கு ஆசனமாகும் சிறப்புப் பெறுகிறது. நீரை விலக்கிப் பாலைப் பருகும் பாங்கு அன்னத்திற்கு உரியது எனபர். தலைமைப் பொறுப்பேற்போர் தீயன விலக்கி நல்லன கொண்டு நடத்துதல் வேண்டும் என்ற குறிப்பும் புலனாகும். சேற்றிலிருந்து சிறப்புடைய தாமரை தோன்றுதல் போல், எளிய மாந்தரிடமிருந்துதான் உயர்ந்த தலைமைப்பீடம் உருவாதல் வேண்டும் என்ற குறிப்பும் கொள்ளற்பாலது. தாமரை மலரைச் சமணர், பௌத்தர் ஆகிய புறச்சமயத்தவர் கூடப் போற்றினர். தாமரைத் தவிசில் தலைமை அன்னம் வீற்றிருக்கும் என்ற அரிய காட்சி மணிமேகலையிலும் காணப் படுகிறது. சாத்தனார்,

''மாசறத் தெளிந்த மணிநீர் இலஞ்சிப்
பாசடைப் பரப்பில் பன்மலர் இடைநின்று
ஒருதனி ஓங்கிய விரைமலர்த் தாமரை
அரச அன்னம் ஆங்கினி திருப்ப'' . (4-7-10)

என்று புனைந்துரைக்கும் காட்சி இங்கு இயைபுறுத்தி எண்ணிப் பார்த்தற்கு உரியது. சம்பந்தர் மணிமேகலையினைப் படித் திருத்தல் கூடும். இலக்கியப் புலமை மிக்கவர் என்பதால் இங்ஙனம் எண்ணுதல் தவறாகாது.

அழகியல் உணர்வும் கலையுணர்வும் கொண்டு சம்பந்தர் படைத்துள்ள கற்பனையின் மற்றொரு வடிவத்தைச் சுந்தரர் தேவாரத்திலும் பார்க்கிறோம். திருக்கானாட்டு முள்ளூர் என்னும் தலத்தின் வனப்பினைப் புனைந்து பாடும் சுந்தரர்,

''அரும்புயர்ந்த அரவிந்தத் தணிமலர்கள் ஏறி
அன்னங்கள் விளையாடும் அகன்றுறையின் அருகே''
(7-40-3)

என்று அழகுறப் படைத்துள்ளார். அரவிந்தம் என்பது தாமரை. தாமரையின் அழகிய மலர்களின் மிசை அன்னப் பறவைகள் விளையாடுதல் அவர் கண்ணுக்கு விருந்தாக அமைந்தது.

வடதிருமுல்லைவாயில் தொண்டை நாட்டுத் தலங்களில் ஒன்றாகும். முல்லை மணக்கும் சோலை சூழ்ந்த இத்தலத்தினை,

''பொன்னலங் கழனிப் புதுவிரை மருவிப்
பொறிவரி வண்டிசை பாட
அந்நலங் கமலத் தவிசின்மேல் உறங்கும்
அலவன்வந் துலவிட அள்ளற்
செந்நெலங் கழனி சூழ்திரு முல்லை
வாயிலாய்!'' (7-69-4)

என்று புனைந்து போற்றினார் சுந்தரர். கற்பனைப்போக்கில் ஒரு மாற்றத்தைப் பார்க்கிறோம். பொன்னொத்த நெல் விளையும் அழகிய கழனிகளில் பூத்துள்ள வண்ண மலர்களின் நறுமணத் துகளைப் பொறிவரி வண்டுகள் நுகர்ந்து இன்னிசை பாடுவது தாமரைத் தவிசில் உறங்கும் நண்டுகளுக்குத் தாலாட்டாக அமைகிறது. அன்னம் இருக்க வேண்டிய தவிசில் அலவன் இருக்கிறது. நாய்க்குத் தவிசிட்டதுபோல் தனக்கு ஈசன் சிவப்பேறு தந்ததை மாணிக்கவாசகர் போற்றியுள்ளமை இங்கு எண்ணத்தக்கது. தவிசு யாவர்க்கும் பொது என்ற பெருநிலையினை இக்கற்பனை நமக்குக் காட்டுவதாகக் கொள்ளலாம். நெற்கழனிகள் சூழலில் திருமுல்லைவாயிலில் ஈசன் கோயில் கொண்டு அருள்பாலிக்கும் திறத்தைச் சுந்தரர் சுட்டியுள்ளார்.

திருஞானசம்பந்தர் படைத்துள்ள மற்றுமொரு கற்பனையினை நோக்குவோம். சின்னஞ்சிறு வயதில் தெருவில் பிள்ளைகளோடு விளையாடிய இளம்பருவத்தில் அவர்தம் பச்சை உள்ளத்தில் ஒரு காட்சி படிந்திருத்தல் வேண்டும். தன்னையொத்த சிறுவர்கள் கவண் கையில் வைத்துக் கொண்டு அதில் கல்லினைப் பொருத்திக் கனிகளையோ சிறு பறவைகளையோ குறிவைத்து அடிக்கும் விளையாட்டு அவர் நினைவைவிட்டு நீங்கவில்லை. அவர் பிறப்பிடம் ஆகிய கழுமல வளநகரில் ஒரு காட்சியைப் பார்க்கிறார். சரியை, கிரியை ஆகிய தவநெறியில் நிற்போர் இறைவனை வழிபடுதற்பொருட்டு நீண்ட மரக் கொம்புகளை வளைத்துப் பூக்களைப் பறிக்கின்றனர். பறித்த பின்னர் அவர்கள் கையினின்றும் விடுபட்டுச் செல்லும் அக்கொம்புகள் விசையுடன் சென்று நெருங்கி நிற்கும் மாங் கிளைகளைத் தாக்க, அவற்றினின்றும் காய்கள் அருகிலிருக்கும் சுனைநீரில் விழுகின்றன. கவணிலிருந்து விடுவிக்கப்பெற்ற கற்கள்போல் அக்காய்கள் விழுவதால் நீர்வாழ் பறவைகள் இரிந்து ஓடுகின்றன, இவ்வினிய காட்சியை,

''தவமுயல்வார் மலர்பறிப்பத் தாழவிடு
கொம்புதைப்பக் கொக்கின் காய்கள்
கவண்எறிகற் போல்சுனையில் கரைசேரப் புள்ளிரியும்
கழுமலமே'' (1-129-7)

என்று சொல்லோவியம் செய்துள்ளார். வீதியில் பிள்ளைகள் கவணில் கல்வைத்து விளையாடும் பழைய காட்சியை, தவமுயல்வார் தாழவிடு பூங்கொம்பு தாக்குதலால் மாங் காய்கள் கீழேவிழும் புதிய காட்சியுடன் பொருத்திப் பார்த்து இயைபுக் கற்பனை படைத்து இலக்கிய இன்பம் வழங்கி யுள்ளார் சம்பந்தர்.

இத்தகைய புனைவுடன் ஒருங்கு வைத்து எண்ணத்தக்க மற்றொரு கற்பனையினைக் குறுந்தொகையில் காண்கிறோம். தினைப்புனம் காப்பவர் விடுக்கும் கவண்கல்லின் ஓசையைக் கேட்டு வெருவிய காட்டுயானை, வளைத்துத் தின்று கொண் டிருந்த பசிய மூங்கிலைத் தும்பிக்கையிலிருந்து விடுத்தது. அங்ஙனம் விடப்பட்ட மூங்கில், மீன் சிக்கிக் கொண்ட தூண்டிலை விரைந்து தூக்கும்பொழுது நிமிர்தல் போல் நிமிர்ந்தது என்றொரு காட்சியைப் புலவர் படைத்துள்ளார். யானையின் கையிலிருந்து விடுபட்ட மூங்கில் நிமிர்தலுடன் மீனெறி தூண்டிலின் நிமிர்வு இயைத்தெண்ணப்பட்டு உருவாகும் இப் புனைவினை,

''ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
**மீனெறி தூண்டிலின்** நிவக்கும்'' (54-2-4)

எனவரும் குறுந்தொகைப் பாடலில் காணலாம். இப்பாடலின் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை. ஆதலின், இதில் பயின்றுள்ள அருந்தொடரின் அடிப்படையில் ''மீனெறி தூண்டிலார்'' என்று சிறப்புப்பெயர் பெற்றார்.

இக்குறுந்தொகைப் பாடலின் கற்பனைக்கு அருகில் வரத்தக்க மற்றொரு புனைவு சம்பந்தர் தேவாரத்தில் பயின் றுள்ளது. தான் பருத்த மூங்கிலின் உச்சியை வளைத்துப் பற்றிய யானை, இலைகளைத் தின்றபின் அதனைவிட்டது. விடப்பட்ட மூங்கில் விசையுடன் கார் முகிலைக் கீறியது. இத்தகைய கவின் மிக்க தலத்தெழுந்தருள்பவர் கற்குடி மாமலையார் என்று சம்பந்தர் பாடுகிறார்:

''தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட
விசைபோய்க்
காளம தார்முகில் கீறும் சுற்குடி மாமலை யாரே''
(1-43-8)

இக்கற்பனையில் இயல்புக்குக் கூடுதலான கூறு காணப்படுதலின் இதனை உயர்வு நவிற்சிப் புனைவு (Fancy) என்று கொள்ளுதல் சாலும்.

செந்நெல் காய்த்திருக்கும் பழனங்கள். அவற்றிற்குப் பக்கத்தில் செழுமையான புன்னை மரங்கள். நெய்தல் சார்புடைய வெண்தரையில் புன்னையின் பொன்னிறப் பூக்கள் வெண்துணியில் பரப்பப்பட்ட பவளங்களை ஒத்துள்ளன என்று மற்றொரு இயைபுக் கற்பனையினைச் சம்பந்தர் படைத்துள்ளார்

''செந்நெலங் கழனிப்பழனத் தயலேசெழும்
புன்னைவெண் கிழியிற்பவளம் புரை பூந்தராய்''

இங்ஙனம் வரும் காட்சிகள் எண்ணில.

காழியைப்போல் சம்பந்தர் கண்ணையும் கருத்தையும் கவர்ந்த தலம் வீழிநகர் ஆகும். இந்நகரின் எழில்வளத்தைக் கற்பனைவளம் கொழிக்கப் பாடும் கவிதை நலம் காண்போம். கடலில் பிறக்கும் முத்தையும் பவளத்தையும் பொய்கையில் பூக்கும் தாமரையினையும், ஆற்றில் துள்ளிக்குதிக்கும் கயல் மீனையும் சம்பந்தர் ஆர்வத்தோடு பார்த்துச்சுவைத்திருக்கிறார். வெவ்வேறு இடங்களில் தோன்றும் முத்து, பவளம், தாமரை. கயல் ஆகிய பொருள்களை ஓரிடத்தில் பொருத்திப் பார்ப்பதன் வாயிலாக ஆக்கக் கற்பனையினை (Creative Imagination) அழகாகப் படைத்துக் காட்டுகிறார். கவின்மிகு காரிகையின் முறுவலின் முத்தைப் பார்க்கிறார். அவர்தம் வாயில் பவளமும், முகத்தில் தாமரையும், விழியில் கயலையும் காண்கின்றார். அக்காட்சியில் கவிதை மலர்கின்றது.

''கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநகம் முகம்
காட்டக்
குறித்து நீர்மேல்
விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம் வாய் காட்டும்
மிழலை யாமே'' (i-132-3)

தரளம் என்பது முத்து. கடற்காழி நகரில் கொழுமை மிக்க செழுமையான முத்துக்கள் நிரம்ப உண்டு. அம்முத்துக்களைப்

பார்க்கும் இளம்நெஞ்சினராகிய சம்பந்தர்க்கு ஏந்திழையாரின் எழில் சிந்தும் பற்கள் நினைவுக்கு வருகின்றன. நகை என்பது ஒளிபொருந்திய சிரிப்பு என்ற பொருள்தரினும் சிரித்தற்குரிய பல்லைக் குறித்தது. கோகநகம் என்பது தாமரை. தாமரை மலரில் தையலாரின் முகத்தைப் பார்க்கிறார். தாமரை மலரா? தையலாரின் முகமா? என்ற உணர்வு எழுகிறது. மலர் மங்கையர் முகத்தைக் காட்டுகிறது. பெண்களின் விழிக்குக் கயல்மீனை உவமை கூறுதல் பழைய மரபு. ஆவலாய் அழகனின் இடப் பாகம் கொண்ட அன்னையை அங்கயகண்ணி என்று அருளாளரும் கவிஞரும் போற்றுதல் காணத்தக்கது. செக்கச்சிவந்த வாயினைப் 'பவளவாய்' என்பது மரபு. பவளம் பாவையரின் வாயைக் காட்டும். இத்தகைய இயற்கை வளமும் எழிற்பொலிவும் மிக்கது விழிமிழலை என்பது சம்பந்தரின் கவிதை கற்பனை.

திருவெண்காடு என்ற தலமும் கைபுனைந்தியற்றாக் கவின் நலம் வாய்ந்தது. இந்நகரம் முல்லையும் மருதமும் நெய்தலும் மயங்கிய வளம் பொருந்தியது. இதன் மருங்கில் கடல் சூழ்ந் திருந்த உண்மையினை, ''வேலைமலி தண்கானல் வெண்காட் டான்'' (2.48.5) என்ற பாடலால் அறியலாம். இத்தலத்துப் பொய்கையில் மடல்விரித்த தாழைகள் மணம் பரப்புகின்றன. அவற்றின் மலர் குருகு என்னும் நீர்ப்பறவை போலக் காட்சி தரும். தாழை மலரின் நிழலைக் கண்ட கெண்டை மீன்கள் தம்மைக் கொத்தவரும் நாரையோ என்று துணுக்குறுகின்றன. பாதுகாப்பான இடத்தைத் தேடித் தாமரை மலர்களின் கீழே சென்று தங்குகின்றன. இங்ஙனம் அஞ்சி ஓடும் காட்சியைப் பார்த்துக் கடல் முத்துக்கள் சிரிக்கின்றன. கவிதை உள்ளமும் கற்பனை நோக்கும் படைப்புத்திறனும் ஒருங்கே வாய்ந்த திருஞானசம்பந்தர்.

''விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின்
தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டும் காட்சியதே''
(2-48-4)

என்று சொல்லோவியம் தீட்டியுள்ளார்.

தென்பாண்டி நாட்டு திருத்தலங்களில் திருக்குற்றாலம் இயற் கைச் சூழலில் அமைந்திலங்குவது. தமிழ்மணமும் தெய்வ மணமும் கமழும் இத்தலத்தின் சிறப்புக்களை அருளாளர்கள் அற்புதமாகப்

பாடியுள்ளனர். குற்றாலநாதரைக் கண்டு வழிபடத் திருஞான சம்பந்தர் வருகிறார். குறிஞ்சிநில மக்களின் வாழ்வியலைப் பார்க்கிறார். ஏனற்புனம் காக்கும் இளமங்கையர் தினை கவர வரும் கிளிகளைக் கடிந்து விரட்டுதற்குக் கல்தேடுகின்றனர். மலைச்சாரலில் அருவிகொழிக்கும் மாணிக்கக் கற்களைக் பொறுக்கி எடுத்துக் கிளிகளை நோக்கி வீசி எறிந்து விரட்டுகின்றனர். இவ்வினிய காட்சியை,

''மைம்மா நீலக் கன்னியர் சாரல் மணிவாரிக்
கொய்ம்மா ஏனல் உண்கிளி ஓப்பும் குற்றாலம்''
(1-99-9)

என்று சொல்லோவியமாகக் தீட்டினர். கிளிகளை விரட்டுவதற்குக்கூட மாணிக்கக் கற்களைப் பயன்படுத்தினர் என்று கூறுவதன் வாயிலாக அவர்தம் செல்வச் செழுமையினையும் பெருமித வாழ்வையும் ஒருங்கே புலப்படுத்தினார். திணை மக்களின் வளத்தைக் கூறும் வகையில் இங்ஙனம் கற்பனைவளம் பொருந்தப் பாடுதல் இலக்கிய மரபாகத் தோன்றுகிறது.

பட்டினப்பாலையில் இத்தகைய காட்சி ஒன்றினைப் பார்க்கிறோம். நெய்தல் நிலத்துப் பெண்கள் முன்றிலில் உணங்க வைத்திருக்கும் மீன், வற்றல் முதலிய உணவுப் பொருட்களைக் கவர்வதற்குக் கோழிகள் வருகின்றன. அவற்றை விரட்டியடிப்பதற்குக் கல் கிடைக்கவில்லை. தங்கள் காதில் அணிந்துள்ள பொற்குழைகளைக் கழற்றிக் கோழியின் மீது வீசியெறிந்து ஓட்டினர். வீசப்பட்ட அக்குழைகள் சிறுவர்கள் உருட்டும் சிறுதேரின் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தும் என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கற்பனை வளம் தோன்றப் பாடினார்.

''நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்''
(பட்டின. 22-25)

என்பது பட்டினப் பாலை. எனவே சங்க இலக்கியம் காட்டும் நெய்தற் பெண்டிரின் செயலும், சம்பந்தர் பாடும் குறிஞ்சிப் பெண்டிரின் செயலும் ஒருங்குவைத்து எண்ணத்தகுவன என்பது புலனாகும்.

இதுகாறும் திருஞானசம்பந்தரின் பாடல்களில் பொதிந்துள்ள கற்பனைத் திறம் குறித்துச் சில சான்றுகளை நோக்கினோம்.

இனி, திருநாவுக்கரசரின் பதிகங்களில் இடம்பெற்றுள்ள கற்பனைகள் சிலவற்றைக் காண்போம்.

**அப்பரின் கற்பனைவளம்**

அப்பர் பெருமான் அம்மையப்பராகிய ஆரூர்ப்பெருமானை நோக்குகின்றார். பெருமானின் ஒருபக்கம் அம்மை. மேனியில் பாம்பு ஆபரணம். சடைமுடியில் திங்கள். பெண் என்று சொன்னால் பொதுவாகப் பயந்த சுபாவம் உடையவர்கள். அம்மையைக்கூட வேடிக்கைக்காக அப்படி எண்ணுகிறார்அப்பர். இறைவன் திருமேனியில் படம் விரித்து ஆடும் பாம்பினைப் பார்த்து நங்கை அஞ்சுகிறாள்! மயில் போன்ற சாயலுடையவள் இடப்பாகம் கொண்ட அன்னை. அன்னையை மயில் என்று கருதி பாம்பு அஞ்சிப் படத்தைச் சுருக்கிக்கொண்டு மூர்க்கம் தவிர்ந்தது. பாம்பு தன்னைப் பிடிக்க வருமோ என்ற அச்சத் தால் முடிமிசையுள்ள திங்கள், இறைவன் சூடியிருக்கும் யானைத் தோல் போர்வைக்குள் ஒளித்துக் கொண்டு எட்டிப் பார்க்கவும், அத்திங்கட் கீற்றினை மின்னல் என்று எண்ணி மேலும் அச்ச முற்றுப் பெருமானின் மார்பணியாகிய பாம்பு அடங்கிவிட்டது என்றொரு வியத்தகு கற்பனையினை அப்பர் படைத்துள்ளார்.

''நாகத்தை நங்கை அஞ்ச நங்கையை மஞ்ஞை என்று
வேகத்தைத் தவிர நாகம் வேழத்தின் உரிவை
போர்த்துப்
பாகத்தில் நிமிர்தல் செய்யார்த் திங்களை
மின்னென் றஞ்சி
ஆகத்தில் கிடந்த நாகம் அடங்கும் ஆரூரனார்க்கே',
(4-53-2)

இப்பாடலில் இறைவனிடம் இணைந்திருக்கும் நாகம், நங்கை, திங்கள் என்ற மூன்றும் கற்பனைக்கு அடிப்படை ஆதல் காணலாம். நாகத்தின் இயல்பு, நங்கையின் தன்மை, திங்களின் இயல்பு ஆகியவற்றைப் புரிந்து கொண்டவர்தாம் இக்கற்பனை யின் முழுச்சிறப்பையும் உணர்ந்து மகிழ முடியும். நங்கையை அஞ்சுவதுபோல் காட்டி, நங்கையைப் பார்த்து நாகம் அஞ்சுவ தாகவும், திங்களை அஞ்சுவதுபோல் காட்டி முடிவில் திங்களைப் பார்த்து நாகம் அஞ்சுவதாகவும் அமைந்துள்ள அழகு எண்ணி இன்புறத்தக்கது. மங்கையும் மயிலும் சாயலால் ஒன்று. ஒற்றைக்கலை மதியும் மின்னல் கீற்றும் ஒளியால் ஒன்று. இத்தகு ஒத்த தன்மைதான் நாகம் அஞ்சுதற்கு ஏதுவாயிற்று.

ஒத்த தன்மையினால்தான் நாகம் மங்கை என்று எண்ணாமல் மயில் என்று எண்ணியது. மதி என்று கருதாமல் மின்னல் என்று கருதியது. மயில் தன்னைக் கொத்திவிடுமோ என்ற அச்சம் அரவுக்கு எழுந்தது. வெடிப்பிற்குள் ஒடுங்கியிருப்பினும் நாகம் மின்னல் இடிக்கும் அஞ்சும் என்பது,

''விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சிவம் சேண்நின்றும் உட்கும்'' (17-4)

எனவரும் நாலடியார் பாடலினாலும் தெளியலாம்.

ஒன்றை ஒன்று பார்த்து அஞ்சியதா என்பது வினாவன்று. அஞ்சவைத்து முடிவில் அரவை அடங்கச் செய்து அற்புதமான கற்பனைக் காட்சியைக் கவிதையாகப் புனைந்துள்ள அப்பரின் படைப்பாற்றலைப் பார்த்து வியக்கின்றோம்.

ஒற்றியூர்ப் பெருமானை உற்றுநோக்குகிறார் அப்பர். பெருமானின் அழகிய சடைமுடி அவருக்குப் பல்வேறு காட்சி களை வழங்குகிறது. தலைமுடியில் கொன்றை மாலை, மண்டையோடு, கங்கை, பாம்பு, பிறைமதி என்ற ஐந்தனையும் தாங்கியுள்ளார். ஊன்றிநோக்குமிடத்து இவ்வைந்தும் இருத் தற்குரிய இடங்கள் வேறுவேறு ஆகும். முல்லைப் புறவில் இருப்பது கொன்றை. சுடுகாட்டில் இருத்தற்கு உரியது தலை யோடு. கடலில் சங்கமம் ஆவது கங்கை. புற்றில் ஒடுங்குவது நச்சரவு. வானில் திகழ்வது பிறைமதி, இவ்வைந்து பொருள்களும் தமக்குரிய புறவு, சுடலை, கடல், புற்று, வான்ஆகிய இடங்களை விடுத்துப் பெருமானின் சடைமுடியில் தங்கியுள்ளன. ஆதலின், சடைமுடி ஒன்றே கொன்றைக்கு முல்லைக் கொல்லையாகவும், மண்டையோட்டிற்குச் சுடலையாகவும், கங்கை தங்குதற்குக் கடலாகவும், நச்சரவிற்குப் புற்றாகவும், பிறைத்திங்களுக்கு வானாகவும் பயன்தரும் பாங்கினை எண்ணி எண்ணி வியக்கும் அப்பர் பெருமான் ஆக்கக்கற்பனை (Creative Imagination) அமையப் பின்வரும் பாடலைப் புனைந்துள்ளார்.

''அங்கள் கடுக்கைக்கு முல்லைப் புறவம்; முறுவல் செய்யும்
பைங்கண் தலைக்குச் சுடலைக் களரி; பருமணிசேர்
கங்கைக்கு வேலை; அரவுக்குப் புற்று; கலைநிரம்பாத்
திங்கட்கு வானம் திருவொற்றி யூரர் திருமுடியே''
(4-86-10)

ஒன்றே பலவாகப் பயன்தரும் பான்மையினைக் கற்பனைவளம் செறியப் பாடியுள்ள நாவுக்கரசரின் படைப்புத்திறனை எண்ணி

மகிழ்கிறோம். கல்லாடத்தில் இக்கற்பனையின் விரிவினைக் காண்கிறோம். இறைவனிடம் இருக்கும் அருகம்புல்லும் கொன்றை மலரும் முல்லைக்குரியவை. பாம்பும் புலித்தோலும் குறிஞ்சிக்குரியவை. மண்டையோடும் சாம்பலும் பாலைக் குரியவை. ஆமையும் கங்கையும் மருதத்திற்குரியவை. நஞ்சும் சங்கும் நெய்தலுக்குரியவை. எனவே, ஐந்திணையாகிய உலகத்தை உடம்பாகவும் தான் உயிராகவும் நின்று இயக்கும் இறைவனின் மாட்சியை,

''ஆகத் தனது பேரருள் மேனியில்
திணையைந் தமைத்த இணையிலி நாயகன்''

என்ற கல்லாடப் பாடல் எழிலுறப் புனைந்து புலப்படுத்துதல் இங்கு எண்ணி இன்புறத்தக்கது.

திருக்கொண்டீச்சரப் பதிகத்தில் அற்புதமான கற்பனைகள் பலவற்றைப் பார்க்கிறோம். அவற்றில் ஒன்றினை மட்டும் இங்குச் சுட்டுதல் சாலும். ஒருவன் தங்கி வாழ்வதற்குக் குடில் அமைக்கும் காட்சியை நாவுக்கரசர் பார்த்திருக்கிறார். குறைந்தமட்டில் இரண்டு கால்கள் நாட்டப்பெறும் குறுக்கும் நெடுக்குமாகப் பல கம்புகள் பாய்ச்சிக் கூரை வேய்ந்து குடிலைக் கட்டி முடிப்பது வழக்கம். இக்குடில் புறத்தே காட்சிக்குப் புலனாவது. இது மனித வாழ்விற்குரிய சிற்றில் இதனைச் துச்சமான குடில் என்ற கருத்தில் 'துச்சில்' என்று கூறுவர் திருவள்ளுவர் (340). இக்குடிலைப் போலவே மற்றொருகுடிலை அப்பர் காட்டுகிறார். அக்குடிலுக்குள் வாழ்வது ஆன்மா. அதுவே உடம்பென்னும் குடில். இருகால்கள் அக்குடிலைச் சுமப்பன. எலும்புகள், நரம்புகள், தசைநார்களினால் இக்குடில் கட்டப்பெற்றும் தோலினால் போத்தப் பெற்றும் மயிர்களால் வேயப்பெற்றும் குருதியால் இயக்கப் பெற்றும் விளங்குவது. உற்றார் நண்பினர் ஓலமிட்டுக் கதறும்படி என்றைக்கேனும் இக்குடில் அழிந்துவிடும். பின்னர் இதனைக் குழிதோண்டிப் புதைப்பார்களே என்பதை எண்ணிப்பார்க்கும்பொழுதும் அச்சம் மேலிடுகிறது என்று பாடுகிறார் :

''கால்கொடுத்து எலும்பு மூட்டிக் கதிர்நரம்பு
ஆக்கையார்த்துத்
தோல்உடுத்து உதிரம் அட்டித் தொகுமயிர்
மேய்ந்த கூரை
ஒல்எடுத்து உழைஞர் கூடி ஒளிப்பதற்கு
அஞ்சு கின்றேன்

சேலுடைப் பழனம் சூழ்ந்த திருக்கொண்டீச்
சரத்து ளானே'' (4-67-3)

மெய்யுணர்வு பயக்கும் இக்கற்பனை. அழியும் குடிலாகிய உடம்பை விடுத்து அழியாத வீட்டினைத் தந்தருளும்படி மற்றொரு பாடலில் வேண்டுகிறார் :

''முருகார் நறுமலர் இண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகாறு அடைசடைக் கற்றையினாய் !
பிணிமேய்ந்திருந்த
இருகாற் குரம்பை இதுநான் உடையது :
இதுபிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக் கீழ்ஓர் தலைமறைவே''
(4-113-2)

உடம்பினை **'இருகால் குரம்பை'** என்று இப்பாடலிலும் குறித்துள்ளார். இறைவன் திருவடியே வீடு என்றும், அழியாத பேரின்பப் பெருவாழ்வு என்றும் பேசப்பெறுவது. அதுவே மெய்ஞ்ஞானிகளின் இறுதிக் குறிக்கோள் ஆகும். இப்பாடல், புத்தமித்திரனார் என்னும் பௌத்தப் பெரியார் இயற்றியுள்ள வீரசோழியத்தின் யாப்புப் படலத்தின் உரையில் இலதக் கலித்துறைக்குச் சான்றாகப் பெருந்தேவனாரால் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது. எனவே, சமய வேறுபாடு நீங்கிய நிலையில் இப்பாடலின் தனிச்சிறப்பு நோக்கி எடுத்தாளப் பெற்ற திறம் எண்ணி இன்புறத்தக்கது. இங்ஙனமே, ''தாமரை புரையும் காமர்சேவடி'' என்ற குறுந்தொகைக்குரிய முருகனைப் பற்றிய கடவுள் வாழ்த்துப் பாடல் குற்றம் தீர்ந்த உயர்ந்த செய்யுளுக்கு இலக்கியமாகச் சமணச் சான்றோரும் யாப்பருங் கலக்காரிகை என்னும் சமண நூலின் உரையாசிரியரும் ஆகிய குணசாகரர் எடுத்துக் காட்டியிருத்தல் இயைபு நோக்கி இயம்புதற்கு உரியது.

இனி, சுந்தரர் தேவாரத்தில் பொதிந்துள்ள கற்பனைக் காட்சிகள் சிலவற்றைச் சிந்திப்போம்.

**சுந்தரரின் கற்பனைத்திறம்**

சம்பந்தரைப் போலவே சுந்தரரும் இயற்கைக் காட்சிகளில் ஈடுபட்டுக் கற்பனைத் திறம் தோன்றக் கவிதை பாடிய

அருளாளர். திருவாஞ்சியம் என்ற தலத்திற்கு வருகிறார் சுந்தரர். இத்தலத்தில் வாழையும் வருக்கைப் பலாவும் செழிப்புற்றுத் திகழ்கின்றன. சுத்த சைவ போசனப் பழக்கமுடைய குரங்குகள் வாழைக்கனிகளையும், பலாச்சுளைகளையும் பங்குபோட்டுக் கொள்கின்றன. பங்கு பிரித்த வகையில் அவற்றிடையே பிணக்கு ஏற்படவே, தாழைத் தண்டினையும் வாழைத்தண்டினையும் எடுத்துப் போர் புரிந்து செருக்கின என்று பாடுகிறார்.

''வாழையின் கனிதானும் மதுவிம்மு வருக்கையின்
சுளையும்
கூழைவானரம் தம்மிற் கூறிது சிறிதெனக் குழறித்
தாழைவாழையந் தண்டாற் செருச்செய்து
தருக்குவாஞ்சியத்துள்
ஏழைபாகனை அல்லால் இறையெனக் கருதுதல்
இலமே'' (7-76-9)

எனவரும் பாடல் எண்ணத்திற்கு விருந்தாக விளங்குவது.

கனிகளைக் கூறுபோடும் குரங்குச் சண்டையினைக் கற்பனை ஆற்றலினால் கவிதையாக்கியுள்ள சுந்தரரின் படைப்புத்திறம் எண்ணுந்தொறும் இன்பம் பயப்பது.

திருப்பருப்பதம் வடக்கே உள்ள திருத்தலம். இமயச் சாரலில் இருப்பது. காளத்திமலை வரை சென்று ஈசனை வழிபட்டு அங்கிருந்த வண்ணமே திருப்பருப்பதத்தினைச் சேவித்தல் சிவனடியார் பலரின் இயல்பு. சுந்தரரும் காளத்தியில் இருந்தபடியே மனக்கண்ணினால் பருப்பதத்தைப் பார்க்கிறார். மலை என்றால் அங்குள்ள கருப்பொருள்கள் யாவும் இயல்பாக மனத்திரையில் காட்சிதரும், களிறுகளும் பிடிகளும் மலைச்சாரலில் திரிவன. தழைகளையும் கனிகளையும் தேடி மலைச்சரிவில் செல்லும்பொழுது இப்பெரிய விலங்குகள் தனித்தனியே குழுக்குழுவாகப் பிரிந்து போய்விடுதலும் உண்டு. பிரிவாற்றாத நிலையில், களிற்றினம் பிடிக்கூட்டத்தைக் காணாது ஒருபுறம் தேடிப் போதலும், மற்றொருபுறம் களிறுகளைக் காணாத பிடிகள் அவற்றின் பிளிறலைக் கேட்டு இடம் கண்டு செல்லும் பொருட்டுச் செவிகளைத் தாழ்த்தியபடி நின்றன. அங்ஙனம் வருந்தி நிற்கும் நிலைக்கு இரங்கிய மலைவேடர்கள் இலைகளால் பெரிய கிண்ணம் செய்து தேனைப் பெய்து அவற்றை உண்ணும்படிச் செய்தனர் என்று

ஓர் உயரிய இனிய எழிலிய கற்பனைக் காட்சியைப் படைத்துள்ளார்.

> ''ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலில் திரியத்
> தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
> மானக்குற அடல்வேடர்கள் இலையாற் கலைகோலித்
> தேனைப்பிழிந் தினிதூட்டிடும் சீபர்ப்பத மலையே''
> (7-79-5)

காணாத ஒன்றைக் கற்பனைத் திறத்தால் கண்டு இயல்பொடு பொருத்திப் பாடுவது கலையுணர்வு மிக்க கவிஞர்க்கே அமையும் ஆற்றல் ஆகும். அவ்வாற்றல் சுந்தரரிடம் சிறந்து விளங்கக் காண்கிறோம்.

திருப்பைஞ்ஞீலி என்ற தலத்தில் ஈசன் பிட்சாடனராக வீற்றிருக்கிறார். இப்பெருமானைப் பரவிப் போற்றும் சுந்தரர் கற்பனையில் அப்பெருமான் வீதியுலா வருகிறார். கையில் கபாலம் ஏந்தியுள்ளார். முன்னங்கையில் அரவம் படம் எடுத்து ஆடுகிறது. பாம்பு இசைக்குக் கட்டுப்பட்டு நிற்கும் என்பதைப் பிச்சை இடவந்த பெண்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள். எனவே பிட்சாடனர் கையில் ஆடரவம் கட்டப்பட்டு இருப்பதற்குக் காரணத்தை அவரிடமே வினவுகின்றனர். ''பெருமானே! செந்தமிழ் இசைத்திறம் வல்லீரோ?'' என்பதே அவர்தம் கேள்வி. எனினும், இம்மங்கையர் நச்சரவினைப் பார்த்து அஞ்சுகின்றனர். பலியைப் பாத்திரத்தில் போட முடியாமலும், பின்வாங்கிச் செல்லவும் அவர்களால் இயலாமலும் நின்றவண்ணம் உள்ளனர். பெருமானின் பேரழகு கண்ணையும் கருத்தையும் கவர்ந்து அவர்களை ஆட்கொண்டது. செக்கர் வானத்தைப்போலும் செம்மேனியன் இறைவன். அப்பெருமான் கோயில் கொண்டிருக்கும் தலமோ இயற்கை எழில் கொஞ்சும் மணம்மிக்க மலர்ச்சோலைகளினால் சூழ்ந்துள்ளது. பைஞ்ஞீலிப் பெருமானைப் பார்த்துப் பெண்கள் பேசும் பாங்கில்,

> ''செந்தமிழ்த் திறம் வல்லிரோ! செங்கண் அரவம் முன்கையில் ஆடவே
> வந்து நிற்கும் இதென்கொலோ? பலிமாற்ற மாட்டோம் இடகிலோம்

> பைந்தண் மாமலர் உந்துசோலைகள் கந்தநாறு
> பைஞ்ஞீலியீர்!
> அந்திவானமும் மேனியோ சொலும்! ஆரணீய
> விடங்கரே'' (7-36-4)

என்ற இனிய பாடலைப் படைத்துள்ளார். நாடகப்பாங்கும் உளவியல் பாங்கும் ஒருங்கே விளங்க இக்கற்பனைக் கவிதை இனிக்கிறது:

**மாணிக்கவாசகரின் கற்பனைத்திறம்**

அருள்பழுத்த ஞானச் செல்வராகிய மாணிக்கவாசகரின் அற்புதமான பாடல்களில் சிந்தைக்கினிய கற்பனைச் செல்வம் செறிந்து பொதிந்துள்ள சிறப்பினைச் சிறிது காண்போம்.

மார்கழித்திங்களில் ஆதிரை நாளுக்குரிய ஆடல்வல்லானைப் பாவைப்பெண்கள் பரவி வாழ்த்தி நாடும் வீடும் நலமும் வளமும் பெற்றுச் செழிக்க வேண்டுமென்று நோன்பியற்றுவர். புலர்காலைப் பொழுதில் துயிலெழுந்து திரளாகக் கூடிச்சென்று நீர்நிலையில் பரமன் புகழ்பாடிக் குளித்துத் திளைத்து மகிழ்வர். நீர்மிகுந்த மடுவினைக் கற்பனைநலம் சிறக்கக் கவிதையில் படைக்கிறார் வாதவூரர்.

நீர்நிலையில் குவளை மலர்கள் ஒருபுறம். செந்தாமரைப் பூக்கள் மற்றொரு பக்கம். நீர்ப்பறவைகளின் ஆர்ப்பொலி பிறிதொருபுறம். இத்தகைய இயற்கைப் பொலிவுமிக்க மடுவிற்குத் தங்கள் உடல் அழுக்கை நீராடிப் போக்க வருபவர் ஒருபுறம். இக்காட்சியைப் பார்க்கிறார் மாணிக்கவாசகர். இவ்வைகறைக் காட்சி.

> ''பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப்
> பைம்போதால்
> அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
> தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
> எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
> பொங்கு மடுவில்.........'' (13)

எனவரும் திருவெம்பாவைப் பாடலில் சித்திரிக்கப் பெறுகிறது. கரிய குவளை மலரும், சிவந்த தாமரை மலரும் முறையே பிராட்டியையும் பெருமானையும் நினைவூட்டுவன. அம்பிகையின் நிறம் கருமை. எனவே, கருங்குவளை மலரைக் காணும்

போதெல்லாம் அன்னையின் தோற்றம் மன்த்திரையில் எழுகிறது. பெருமானின் நிறம் செம்மை. எனவே செந்தாமரை மலரைப் பார்க்குங்கால் சிவபிரானே காட்சி தருகிறான். குருகு என்ற சொல் இருபொருள் தருவது. மடுவில் இருக்கும் பறவை என்பது வெளிப்படையான பொருள். எனின், வளை, சங்கு என்ற பொருளும் உண்டு. அவ்வாறே அரவம் என்ற சொல் நீர்ப்பாம்பையும் குறிக்கும். மடுவில் நீராட வருபவரின் ஆரவாரத்தையும் சுட்டும். எனவே, மடுவில் இருக்கும் குவளையும் தாமரையும் அம்மையப்பரைச் சுட்டினாற் போல, குருகினம் அரவம் என்பனவும் முறையே அம்மை அணிந் திருக்கும் வளையினையும் அப்பன் சூடியுள்ள அரவாபரணத் தையும் குறித்தன, உடல் அழுக்கைப் போக்கப் பொய்கைக்கு வருபவர்போல் உயிரை அநாதி காலமே பற்றியுள்ள ஆணவ மலத்தைப் போக்க இறைவனிடம் வருபவர் பலர். மலமாசு நீக்குதல் என்ற செயலினால் மடுவும் அம்மையப்பரும் ஒன்றாகவே காட்சிதருதலைச் சுட்டுகிறார் மணிவாசகர்.

நுணுகிநோக்கின், நீர்பொங்கும் மடு, மாணிக்கவாசகரின் கற்பனையில் அம்மையப்பராகத் தோற்றம் அளித்தல் காணத் தக்கது. ஒருவகையில் இதனை இயைபுக் கற்பனை (Associative Imagination) என்று கருதலாம்.

திருவெம்பாவையில் மழைக்காட்சி ஒன்றினைக் கற்பனை நயம் தோன்றப் புனைந்து பாடியுள்ளார். பாவைப் பெண்கள் நாடு வளம்பெறும் பொருட்டுப் பருவமழை தப்பாது பொழிதல் வேண்டும் என்ற பெருநோக்குடன் வேண்டுகின்றனர்(16).

மேகம் கடல்நீரை முகந்து கருமுகிலாகி மழை பொழியும் என்பது கவிமரபு. நீரை முகப்பதால் முகில் என்றும் கொண்மூ என்றும் மேகத்திற்குப் பெயர் வழங்குவர். அங்ஙனம் முகப்பதால் கடல்நீர் சுருங்கும் என்றும் கருதினர். கடல்நீரை முகந்து மழை பொழியும்வரை மேகத்தில் ஏற்படும் மாற்றங் களை நோக்குகிறார் மாணிக்கவாசகர். வெண்முகில் கருமுகில் ஆகிறது. முகிலில் மின்னல் தோன்றுகிறது. பின்னர் இடிக் கிறது. வானவில் இடுகிறது. பின்னரே பெருமழை பொழி கிறது. இயற்கையில் தோன்றும் இந்நிகழ்வுகளை நோக்கும் வாதவூரர்க்கு அன்பர்க்குத் திருவருள் பொழியும் அம்மையப் பரின் கருணைத்திறமே காட்சி தருகிறது, மழை நிகழ்வினை யும் அருள்நிகழ்வினையும் இயைத்துப் பார்த்து இனிமை மிக்க கற்பனைப் புனைவினை வழங்குகிறார்.

கடல்நீரை முகந்து மேலெழுந்த முகில் கார்மேகமாக உருக்கொண்டது. கார்மேகம் பிராட்டியைப் போலத் திகழ்ந்தது. பெண்ணின் சிற்றிடைக்கு மின்னற்கொடியை உவமை கூறுதல் மரபு. கார்முகிலில் தோன்றும் மின்னலுக்கு வாதவூரர் அம்பிகையின் சிற்றிடையினை உவமை கூறினார். அப்பிராட்டியின் திருவடியில் பூண்டிருக்கும் சிலம்பு ஒலிப்பதுபோல் மின்னிய முகில் இடித்தது; அன்னையின் அழகிய விழிப்புருவத்தைப் போல் கரியமேகம் வில்லை வளைத்தது. அம்பிகையினின்றும் ஒருபொழுதும் பிரியாத பெருமான் தன்னடியார்க்குச் சுரக்கும் இனிய கருணையினைப் போல முகிலே மழை பொழிக என்று பாவையர் பரவினர். இயற்கையில் இறைமை தோன்றும் அரிய கற்பனைக் காட்சி பின்வரும் கவிதையாக வடிவம் கொள்கின்றது;

'முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள்
இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்!''

இங்ஙனம் திருவாசகப் பாடல்களில் மாணிக்கவாசகர் படைத்துள்ள கற்பனைகள் பற்பல. இவர் அருளிச்செய்துள்ள திருச்சிற்றம்பலக் கோவையாரில் ஓரிரு புனைவுகளை இங்கு நோக்குவோம்.

**வென்றிக் கொடி**

உருவும் திருவும் முதலிய பல்வகைப் பண்பும் ஒத்த ஒருவனும் ஒருத்தியும் நல்லூழ் வயத்தினால் தில்லைப் பொழிலின்கண் எதிர்ப்படுகின்றனர். ஒருவரை ஒருவர் உளம் பொருந்தக் காதலிக்கின்றனர்- இந்நிலையில் அவளைக் கண்ட முதற்காட்சியைப் புலனெறி வழக்கினால் வாதவூரர் புனைந்து காட்டும் முதற்பாடல் கற்பனைவளம் சிறக்கக் காண்கிறோம். தலைவன் சிறந்த சிவநேசச் செல்வன். அவன் நெஞ்சத்தில் நீங்காத இடம்பெற்றது தில்லை. ஐந்திணை மயங்கிய தில்லைத் தலத்தில் எழில்தரும் பொழில்களும் பொய்கைகளும்

மிகுதி. அங்குப் பூத்திருக்கும் தாமரை, நீலம், குமிழ், கோங்கு, காந்தள் என்ற மலர்களைக் கண்டு முன்பு அழகுணர்வில் ஈடுபட்டவன், இப்பொழுது தலைவியைக் கண்ணுற்றதும் அம்மலர்கள் யாவும் ஒரு மாலையிற் பொருந்திக் கொடிபோல் அசைந்து அன்னம்போல் நடந்து காமவேளின் வென்றிக் கொடி போல் ஒளிவீசும் அற்புதத்தைத் தரிசிக்கிறான்! வியந்து போற்றுகிறான்! அவன் பெற்ற அழகனுபவமும்,

''திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்காந்தள்
கொண்டோங்கு தெய்வ
மருவளர் மாலையொர் வல்லியின் ஒல்கி
அனநடைவாய்ந்
துருவளர் காமன்தன் வென்றிக் கொடிபோன்று
ஒளிர்கின்றதே''

என்ற இனிய கவிதையாய் வடிவம் கொள்கிறது.

தாமரை மலர் போன்ற முகம். நீலமலர் (-காவிகள்) போன்ற விழி. குமிழம்பூப் போன்ற மூக்கு. கோங்கரும்பு ஒத்த நகில். காந்தள் மலர் நிகர்த்த கை. இம்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை போன்ற மங்கை, வல்லிக் கொடியைப் போன்று துவண்டு அன்னத்தைப் போல மெல்ல நடைபயின்று தலைவன் முன் வருகிறாள். அவளுடைய பேரழகு அவனைக் கவர்ந்து வென்று ஒளிவீசுகிறது. அவ்வெற்றித் திறத்திற்கு வாதவூரர் மன்மதனின் மகரக்கொடியாகிய வென்றிக் கொடியின் ஒளியினை உவமை கூறினார். இறைவனால் எரிக்கப் படுவதற்கு முன்னர் காமவேளின் வென்றிக்கொடி ஒளி படைத்தது என்பதைப் புலப்படுத்துதல் போல் 'உருவளர் காமன்' என்று சுட்டினார். காதல் விளைக்கும் காமனையும் அவன் வெற்றிக்கொடியின் மாட்சியையும் இப்பாடலில் கூறி யிருத்தல் பாராட்டுதற்குரியது.

மணங்கமழும்மலர்மாலை போல் மங்கை காட்சி தருகிறாள். அவட்கும் இயல்பில் மணம் உண்டு என்பது குறிப்பு. கொடி அசைதல் போல் அவள் துவட்சி அமைகிறது. இத்திறத்தால் பூங்கொடியாள் என்று பூவையரைக் கூறும் மரபு தோன்றியது. அன்னப்பறவையின் அணிநடை வஞ்சியரின் மணிநடைக்கு உவமையாகும். எல்லா வகையிலும் தலைவியின் மென்மைத் தன்மை சுட்டப்பெற்றது.

இப்பாடலில் பல்வேறு இடங்களில் உள்ள பூக்களை ஓரிடத்திற் பொருத்திப் புனைந்தமையால் ஆக்கக் கற்பனை அமைந்தமை அறியத்தக்கது. தாமரைமலர் மருத நிலத்திற் குரியது. நீலமலர் (-காவிகள்) நெய்தற்கும், குமிழமலர் முல்லைக்கும், கோங்குமலர் பாலைக்கும் காந்தள்மலர் குறிஞ்சிக்கும் உரியவை. எனவே, அன்பின் ஐந்திணைக் காதலைப் பாடவந்த ஆசிரியர் முதற்பாடலிலேயே ஐந்திணை மலர்களையும் ஒருங்கெடுத்தோதிய திறம் இன்பம் பயப்பதாகும். ஐந்திணை நிலத்திலும் வாழ்வார் பெறும் வளமும் இன்பமும் தில்லையில் உள்ளோர் ஓரிடத்திருந்தே எளிதிற் பெறுவர் என்ற குறிப்பும் திணை மயக்கக் குறிப்பினால் புலனாகும் என்பர் உரையாசிரியராகிய பேராசிரியர்.

இப்பாடலில் மற்றோர் அழகும் நோக்கற்பாலது. முடி முதல் அடிவரை உறுப்பழகைப் புனைந்துரைக்கும் கவிமரபினைக் காண்கிறோம். முகம் (-தாமரை), கண் (-காவி), மூக்கு (-குமிழ்), மார்பு (-கோங்கு), கை (-காந்தள்), மாலை (-மங்கை), நடை (-அன்னம்) என்ற வரிசையில் வருணனை அமைதலின், ''இது கேசாதி பாதகமாக வருணிக்கப்பட்டது'' என்றார் பேராசிரியர். எண்ணுந்தொறும் இன்பம் பயக்கும் இக்கற்பனைப் படைப்பு,

''கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ டிடைப்பட விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாய்வது முயங்கற்கும் இனிதே'' (62)

எனவரும் குறுந்தொகைப் பாடலுடன் இணைத்துச் சிந்தித்து மகிழ்தற்கு உரியது. இப்பாடலில் காந்தள், முல்லை, குவளை முதலிய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைப் போல நறுமணம் பொருந்திய நல்லோளின் மேனி தளிரினும் மென்மை யும் நிறமும் பொருந்தியது; தலைவனின் நுகர்ச்சிக்கு இனிது என்ற கருத்து எழிலுறப்புகலப் பெற்றது. குறுந்தொகைப் பயிற்சியால் வாதவூரர் கற்பனை புனைந்துள்ளார் என்று கூறுதல் சரியன்று. இருபாடல்களின் அமைப்பும் புலப்பாட்டுப் பாங்கும் தனித்தனி தன்மையன என்பது சுட்டற்பாலது. எனினும் மணங் கமழும் மாலையைப் போன்ற மங்கை என்ற கருத்தொற்றுமை இப்பாடல்களில் இடம்பெற்றமை பொதுப்பண்பாகக் கொள்ளத் தக்கது. எனினும், சங்க இலக்கியப் புலமை மிக்கவர் மாணிக்க வாசகர் என்பதற்கு வேறு சான்றுகள் பல இருப்பதால் அவர்

குறுந்தொகைப் பயிற்சி மேற்கூட்டிய கற்பனைக்கு மெருகு ஊட்டியது எனலாம்.

களவியல் வாழ்வில் தலைவன் பாங்கன் உதவியால் தலைவியைச் சேர்தலைப் பாங்கற் கூட்டம் என்று கூறுவர். பாங்கற்கூட்டம் நினைதல், வினாதல், உற்றுதுரைத்தல் முதலாக நின்று வருந்தல் முடிய முப்பது துறைகளை உடையது. அவற்றுள் **''பொழில்கண்டு மகிழ்தல்''** என்ற துறை கவிஞனின் கற்பனைத் திறத்தினைப் பெரிதும் புலப்படுத்துவது,

தலைவியை முதன்முதல் கண்ட இடமாகிய பொழிலை அடைந்து அப்பொழிலில் காணும் பொருள்களில் எல்லாம் தலைவியின் காட்சியைக் கண்டு மகிழ்கின்றான் தலைவன். பூம்பொழிலே பூங்கோதையாகத் தோற்றம் அளிக்கிறது. பசிய மூங்கில் இணைகள் பைந்தொடியின் தோள்களாகக் காட்சி தருகின்றன. களித்தாடல் புரியும் மயிலின் சாயல் மங்கையின் சாயலாகத் திகழ்கிறது. தரையில் பரவிக்கிடக்கும் நீலக்கற்கள் அவள் கூந்தலாகத் தோன்றும். துள்ளியோடும் பிணைமானின் கண்கள் மருண்டு நோக்கும் அவள் விழிகளாக விளங்குகின்றன. நுடங்கும் பூங்கொடி நங்கையின் மெல்லிடையாக மிளிர்கிறது. பொதுமன்றில் நடம்பயிலும் ஈசனுக்குரிய பொழிலும் தலைவனின் சிந்தனைக்கு மதுமலர்க் குழலியாகிய தன் தலைவியாகவே தோன்றியது என்று எண்ணி வியந்து நிற்கிறான்.

''காம்பிணை யால், களி மாமயிலால், கதிர் மாமணியால்
வாம்பிணை யால், வல்லி ஒல்குதலால், மன்னும்
அம்பலவன்
பாம்பிணை யாக்குழை கொண்டோன் கயிலைப்
பயில்புனமும்
தேம்பிணை வார்குழ லாள்எனத் தோன்றும்என்
சிந்தனைக்கே''(38)

தலைவியின் தோள், சாயல், கூந்தல், நோக்கு. இடை என்ற ஐந்தும் தலைவனை முழுமையாகக் கவர்ந்தவை. பொழிலிடத்தில் வளைந்திருக்கும் மூங்கிலைப் பார்க்கும் தொறும் தலைவியின் தோள் நினைவுக்கு வருகிறது. மயிலைக் காணுந் தொறும் அவள் சாயலும், மானைக் காணுந்தொறும் அவள் மருண்ட நோக்கும் மனக்கண் முன்னால் காட்சி தருகின்றன. இங்ஙனமே தரையில் நிரலாகக் கிடக்கும் நீலமணி அவள் கூந்தலை நினைவூட்டுகிறது. அசையும் பூங்கொடி அவள்

அசையும் தோற்றத்தைக் கண்முன் நிறுத்துகிறது. எனவே, வேய், மயில், மான், மணி, கொடி இவையாவும் விளங்கும் பொழில் தோள்நலம், சாயல், மருள்நோக்கு, கருங்குழை, மெல்லிடை என்பன பொருந்திய தலைவியாகவே காதலனின் கற்பனைக் காட்சிக்குப் புலனாகிறது. வேறுவேறு பொருள்கள் ஓரிடத்திருப் பதாக அமைத்தலின், இக்கற்பனையும் ஆக்கக் கற்பனையின் (Creative Imagination) ஒரு வகையாகக் கொள்ளுதற்குரியது.

இதுகாறும் மாணிக்கவாசகரின் பாடல்களில் காணப்பெறும் கற்பனைக் காட்சிகள் சிலவற்றைக் கண்டோம். இனி, ஒன்பதாம் திருமுறையில் மிகுதியாகப் பாடியுள்ள கருவூர்த் தேவரின் பாடல்களில் காணப்பெறும் ஒருசில கற்பனைகளை நோக்குவோம்,

**கருவூரார் கற்பனை**

திருவிசைப்பா ஆசிரியர்கள் தலங்களை வருணிக்கும் பாடற் பகுதிகளில் தம் கற்பனைத் திறத்தினைப் புலப்படுத்தியுள்ளனர். முதலாம் இராசராசன் காலத்திலும் அவன் மகன் முதலாம் இராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்த அருட்செல்வராகிய கருவூர்த் தேவர் பத்திமையும் கற்பனையும் விரவிய கவிதைகள் பற்பல படைத்தவர். தஞ்சை மாநகர் சோழப்பெருவேந்தர்களின் கோநகராக விளங்கியது. வடவாறு பாயும் இத்தலைநகரில், மாமன்னன் இராசராசன் தாம் பெற்ற பெருவெற்றியெல்லாம் இறைவன் அருளினால் பெற்ற சிறப்பு என்ற நன்றியுணர்ச்சி யுடன் எடுப்பித்த பெருங்கோயில் **இராசராசேச்சரம்** என்று போற்றப்பெறுகிறது. நகரையும் கோயிலையும் சிறப்பித்துக் கூறும் கருவூர்த்தேவரின் பாடல்களில் கற்பனைக் காட்சிகள் பலவற்றைக் காண்கிறோம்.

வடவாற்றில் பெருகிவரும் வெள்ளத்தில் இருமருங்கிலும் உள்ள சோலைகளின் பசிய தழைகள், வண்ணப்பூக்கள் முதலியன காட்சி தருகின்றன. இக்காட்சி தஞ்சை நகரத்தைச் சுற்றிலும் பசிய இலைகளும் மலர்களும் ஓவியமாக வரையப்பெற்ற பளிங்குச் சுவர் எழுப்பப் பெற்றது போல் தோன்றுகிறது. வைகறைப்பொழுதில் நீராடிய மகளிர் தம் கூந்தலைப் புலர்த்தற்கு மூட்டிய அகிற்புகை எங்கும் மணம் பரப்புகிறது. அப்பெண்கள் பெருவுடையாரிடத்தில் நிறைபத்தி பூண்டவர்கள். ஆதலின், யாழெடுத்து விரலினால் மீட்டி இறைவனின் பொருள் சேர் புகழை இசைத்துப் பாடும் ஒலி எங்கும் கேட்கிறது,

மதிலால் சூழப்பெற்ற தஞ்சை நகரில் எழுந்தருளியிருக்கும் இராசராசேச்சரப் பெருமானின் சிறப்பினைக் கருவூரார் உணர்ந்து பாடுகிறார்:

''வாழியம் போதத் தருகுமாய் விடயம்
வரிசையின் விளங்கலின் அடுத்த
சூழலம் பளிங்கின் பாசல ராதிச்
சுடர்விடு மண்டலம் பொலியக்
காழகில் கமழும் மாளிகை மகளிர்
கங்குல்வாய் அங்குலி கெழும
யாழொலி சிலம்பும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் தவர்க்கே'' (4)

இப்பாடலில் அம்போதம் என்ற சொல் பொதுவாக நீரின் அலைகளைக் குறிப்பினும், முற்பாடலில், 'மறித்திரை வடவாற்றிடுபுனல்' (2) என்று வருதலின் வடவாற்றின் வெள்ளத்தினைச் சுட்டியதாகக் கொள்ளுதல் வேண்டும், 'பாசலர் ஆதி' என்றதால் இலைகள், மலர்கள் மற்றும் சோலைகளில் உள்ள கொடிகள், மரங்கள் முதலிய யாவும் அடங்கும். வளப்பத்தால் இவை ஒளிவிடும் சுடர்மண்டலம் போல் நீரில் நிழலாடின என்பது அரிய கற்பனையாகும். அகிற்புகை மாளிகை என்பது மக்களின் வளம்மிக்க வாழ்க்கையினையும் யாழொலி என்பது வளத்தையும் காட்டுவன,

சம்பந்தர் பதிகம் பெற்ற சோழநாட்டுத் தலங்களில் கோட்டூர் ஒன்றாகும். இதனை மேல்கோட்டூர் என்றும் கூறுவர். இதன்கீழ்பால் திகழும் கீழ்க்கோட்டூர் மணியம்பலத்தைக் கருவூர்த் தேவர் பாடியுள்ளார். இறைவன் ஆடல்புரிந்த அறுபத்துநான்கு அம்பலங்களுள் இம் மணியம்பலமும் ஒன்றாகும். இத்தலம் இயற்கை எழில்மிக்கது. கலைவளம் நிறைந்தது. இத்தலத்தினைக் கருவூர்த் தேவர் கற்பனைக்கவின் கொஞ்சப் பாடியுள்ளார். இங்குள்ள நீர்நிலைகளில் தாழைகள் மடல் விரித்து மணம் பரப்புவன. தாழம்பூவின் தோற்றம் குருகு என்னும் நீர்ப்பறவையின் தோற்றத்தை ஒத்தது. தாழையின் பூநிழலைத் தண்ணீரில் பார்த்த கெண்டை மீன்கள் தாரை முதலிய பறவையோ என்று அஞ்சி அலமரும் என்று கற்பனை செய்கிறார்.

''கேதகை நிழலைக் குருகென மருவிக்
கெண்டைகள் வெருவுகீழ்க் கோட்டூர்'' (9)

தாழம்பூவும் குருகும் உருவத்தால் ஒன்று. குருகு மீனின் பகை. உண்மையில் பொய்கையில் நீர்ப்பறவை இல்லை என்றாலும், உருவத்தால் அதனை ஒத்திருக்கும் தாழம்பூவின் நிழலை அதுவாக மயங்கிக் கருதி அஞ்சும் மீனின் இயல்பினைச் சொல்லோவியம் செய்தனர். உலகியலும் மாந்தருள் பலர், ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதுவதால் துன்புறும் நிலையினை இக் கற்பனைக் குறிப்பாகச் சுட்டுகிறது எனலாம். இத்தகைய கற்பனைகள் தேவாரத்திலும் பயின்றுள்ள திறம் முன்பு கூறப் பெற்றது. கருவூரார் படைத்துள்ள மேலும் சில கற்பனைகளின் சிறப்பினை நோக்குவோம்.

சைவர்களுக்குக் கோயில் என்று சிறப்பித்துச் சொல்லப் பெறும் தில்லையின் இயற்கைப் பொலிவினையும் வளங்களையும் கருவூர்த்தேவர் கற்பனைகளின் பொருந்தப் பாடியுள்ள பாங்கினைப் பார்ப்போம். மணம்விரி தருக்கள், தேமாம் பொழில்கள், முகிலை அளாவிய கமுகந்தோப்புக்கள் எங்கும் காணலாம். மருதநிலத்துப் பெண்கள் வயல்களில் செழித்துள்ள செந்நெற் பயிர்களின் நடுவே முளைத்துள்ள குவளை, நீலம் முதலிய கொடிகளைக் களையெடுத்து வரப்பில் போட்டனர். அவை இன்னும் உயிருடன் இருப்பதால் அரும்புகளைவிடும் அழகிய தில்லை என்று போற்றுகிறார்.

''கைவரும் பழனம் குழைத்தசெஞ் சாலிக்
கடைசியர் களைதரு நீலம்
செய்வரம்பு அரும் ;ம் பெரும்பற்றப் புலியூர்'' (1)

பதஞ்சலியாகிய புலிக்கால் முனிவர் வழிபட்ட தலமாதலின் தில்லைக்குப் புலியூர் என்பது ஒரு பெயர் என்பதை முன்னரும் குறித்துள்ளோம். மேலும், கருவூரார் இத்தலத்தின் வனப்பில் ஈடுபடுகிறார். முருங்கை மரங்கள் இங்கு மிகுதி. அவற்றின் பூக்களை மங்கையரின் உதட்டுக்கு உவமை கூறுவர் புலவர். மாஞ்சோலைகளும் நிரம்ப உள்ளன. சிவந்த மாந்தளிர்கள் செஞ்சுடர் போல் ஒளி வீசுகின்றன. இங்ஙனம் இயற்கை வளம் சூழ்ந்த தில்லையின் சிறப்பினை,

''வாயில்நேர் அரும்பு மணிமுருக் கலர
வளரிளஞ் சோலைமாந் தளிர்செந்

தீயின்நேர் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே'' (3)

எனவரும் பாடல் எழிலுறப் புலப்படுத்துகிறது.

இனி, திருமந்திரத்தில் இடம்பெறும் கற்பனைகள் குறித்துக் காண்போம்.

**திருமூலரின் கற்பனைத்திறம்**

சிவயோகியும் ஞானியுமாகிய திருமூலர் பல அனுபவங்களைத் திருமந்திரமாகப் பாடியுள்ளார். அவற்றைக் கவிதையாக வழங்கும்பொழுது கற்பனைத் தேன் கலந்து கருத்தினிக்கத் தந்துள்ளார். மனிதனின் வாழ்நாள் குறிப்பிட்ட கால அளவே ஆகும். அக்கால எல்லையில் தான் ஆற்ற வேண்டிய கடமைகளையும் பணிகளையும் செய்து புகழை நிலைநாட்டுதல் வேண்டும். தனக்கும் பிறர்க்கும் பயன் தரும் வகையில் வாழ்க்கையினை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். எனின், குறிக்கோளின்றிப் பலர் வாழும் நாளை வீணாளாகக் கழித்து மறைந்துவிடுகின்றனர். பெறுதற்கரிய மனிதப் பிறவியைப் பெற்றவன் பயனுடைய வாழ்வினை மேற்கொள்ள வேண்டும் என்ற விழுமிய உணர்வினைக் கிளர்ந்தெழச் செய்யும் பொருட்டு அருளாளரும் அறவோரும் நிலையாமை என்னும் பேரறத்தைப் புகட்டினர். செல்வம் சேர்ப்பது மட்டுமே வாழ்வின் நோக்கமாகக் கொண்டவர்க்கு.

''ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரந்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே'' (171)

என்று திருமூலர் அறிவு கொளுத்துகின்றார். தேன்வண்டுகள் சோலைதோறும் தேடிச் சென்று மணமும் சுவையும் மிக்க மலர்த்தேனைத் துளித்துளியாகத் திரட்டிக் கொணர்ந்து மரக்கிளையில் தேனடை கட்டுகிறது. முயன்று தேனைத் தொகுத்த வண்டுகளை விரட்டிவிட்டுக் கொடியவர் அடையை அழித்துத் தேனைப் பிழிந்து கொண்டு போய் விடுகின்றனர் என்பது ஒரு காட்சி. இக்காட்சியின் வாயிலாக மாந்தர்க்குப் பாடம் சொல்ல விரும்புகிறார் திருமூலர். பல நாளாகப் பல இடங்களுக்குச் சென்று முயன்று ஈட்டிய ஒருவனின் செல்வமும் முடிவில் ஒருநாள் வலியோரால் கவர்ந்து கொள்ளப்படுமே

என்பதை உணர்ந்து பொருள் உள்ள பொழுதே நற்பணிகள், நல்லறங்கள் பலவற்றைப் புரிந்து புகழை நிலைநிறுத்துதல் வேண்டும் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தினார். இங்ஙனம் இயற்கையில் நடைபெறும் ஒரு செயலை எடுத்துக்காட்டி உயர் போதனை வழங்குதற்குப் பயன்படும் கற்பனையினைப் **பொருள் நுவற்சிக் கற்பனை** (Interpretative Imagination) என்பர். அறநூல்களில் இத்தகைய கற்பனைகள் மிகுதியாகக் காணப்பெறும். கற்பனையின் வழியே இறைமையினையும் நுண்ணிய செய்திகளையும் கண்டறிந்த அனுபூதிமானாகிய வேர்ட்சுவொர்த்து என்னும் ஆங்கிலப் பெருங்கவிஞர், ''Let Nature Be Your Teacher'' என்று பாடியிருத்தல் இங்கு இயைபுபடுத்தி எண்ணிப் பார்த்தற்கு உரியது. ஏடுகள் சொல்லி உணர்த்த முடியாத பல உண்மைகளை இயற்கைப் பொருள்கள் எடுத்துரைக்க வல்லன என்பது அவர்தம் எண்ணம்.

என்றும் இளமையுடன் இருக்கலாம் என்று சிலர் காயகல்பம் முதலிய மருந்துகளைத் தேடிச் செல்வர், அவற்றால் இளமையினை நிலை பெறுத்துதல் இயலாது என்பதைத் தெளிந்தவர் திருமூலர். கதிரவனை எடுத்துக்காட்டிக் காளையரைத் தெருட்டுகின்றார். இளங்கன்று மூத்து எருதாகிய சில நாளில் இறப்பதையும் எடுத்துக் காட்டுகிறார் :

''கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டும் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டும் தேறார் வியனுல கோரே'' (177)

காலையில் கிழக்கே உதிக்கும் பகலவன் மாலையில் மேற்கே மறைந்துவிடுகிறான். நிலைபேறாக ஓரிடத்தில் இருக்க இயலாது என்ற உண்மையினை இதனைப் பார்த்தாவது மாந்தர் கற்றுக் கொள்ள வேண்டும். அங்ஙனம் பார்த்துப் புரிந்து கொள்ளாமையின், கண்ணிருந்தும் கண்ணில்லார் என்று கடிந்து 'விழியிலா மாந்தர்' என்று உறைக்கும்படியும் உறுத்தும்படியும் இடித்து உணர்த்துகின்றார். வேளாண்மையே உயிர்த் தொழிலாக விளங்கிய தமிழ்ச்சமுதாயத்தில் உழவுக்குத் தேவையான காளையினைக் காட்டியும் அறிவு புகட்டுகிறார். தொல்காப்பியர் 'மழவும் குழவும் இளமைப்பொருள' என்பார். குழக்கன்று முதிர்ந்து எருதாகி உழைத்துச் சில நாளில் மாண்டுவிடுகிறது. இதனைப் பார்த்திருந்தும் நிலையாமை என்ற உண்மையினை உலகத்தார் தெளியாதது

விந்தையாக உள்ளதே என்று நைந்து கொள்ளுகிறார் திருமூலர். நிலையாமை என்ற மெய்மையினைக் கவிதைச் சுவையும் கற்பனைச் சுவையும் கலந்து படைத்துள்ளார் திருமூலர்.

பூங்கொம்பில் செந்தளிர்கள் துளிர்க்கின்றன. எனின், அவை சருகாகி இறக்கின்றன. இந்நிகழ்ச்சியைக் கொண்டு மாந்தர் அறிவு பெறுதல் வேண்டும். நிலையாமையினை உணர்ந்து எம்பெருமானின் திருவடியை எண்ணி ஏத்தாதவர், கூற்றுவன் இறுதிக்காலத்து அழைக்க வரும்பொழுது செய்வ தறியாது மாண்டு போவர் என்கிறார் :

''தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே'' (187)

தளிர் தோன்றுதல் பிறப்பிற்கும், தளிர்விழுதல் இறப்பிற்கும் குறியீடு (Symbol). இக்குறியீட்டினைப் பயன்படுத்திக் கருவூர்த் தேவர்,

''தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின்
தளிர், இறப்பு இலைஉதிர்வு என்றால்
நினைப்பருந் தம்பால் சேறலின் றேனும்
நெஞ்சிடிந் துருகுவது என்னோ'' (7)

என்று பொருள்நுவற்சிக் கற்பனை (Interpretative Imagination) பொருந்தப் பாடி அறிவுறுத்துதல் நோக்கி இன்புறத்தக்கது. இத்தகைய கற்பனைகட்கு எல்லாம் மூலமாக விளங்குவது,

''தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து''
(புறம். 27 : 11-14)

எனவரும் உறையூர் முதுகண்ணன் சாத்தனாரின் பாடலிற் காணப்பெறும் மெய்ப்பொருள் நுவற்சிக் கற்பனை எனலாம்.

தமிழ்ப் பெருமக்கள் அணிமணிகளில் ஈடுபாடு கொண்டவர்கள். குறிப்பாகப் பெண்மக்கள் பொன்னினாற் செய்த பூடணங்களை உயிரினும் மேலாக உவந்து அணிந்து மகிழும்

இயல்பினர். எனவே, யாவர்க்கும் விளங்கக்கூடிய பொன்னணி யினைக் கொண்டு பொருள்மிக்க பேருண்மையினைத் திருமூலர் புலப்படுத்த விரும்புகின்றார் :

''பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே'' (2289)

பொன்னினால் புனையப் பெற்றது அழகிய ஆபரணமாகிய பூடணம். அதனைப் பூடணம் என்று பார்க்கும்பொழுது அது பொன் என்பது புலனாகாது. பொன் என்ற பொருளை பூடண மாகிய அருங்கலம் மறைத்துத் தன்னையே தோற்றுகிறது. எனின், அந்த ஆபரணத்தின் தரம், தன்மை ஆகியவற்றைக் கருதும் நோக்கில் அதன் முதலாகிய பொன்னின் சிறப்பினையே நோக்கும்பொழுது, அதுவே புலப்பட்டுத் தோன்றும் ; ஆபரணம் அதனுள் அடங்கிய வியாப்பியமாக வெளிப்படுவ தில்லை. எனவே, பொருள் பெற்றி ஆய்வார் முதலைக் கருதுங்கால், விளைவைப் பாராமையும், விளைவைப் பார்ப் பார், முதலை நோக்காமையும் யாவரும் புரிந்து கொள்ளும் பாங்கில் பொன்னையும் ஆபரணத்தையும் எடுத்துக்காட்டி விளக்கிய திருமூலர் அடுத்தபடி மனிதனைப் பற்றிய ஆய்வில் ஈடுபடுகிறார்.

கருவி கரணங்களின் கூட்டத்தில் மறைந்து இயங்கி இயக்குவது உயிர். கருவி கரணங்களாகிய உறுப்புக்களையே சிறப்பாக நோக்கும்பொழுது தான்என்ற உயிர்ப்பொருள் அவற்றுள் மறைந்து விடுகிறது. அவற்றை ஊடுருவியும் நுணுகியும் நோக்குங்கால், உயிரில் அவை மறைந்துவிடுதல் உண்டு. உயிரே உணர்வுக்குப் புலனாதலின், ஏனைய உறுப் புக்கள் காட்சி யாவதில்லை என்பது கருத்து. இக்கற்பனை யினால் உயிர் உண்மை சாதிக்கப் பெற்றமை உணர்ந்து மகிழத்தக்கது.

இங்ஙனமே மரத்தினால் செய்யப்பெற்ற யானையினை எடுத்துக்காட்டியும் மெய்ப்பொருள் **நுவற்சிக் கற்பனையினை** (Philosophical Interpretative Imagination) அருமையாகப் படைத்துள்ளார் திருமூலர் :

''மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை

பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்'' (2290)

இத்தகைய பாடல் 'கல்லைக் கண்டால் நாயைக் காணோம். நாயைக் கண்டால் கல்லைக் காணோம்' என்று வழங்கிவரும் பழமொழிச் சிந்தனையை நினைவூட்டவல்லது. கலையுணர்ச்சி வாய்ந்த தச்சன் மரத்தில் அழகான மதயானையினைச் செதுக்கியிருக்கிறான். அதனை யானை என்று கருதும் கலை யுணர்வுடையார்க்கு அது மரம் என்பது தோன்றுவதில்லை. கலை யுணர்ச்சி இல்லாத எளியர் அதனை மரம் என்று கருதின், அதில் செதுக்கப்பட்டுள்ள யானை வெளிப்படாமல் மரமே முனைத்து தோன்றும். மர ஆய்வு செய்வோனுக்கு அதில் உள்ள கலையானை தோன்றாது. கலையுணர்வு வாய்ந்த வர்க்கு யானையே தோன்றுமின்றி மரம் என்பது தோன்றாது. இவ்வுலகியல் காட்சியைக் கொண்டு மெய்ப்பொருள் காட்சியை நமக்குத் திருமூலர் உணர்த்த வருகிறார். பரம் என்ற சொல் மேலான உண்மைப் பொருள் (Ultimate Supreme Reality) ஆகிய இறையைச் சுட்டும். உலகம் என்பது நிலம், நீர், தீ, வளி, வான் என்ற ஐம்பூதங்களின் கூட்டமாகக் காட்சி தருவது. 'இறைவன் எங்கு இருக்கிறான்?' என்ற வினாவிற்கு 'இங்குத் தான் இருக்கிறான்' என்று விடை தருகிறார் திருமூலர். ஐம்பூதங்களின் விளைவாகிய உலகப் பொருள்களையே கருதி, நாடி, சிந்தை செய்து இருப்பவர்க்குப் பரம் புலப்படாது அவற்றுள் மறைந்திருக்கும். அவர்கட்குப் பரத்தைப் பார்முதற் பூதங்கள் மறைத்தன. எனின், மெய்யுணர்வாளர் உலகப்பொருள் களினின்றும் த்ம்மை விடுவித்து உண்மையினை உணர்ந்து பார்க்கும்பொழுது, பரமே பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்து விளங்கி எல்லாமாய்க் காட்சி தருதலும், பார்முதற் பூதங்கள் வெளிப்பட்டு நில்லாமையும் அனுபவப்படும். மெய்யுணர்வு வருந்துணையும் பரத்தினை மறைத்த ஐம்பூதங்கள் அவ்வுணர்வு தலைப்பட்டதும் பரத்தில் மறைந்து பரமே விளங்கித் தோன்றும் நிலை ஒருவர்க்கு வாய்க்கும். இத்தகைய கற்பனையினால் பதி உண்மை சாதிக்கப் பெற்றமை உணர்ந்து மகிழலாம்.

அருளாளர் படைக்கும் கற்பனைகள் யாவும் பொருள் பொதிந்து விளங்குவன என்பதும், அரிய பெரிய கருத்துக்களை

எளிதில் இனிதாக விளங்கிக் கொள்ளுதற்கு உதவுவன என்பதும் திருமந்திரப் பாடல்களால் தெளியலாம்.

இனி, பதினோராம் திருமுறையில் இடம்பெறும் கற்பனை வளம் குறித்துச் சிறிது காண்போம்.

**பிரபந்த மாலையில்**

பல்வகைப் பிரபந்தங்களும் பதினொராம் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளமையால் இத்திருமுறையினைப் பிரபந்த மாலை என்று கூறும் வழக்கு உண்டு என்பதை முன்னரும் சுட்டியுள்ளோம். இறையனார், காரைக்காலம்மையார் உள்ளிட்ட அருளாளர் பலர் அரிய கற்பனைப் படைப்புக்களை அளித்திருப்பினும் இடச்சுருக்கம் கருதி அவருள் சிலரின் அருங் கற்பனைகள் சிலவற்றை மட்டுமே நோக்குவோம்.

காரைக்காலம்மையார் கற்பனைகளுக்கு ஊற்றாக விளங்கும் சிற்றிலக்கியங்களின் தோற்றத்திற்கு வழிகோலியவர். அவர் படைத்த கற்பனைகள் பல, இலக்கிய விருந்தாக இலங்குவன. இறைவனின் திருநடனக் காட்சியைத் திருவாலங் காட்டில் கண்டு களித்தவர். இறைவனால் 'அம்மையே' என்று அழைக்கப்பெற்ற அருளாளர். அம்மையார் பாடியுள்ள திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டிலும் இடம் பெறும் சுடுகாட்டு வருணனை, பேய் வருணனை பிற்காலத்தில் பரவி இலக்கியம் படைத்தவர்களின் கற்பனை வளத்திற்கு உரமாக விளங்கியவை. இவர் அருளிச்செய்த அற்புதத் திருவந்தாதியில் பெருமானின் ஆடலைப் பற்றிய பாடலைக் காண்போம்.

ஆடலரசன் கையில் அனலேந்தி ஆடுகிறான். அப் பெருமானின் செங்கையின் வனப்பு அம்மையின் கண்களைக் கவர்ந்தது. அனலும் சிவப்பு. கையும் சிவப்பு. சார்ந்ததன் வண்ணமாதல் பொருளின் இயல்பு. அனல் சார்ந்ததால் கை சிவப்புற்றதா? அல்லது அழகிய கையின் செவ்வண்ணம்தான் அனலுக்குச் செம்மை வழங்கியதா? பேய்கள் சுற்றமாக இருந்து சூழ்ந்தாடுகின்ற சுடலையில், வீரக்கனல் கொஞ்ச அனலேந்தி ஆடும் பெருமானே! என் வினாவிற்கு விடை கூறுக என்று பத்திப் பெருக்கால் பரமனைப் பார்த்துக் கேட்கின்றார் :

''அழலாட அங்கை சிவந்ததோ? அங்கை
அழகால் அழல்சிவந்த வாறோ?-கழலாடப்

பேயாடு கானில் பிறங்க அனலேந்தித்
தீயாடு வாய்! இதனைச் சிறப்பு'' (98)

எல்லாப்பொருள்களுக்கும் உரிய இயல்புகளையும் பண்புகளையும் படைக்கும்பொழுதே கொடுத்துள்ள பரமனின் கைக்குச் சிவப்பு நிறத்தை அனல் வழங்குவது இல்லை. எனினும், கவி என்ற வகையில் இறைவனை நகையாடும் காரைக்கால் அம்மைக்கு வியப்பும் வினாவும் தோன்றுவது இயல்பே!

மற்றமொரு பாடலில் இறைவனின்விசுவதாண்டவத்தைக் கற்பனைநயம் தோன்றப் படைத்துள்ளார். பரந்து விரிந்துள்ள வையப் பரப்பையே ஆடரங்காக நின்று ஆடுகின்றான் ஈசன். ஆடுதற்கு அடியைப் பெயர்த்து வைப்பின், பாதாள வைப்புகள் யாவும் அடியோடு பெயர்கின்றன. முடியை நிமிர்த்தாடுங்கால் அகன்ற அளப்பரிய வானக்கூரையின் உச்சி உதிர்கிறது. கடகம் சூடிய கை வீசி ஆடுங்கால் எட்டுத்திசைகளும் பேர்ந்து விடுகின்றன. எனவே, இறைவனைப் பார்த்து, ''அரங்கு ஆற்றாது; பார்த்து ஆடுக'' என்று வேண்டுகிறார்.

''அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும்-கடகம்
மறிந்தாடு கைபேரில் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும்! ஆற்றா தரங்கு'' (77)

எளிய மகளிர் ஆடும் அரங்கில் அடிபெயர்த்தல், முடி நிமிர்த்தல், கைவீசுதல் என்பன ஓர் எல்லைக்கு உட்பட்டவை. எனின், எல்லையற்ற பரம்பொருளின் நடனம் பௌதிக எல்லைகளைக் கடந்து செல்வது என்ற அளப்பரும் தத்துவப் பாங்கினை அம்மையார் பாடிய அற்புத வெண்பா, பின்னர் வந்த திருமுறை ஆசிரியர்களையும் கவர்ந்ததில் வியப்பில்லை,

நக்கீரதேவர் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதியில் இப்படி ஒரு காட்சியைப் படைத்துள்ளார்.

''தாள்ஒன்றால் பாதாளம் ஊடுருவத் தண்விசும்பில்
தாள்ஒன்றால் அண்டம் கடந்துருவித்-தோள்ஒன்றால்
திக்கனைத்தும் போர்க்கும் திறற்காளி காளத்தி
நக்கனைத்தான் கண்ட நடம் (88)

நக்கன் என்ற சொல் திகம்பரனாய ஈசனைக் குறிக்கும். சம்பந்தர் தேவாரத்தில், ''நாதா எனவும் நக்கா எனவும்''

(1.67.1) என்றுவரும் பகுதி இங்கு நோக்கத்தக்கது. காளியுடன் நடனம் ஆடும் பெருமான், அவள் திறத்தை கடக்க ஊர்த்துவத் தாண்டவம் பயின்ற பாங்கினை இப்பாடல் புலப்படுத்துகிறது.

ஒருதாள் ஊன்றிய மாத்திரையான் பாதாளத்தை ஊடுருவிச் சென்றது. மற்றொருதாள் விசும்பினை ஊடறுத்து அண்டத்துக்கு அப்பால் சென்றது. ஒருதோளே திசைகள் அனைத்தையும் தன் மேனிக்குப் போர்வையாகக் கொள்ளும் ஆற்றல் மிக்கது. அதனால்தான் இறைவனுக்குத் திக்கு+அம்பரன் (-திசையை ஆடையாகப் பூண்டவன்) திகம்பரன் என்ற பெயர் தோன்றியது.

கோயில் நான் மணிமாலையில்,

''அடியொன்று பாதலம் ஏழிற்கும்
அப்புறம் பட்டது; இப்பால்
முடியொன்றிவ் அண்டங்கள் எல்லாம்
கடந்தது; முற்றும்வெள்ளைப்
பொடியொன்று தோள்எட்டுத் திக்கின்
புறத்தன; பூங்கரும்பின்
செடியொன்று தில்லைச் சிற்றம்பலத்
தான்தன் திருநடமே'' (6)

என்று பட்டினத்தார் ஆனந்த நடராசனின் அற்புதத் திரு நடனத்தை அழகாகப் பாடியுள்ளார். பிரபஞ்சத்தின் எல்லைகள் யாவற்றையும் கடந்து பெருமானின் திருநடனம் பொலிவுற நிகழும் திறத்தினை அம்மையார் பாடலை அடியொற்றி அமைத்துள்ளமை அறிந்தின்புறத்தக்கது.

மேற்சுட்டிய மூன்று பாடல்களிலும் அருளாளர் படைத்துள்ள கற்பனையினை விசுவக் கற்பனை (Cosmic Imagination) என்று கூறுதல் சாலும். பாடுகின்ற ஞானிகளின் உள்ளமும் விசுவதரிசனம் கொள்ளும் அளவிற்கு விரிவு பெற்று விளங்குதல் உணரப்படும். அவர்கட்கு உடம்பு ஒரு தடையாகவும் பொறையாகவும் அமைந்துவிடும். பௌதிக எல்லைகளைக் கடந்துபாயும் உணர்வுதான் பரம்பொருளைப் பற்ற இயலும்.

சுந்தரரின் தோழராகத் திகழ்ந்தவர் சேரமான் பெருமாள் நாயனார். சிறந்த கவிஞர். அருட்செல்வர். தெளிவுடைய பெரியாரைச் சேர்ந்து ஒழுகுதல் ஆன்ம வளர்ச்சிக்கு உதவும் என்ற கொள்கையர். இனிய கவிதை ஒளிபொருந்திய சொல்லும் பொருளும் உடன் பொருந்தி அமைதல் வேண்டும் என்பது அவர்

கருத்து. அங்ஙன்மன்றி முன்னர்த் தோன்றிய பாடல்களைப் பயின்று அவற்றில் பொதிந்துள்ள கருத்துக்களையும் கற்பனைகளையும் களவாடிப் பாடலாம் என்று கருதின், கவிஞர்கள் இலக்கியத் திருட்டினைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். இங்ஙனம் எளிமை தோன்ற இயம்பி, தன் சொல் புன்சொல்லாயினும் நஞ்சுண்ட பெருமான் கொள்ளவேண்டும் என்று விண்ணப்பிக்கிறார்.

''தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன்
தீங்கவி பாடலுற்றேன்
ஒள்ளிய சொல்லும் பொருளும்
பெறேன்; **உரைத்தார் உரைத்த**
**கள்ளிய பக்கால் கவிகள் ஒட்டார்**
கடல் நஞ்சு அயின்றாய்;
கொள்ளிய அல்லகண்டாய் புன்சொல்
ஆயினும் கொண்டருளே'' (24)

கருத்தாயினும் கற்பனையாயினும் புதுவது புனைவதாய் விருந்தாய இன்பம் விளைவிக்க வேண்டும் கவிதை என்பது சேரமானின் திண்ணமான எண்ணம். அன்றியும் அவர் காலத்தைய இலக்கிய உலகின் ஒரு போக்கையும் மறைமுகமாக இப்பாடல் புலப்படுத்தக் காணலாம். இக்காலத்தவர் ''Plogiarism'' எனக்கூறும் இலக்கியத் திருட்டினை எவ்வளவு அழகாகவும் நாகரிகமாகவும் சேரமான் பெருமான் குறித்துள்ளார் என்பதும் அவ்வகைப் போக்கினைக் கவிஞர்கள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள் என்பதும் இன்றைய படைப்பிலக்கியவாதிகள் கருத்திற்பதித்தற்குரிய செய்திகளாகும். மேலும், சோமான்பெருமாள் நாயனாரக்கென்று இலக்கியக் கொள்கை ஒன்று இருந்தமையும் உய்த்துணரப்படும்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடும்பொழுதும் கவிஞன் என்ற முறையில் கற்பனைகள் கிளர்ந்தெழுதல் காணலாம், ஈசனின் சடைமுடி, முடியிற் சூடிய கங்கை, பிஞ்சுநிலா, அரவு என்பனவற்றைத் தொடர்புபடுத்தி அற்புதமான கற்பனை ஒன்றைப் படைக்கிறார் சேரமான்.

வேள்விக்குண்டத்தில் எரிந்து கொண்டிருக்கும் தீக்கொழுந்தைப் போன்றது விரிசடை. தீயிற் சொரியப் பெறும் பாற்கடலைப் போல் விரிசடையில் கங்கை விளங்குகிறது. கங்கையில் சஞ்சரிக்கும் பிறைநிலா ஓடும் தோணியை ஒத்துள்ளது.

தோணியை இயக்கும் துடுப்புப் (-கழை) போல் ஆற்றல்மிக்க அரவு உள்ளது.

''எரிகின்ற தீயொத் துளசடை
ஈசற்கு;அத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது
சூழ்புனல்; அப்புனலிற்
சரிகின்ற திங்களோர் தோணிஒக்
கின்றது;அத் தோணிஉய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுளதால்
அத்திறல் அரவே''. (67)

பொன்வண்ணத்தந்தாதியில் இடம்பெறும் இப்பாடல் இயைபுக் கற்பனைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. சடை, கங்கை, நிலா, அரவு என்ற நான்கும் ஈசன் முடியுள. ஓமத்தீ, பால், தோணி, கழை (-மூங்கில் துடுப்பு) வேறு வேறு இடங்களில் இருப்பன. இறைவனின் முடியை நோக்கிப் பேரழகில் ஈடுபடும் கவிஞரின் கற்பனைக்கு முற்கூறப் பெற்ற நான்கிற்கும் பிற்கூறிய நான்கும் ஓராற்றால் இயைபுறுத்தப் பெற்றுப் படைக்கப் பெறும் இக் கற்பனை எண்ணுந்தொறும் இன்பம் பயப்பது.

இதுகாறும் சேரமான்பெருமானின் கற்பனைத் திறம் கண்டோம். இனி, நக்கீர தேவரின் படைப்பாற்றலையும் கற்பனைத் திறனையும் காண்போம்.

நக்கீரதேவரின் இயற்கை ஈடுபாட்டினையும் படைப்பாற்ற லையும் கற்பனைத் திறத்தையும் ஒருங்கே புலப்படுத்தும் இலக்கிய மாகத் திருவீங்கோய் மலை எழுபது என்னும் பிரபந்தம் திகழ்கிறது. இப்பனுவலில் இடம்பெற்றுள்ள ஓரிரு கற்பனை களைக் குறித்து ஆராய்தல் அவர்தம் கவிச்சிறப்பினை உணர் தற்கு உதவும்.

அன்பர்களின் மனக்கவலைகளைப் போக்கும் பெருமானின் ஈங்கோய் மலையில், பன்றிகள் வலிய கூரிய பற்களால் நிலத்தை உழுதலால் அடியிற் கிடந்த சாதிமணிகள் மேலே பரவிக் கிடக்கின்றன. அவற்றைக் கண்ணுறும் குறப்பிள்ளைகள் கனற்குவியலோ என்று அஞ்சுகின்றனர். விளைந்து வளைந் திருக்கும் சோளக்கதிரை ஒடித்தெடுத்து நெருப்பினை அணைக்கும்பொருட்டு அந்த மணிகளை வெதுப்புகின்றனர். இப்படி ஒரு காட்சியைப் படைத்துள்ளார் நக்கீரதேவர்!

''ஏனம் உழுத புழுதி இனமணியைக்
கானவர்தம் மக்கள் கனலென்னக்—கூனல்
இறுக்கங் கதிர்வெதுப்பும் ஈங்கோயே நம்மேல்
மறுக்கங்கள் தீர்ப்பான் மலை'' (14)

மாணிக்கக்கல்லிற்கும் நெருப்பிற்கும் சிறுவர்க்கு வேற்றுமை தெரியவில்லை. அந்த அளவிற்கு அக்கற்கள் சுடர்விடுகின்றன. தம்மைச் சுட்டுவிடுமோ என்ற அச்சத்தின் காரணமாக அந் நெருப்பினைத் தணிக்க முற்படுகின்றனர். அவர்கள் கைக்கு எட்டியது மலையில் விளைந்து நிற்கும் சோளக்கதிர். இங்ஙனம் மலைக்காட்சியை அங்குள்ள கருப்பொருட்களைக் கொண்டு படைத்துக் காட்டும் நக்கீரதேவரின் கற்பனைத்திறம் பாராட்டற்பாலது.

மற்றொரு பாடலிலும் தீயைத் தணிக்கும் காட்சியைப் பாடியுள்ளார். மலையில் எங்கும் உள்ள இலவ மரங்கள் செக்கச் சிவந்த பூக்களை மலர்ந்துள்ளன. அத்தகைய இலவ மலரை ஆண்குரங்கு நெருப்பு என்றே மருண்டு நோக்குகிறது. தன்னை தீண்டுமோ என்ற அச்சத்தால் (-அநுமன் வழிவந்த குரங்கோ!) மூங்கிலின் கொம்பினைத் தழையுடன் ஒடித்து அந்த நெருப்பை அடித்து அணைக்க முற்படுகிறது. இக்காட்சியை வெண்சங்கக் குழையணிந்த ஈசனின் ஈங்கோய் மலையில் காணலாம்,

''ஓங்கிப் பரந்தெழுந்த ஒள்ளிலவத் தண்போதைத்
தூங்குவதோர் கொள்ளி எனக்கடுவன்-மூங்கில்
தழையிறுத்துக் கொண்டோச்சும் ஈங்கோயே சங்கக்
குழையிறுத்த காதுடையான் குன்று'' (17)

பொருள்களைத் தொடர்புறுத்திக் காண்பதால் தோன்றும் இத்தகைய கற்பனைகள் நக்கீரதேவர் பாடல்களில் மிகப்பல, இனி, பட்டினத்தார் படைப்புக்களில் பதிந்துள்ள கற்பனைப் புனைவுகளின் கவின் காண்போம்.

பட்டினத்துப் பிள்ளையார் பெருஞ்செல்வர். ஞானி· ஒப்பற்ற கவிஞர். தேர்ந்த சொற்கள், தெளிந்த கற்பனைகள் யாவும் குறித்த சிந்தனைகளைச் சுகமாகத் தாங்கிவரும் அருமை இவர்தம் பாடல்களின் பெருமை. இவர் அருளிச் செய்த **திருக்கழுமல மும்மணிக்கோவையிலிருந்து** ஒரு கற்பனைப் படைப் பினைக் கண்டு மகிழ்வோம்.

புகலிநாயகன் ஆகிய ஈசன் இமயக்கொழுந்தாகிய பிராட்டி யுடன் தன் மனத்தவிசில் எழுந்தருள வேண்டும் என்று

விண்ணப்பம் செய்கிறார். அம்மையப்பர் வருகைக்கும் அருள் கைக்கும் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டியதன் அவசியத்தை நன்கறிந்தவர் பட்டினத்தார்.

''கருவுற்ற காலம் முதல், பிறந்து வளர்ந்து வாழும் நாள்களில் எல்லாம் என் சிந்தையில் காமம். சினம், பொய் எனும் எல்லையற்ற குப்பைகள் மூடியிருந்தன. அரிதில் முயன்று அவற்றை அடியோடு அகற்றினேன். அறிவாற்றலை அழிக்க வல்ல சினமூட்டும் கரிய ஐவகைப் பொறிகளாகிய காளைகளைக் கட்டுக்கள் அவிழ்த்துவிட்டு அவற்றின் ஆதிக்கத்தினின்றும் விடுபட்டேன். என் உள்ளத்தில் படித்திருந்த இழிந்த எண்ணங்கள், உணர்வுகள், நினைவுகள் ஆகிய குப்பைகளை அகற்றியபின் அன்பினால் மெழுகினேன். மெழுகப்பெற்றுத் தூயதான உள்ளத்தில் அருள் என்னும் தீபம் ஏற்றினேன். தீபஒளி யினால் உள்ளத்தைப் பற்றியிருந்த துன்பஇருள் தொலைந்தது. உண்மை என்கிற மேற்கட்டியைச் சிந்தைக்குமேல் தூக்கி நிறுத்தினேன். இங்ஙனம் முன்பு பாழறையாக இருந்த உள்ளத்தைப் பெருமானே! நீ அன்னையுடன் எழுந்தருளி வீற்றிருத்தற்குரிய பள்ளியறையாக மாற்றி, நல்ல எண்ணங் களாகிய செந்தாமரைச் செழுமலர்களால் பூந்தவிசு அமைத் துள்ளேன்'' என்று அற்புதமான கற்பனைக் காட்சியை அழகுறப் படைத்துள்ளார்.

''கருமுதல் தொடங்கிப் பெருநாள் எல்லாம்
காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனும்
தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை
அரிதின் இகழ்ந்து போக்கிப் பொருதிறன்
மையிருள் நிறத்து மதனுடை அடுசினத்து
ஐவகைக் கடாவும் யாப்பவிழ்த் தகற்றி
அன்புகொடு மெழுகி அருள்விளக் கேற்றித்
துன்ப இருளைத் துரந்து முன்புறம்
மெய்யெனும் விதானம் விரித்து நொய்ய
கீழ்மையில் தொடர்ந்து கிடந்தஎன் சிந்தைப்
பாழறை உனக்குப் பள்ளியறை யாக்கிச்
சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு
எந்தைநீ இருக்க இட்டனன்.........புகலிநாயக!
இமையக் கொழுந்தையும் உடனே கொண்டிங்கு
எழுந்தருளத் தகும் எம்பெரு மானே!'' (4)

உண்மையான பத்தியுடையவர் இழிந்த ஆசைகள், விலங்கு உணர்வுகள், தீய எண்ணங்கள் ஆகியவற்றை வேரோடு களைந்

தவர் ஆவர், பொறிகளால் ஆளப்பெறாமல், அவற்றை அடக்கி நெறிநிற்றலும் ஒரு பெருந்தகுதியாகும். அன்பும் அருளும் பொருந்திய உள்ளத்தைத் தாமரைத் தவிசாகக் காண்கிறார். திருவள்ளுவர், '':மலர்மிசை ஏகினான்'' என்று கூறிய தொடர்க்குப் பரிமேலழகர்.

**''அன்பான் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண்**
**அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்''**

என்று பொருள் நிறைந்த உரை வரைந்திருத்தல் இங்கு எண்ணிப் பார்த்தற்குரியது. இறைவனை உள்ளத்தில் எழுந்தருளச் செய்து தியானித்தல்தான் உயரிய வழிபாடாகும் என்பது பட்டினத்தார் பாடல் உணர்த்தும் உண்மையாகும், மேலே காட்டிய பாடலில் தொடர் உருவகமாக அமையும் கற்பனை, பட்டினத்தாரின் அரிய படைப்பாற்றலுக்கும் கனிந்த பத்திமைக் கும் இனிய கவித்திறத்திற்கும் ஏற்ற சான்றாகும்.

இறைவன் திருவருளினால் மெய்யடியார்கள், 'பரமே பார்த் திருப்பர் பதார்த்தங்கள் பாரார், என்று சாத்திரம் கூறும். இத்தகைய அனுபவம் திருமூலர்க்கு வாய்த்த தன்மையினை முன்பே பார்த்தோம். பட்டினத்தார்க்கும் அரிய இவ்வனுபவம் வாய்த்தது, உலகத்தில் பொறிபுலன்களால் அறியப்படுவன எல்லாம் தோன்றி மறைவன. ஆதலின், அவையாவுமே நிலை யிலாதவை; பொய்எனக் கருதற்பாலன. ஆயின், காட்சிப் பொருளை எல்லாம் பொய் என ஒதுக்கிவிட்டு அருள் நோக்கி னால் பார்க்கும்பொழுது யாண்டும் பரம்பொருளே மெய் எனத் தோன்றும். இந்த அனுபவத்தை விளக்கும்வகையில்,

''எந்தை! நின்
திருவருள் நாட்டம் கருணையிற் பெறலும்
யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை!
ஓவியப் புலவன் சாயல்பெற எழுதிய
சிற்ப விகற்பம் எல்லாம் ஒன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றும் துணிவுபோன் றனவே''

(10;27-33)

எனவரும் பாடற்பகுதி **திருக்கழுமலை மும்மணிக்கோவையில்** அமைந்துள்ளது. தன்கலைத் திறத்தைப் புலப்படுத்திக் கைவல்

ஓவியன் சுவரில் பொலிவும் வனப்பும் பொருந்திய பல்வகைக் காட்சிகளைப் படைத்துள்ளான், பறவைகள், மான், மயில், மலர்க் கொடிகள், கனிமரங்கள் என்று தீட்டப்பட்ட வண்ணங் களைக் கையில் எடுக்கலாம் எண்றெண்ணி அவற்றைத் தடவிப் பார்க்கும்பொழுது அவற்றுக்கு ஆதாரமாக அமைந்திலங்கும் சுவரே முனைந்து தோன்றுதல் அடிகளால் எடுத்துக் காட்டப் பெற்றது. ஓவியங்களாகப் பார்க்கும்பொழுது சுவர் தோன்றாது. சுவராகப் பார்க்கும்பொழுது சுவர் தோன்றாது. சுவராகப் பார்க்கும் பொழுது ஓவியங்கள் தோன்றா. மனிதர்கள், ஆதாரத்தை மறந்து அதில் காட்சிதரும் பொருள்களில் தம்மை இழந்து விடுகின்றனர். எனின், மெய்யுணர்வு கைவரப் பெற்றோர் காட்சிப்பொருளை மறந்து ஆதாரமாக விளங்கும் மெய்ப்பொருளைத் தலைப்படுவர் என்ற கருத்தினை மெய்ப் பொருள் விளக்கக் கற்பனையினால் பட்டினத்தார் அற்புதமாக உணர்த்தியுள்ளார்.

பதினோராம் திருமுறையில் அடியார்களைப் பற்றி மிகுதி யாகப் பாடிய பெருமைக்குரியவர் திருமுறைகளைத் தொகுத்து தவிய நம்பியாண்டார் நம்பியே ஆவர். இளமையிலேயே இவர்க்கு ஞானம் வழங்கிய வள்ளல், இவர் பிறந்த ஊராகிய திருநாறையூரில் கோயில் கொண்டிருக்கும் பொல்லாப் பிள்ளையார் என்பர். பொள்ளுதல் என்றால் உளியினால் செதுக்குதல் என்பது பொருள். செதுக்கப்படாமல் சுயம்புவாகத் தோன்றிய காரணத்தால் பொள்ளாத பிள்ளையார் பொல்லாப் பிள்ளையார் என்று வழங்கப்பெற்றனர். தமிழ் ல, ள என்பன மாறியொலித்தல் (Interchanging) ஒலியியலில் ஒரு தனிப் பண்பாகப் பேசப்பெறும். மதில், மதிள், செதில், செதிள் என்று வருதல்போல் வளையம், வலையம் என்று வருதல் காணலாம். எனவே, 'பொள்ளா' என்பது 'பொல்லா' என்று வந்தது எனக் கொள்ளவேண்டும். திருவாசகத்தில்,

''புக்கு நிற்ப தென்று கொல்லோ என் **பொல்லா மணியைப்** புணர்ந்தே'' என்று புணர்ச்சிப்பத்திலும் சுயம்பு மூர்த்தம் **'பொல்லா மணி'** என்று சுட்டப்பெறுதல் இங்கு இயைத்து எண்ணத்தக்கது. பொள்ளாமணி என்பதே பொல்லா மணி என்று வந்தது. லகரம் ளமரமாக மாறிஒலித்தலை, Alueolarlateral becomes retroflex laterel என்று மொழியியலார் கூறுவர்.

நம்பியாண்டார் நம்பி ஞானசம்பந்தரிடம் மிகுதியான காதல் பூண்டவர். தனக்கு அருள்பாலித்த ஞானவிநாயகனிட மும் எல்லையற்ற அன்பினர். கலைச் செல்வங்களை எல்லாம் அடியார்க்கு வழங்கும் ஞானவள்ளலின் அருமை பெருமைகளை,

''விநாயகர் திருவிரட்டை மணிமாலை'' என்ற பிரபந்தத்தில் சிறப்புறப் பாடியுள்ளார். இப்பனுவலிலிருந்து ஒரு பாடலை அவர் தம் கற்பனைத் திறத்திற்குச் சான்றாகக் காண்போம்.

திருநாரையூரில் எழுந்தருளியிருக்கும் மலை ஒரு காலத்தில் வியாசர் வேண்டிக் கொண்டதற்கு இசைந்து ஒரு கொம்பினை எடுத்துப் பாரத இதிகாசத்தை எழுதிக் கொடுத்தது. அத்த கைய ஞானமலை ஆகிய விநாயகரைத் தொழுது போற்றும் அன்பர்களைத் துன்பத்திற்கும் பிறவிக்கும் காரணமாகக் கூறப் படும் குற்றங்களாகிய மலங்கள் சென்றடையா என்று கூற வருகிறார் நம்பியாண்டார் நம்பி. கற்பனைக் கவின்தோன்றக் கூறினால்தான் கவிதையாக அமையும் என்பதை நன்கறிந்தவர். ஆதலின் நெருப்பினை எறும்பு அரிக்க முடியுமா என்று கேட் கின்றார். அடியார்கள் நெருப்பினைப் போன்றவர்கள். எல்லாக் குற்றங்களையும் பொசுக்குதல் நெருப்பின் தொழில். குற்றங் களை எரித்துவிட்டுத்தான் குற்றம் இல்லாமல் இருப்பதும் சுடர் விடுவதும் அதன் நிலை. அடியார்களும் அங்ஙனமே. நெருப்பினை அருந்த நினைக்கும் எறும்பினைப்போல அவர்களை வருந்த நினைக்கும் மலம் என்று அமைக்கின்றார்.

''மருப்பைஒரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை அடிபோற்றத் துணிந்தால்— நெருப்பை
அருந்தஎண்ணு கின்றஎறும் பன்றே அவரை
வருந்த எண்ணுகின்ற மலம்'' (7)

மலம் எறும்பிற்கு ஒப்பு. எறும்பு எளிய பொருள்களை அரித்து விடும். மலமும் வலிமை இல்லாத எளியோரை வருத்தும். எனின், நெருப்பினை எறும்பு நெருங்க முடியாதது. போல, மனவலிமை மிக்க அடியார்களை மலம் வருத்த முடியாது என்று திருவருளின் பெருமையினைச் சிறப்பாகப் புலப்படுத்தியுள்ளார் நம்பி.

திருஞானசம்பந்தப் பெருமான் அம்மையப்பரால் ஞானப் பால் தந்து ஆட்கொள்ளப் பெற்றதால், ஆளுடைய பிள்ளை யார் என்று சுட்டப் பெற்றார். அவருடைய ஆற்றல் மிக்க கவிதைகளை நம்பியாண்டார் நம்பி போற்றும் பாங்கு காணத்தக்கது. நாகர் உலகு, பூவுலகு, உம்பர் உலகு ஆகிய பல் வகை உலகங்களிலும் உள்ள தொண்டர் பாடும் கவிதைகளைத் திருஞானசம்பந்தரின் அமுதப் பதிகங்களுடன் ஒப்பிடுகிறார். நீர் வளம், நிலவளம் சூழ்ந்த சண்பைநகர்க் காவலன் ஆகிய சம்பந்த னின் அமுதம் ஒத்த பதிகம் என்னும் களிறு புறப்படுமேல்,

மற்றையோர் கவிதைகள் நிற்றலாற்றாது வெளிறுபடும் என்று வீறுடன் இசைக்கின்றார்:

''ஒளிறு மணிப்பணி நாட்டும்
 உலகத்தும் உம்பருள்ளும்
வெளிறு படச்சில நிற்பதுண்டே
 மிண்டி மீன்உகளும்
அளறு வயற்சண்பை நாதன்
 **அமுதப் பதிகம் என்னும்**
களிறு விடப்புகுமேல் தொண்டர்
 பாடும் கவிதைகளே'' (31)

என்று **ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்** இடம்பெறும் அரியபாடல் அரியத்தக்கது. களிற்றுக்குரிய கம்பீரமும் பீடுநடையும் பொலிவும் பெருமிதமும் யாவும் ஒருங்கே வாய்ந்த சம்பந்தரின் அமுதப் பதிகங்களின் பெருமையினை அழகிய ஒரு தொடரினால் புலப்படுத்தும் கற்பனைப் பாங்கு எண்ணுந்தொறும் இன்பம் தருவது.

திருஞானசம்பந்தர் அவதரித்த சீகாழிப்பதியின் பன்மாண் சிறப்புக்களையும் இயற்கை வளங்களையும் **ஆளுடை பிள்ளையார் திருவுலாமாலை** என்னும் பிரபந்தத்தின் தொடக்கத்தில் நம்பி அழகாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். கவிதைக் காட்சிகள் பலவும் அவர்தம் கவிதைத் திறத்தையும் கற்பனை வளத்தையும் ஒருங்கே உணர்த்தவல்லன.

காழி நகர் மருதவளம் சான்றது. தாமரைத் தடாகத்தில் இளம் எருமை பாய, பறவைகள் இரியலுற்று ஏக, கயல்மீன்கள் அஞ்ச, குவளைமலர் தேன் சொரிய, செங்கழுநீர்த் தண்டு சிதைய, குருகினங்கள் துள்ளிச் செல்ல, மின்வகை மனம் விரிந்து பொய்கையில் மூழ்குதல் ஒரு தொடர்காட்சி. அஞ்சிய குளத்து வாளைமீனைக் கண்ட நண்டுகள் நடுங்கிச் சென்று செந்நெல் வயலில் சேரும்.

சேற்றில் தோன்றிய தாமரை மங்கையர்முகம்போல் மலரும். காலைப் பொழுதாகலின், கருநீல மலர்கள் கூம்புதல் கண் மூடியிருத்தல்போல் தோன்றும். வாவியில் நெய்தல் பூக்கள் மலரும். அன்னப்பறவைகள் துயிலை நீங்கின. அழகிய இறக்கையுடைய வண்டினங்கள் தத்தம் துணைகளை தேன்தேடச் செல்லுதலின் நீங்கின. நீர் அரணில் பூத்துள்ள வள்ளைமலர்கள், குமுத மலர்கள் முறையே பற்களையும் வாயையும் ஒத்தன. புனலில்

பொலியும் தாமரைகள் தேன் தாங்கி நின்றன. சங்குகள் ஒளி முத்துக்களை ஈன்றன. அடைகள் கழிந்து ஓடும் தேன் பெருக்கு செழுநெல் வயலில் புகுந்தது. கதிரவனின் ஒளிபடர்வதால் வயலில் உகளும் முத்துக்களின் சாயலும் மரகத மணிகளின் ஒலியும், செம் பொன்னின் சுடரும், பவளத்தின் செவ்வியும் எம்மருங்கும் ஓங்கி அழகை பயந்தன...... கமுகந்தோப்புகள், மாமரக்கூட்டம், தென்னஞ்சோலை, கதலிக்காடு, பலாப்பொழில், மஞ்சள் எழில் வனம், மாதுளைப் பொழில், இஞ்சி இளங்காவின் ஈட்டம், எழில் தரும் பாதிரி மரங்கள், சண்பகச் சோலை, மாதவி, புன்னை, குரா, தாழை முதலியவற்றின் ஈட்டமும் புகலி நகரின் நாற்றிசை யும் பொலிவு தரும்.

சோலைகளும் பொழில்களும் மிக்க காழிப்பதியில் இளந் தென்றல் உலாவும், நறுமணம் எண்டிசையும் பரவும். கரும் பாலையின் ஒலியும், நெல்வரிவார் ஓசையும், கிளிமிழற்றும் ஓசையும், வண்டினங்கள் மொய்க்கும் ஒலியும் கடலொலிபோல் ஒலிப்பன என்று இயற்கை வளங்களை அழகுணர்ச்சிப் பொருந்தச் சொல்லோவியம் செய்துள்ளார் நம்பியாண்டார் நம்பி (1.23). புகலி நகரைச் சுற்றிப் பார்த்துச் செய்தி சேகரித்துப் புகைப்படம் போல் உள்ளதை உள்ளபடியே தந்தாரா என்று தெரியவில்லை. புகார் நகர்க்கு நம்பி வந்திருத்தல் கூடும். புகலியர் கோனையும் தோணிபுரத்து ஈசனையும் போற்றிப் பரவினார் என்று எண்ணுதலே சாலும். நேரிற் பார்த்த காட்சிகளை நிரல்படுத்திப் புலப்படுத்தும் வகையிலும், மலர்களை மரபுவழிநின்று மங்கையர் உறுப்பு கட்கு உவமை கூறும் வகையிலும் ஒலிவகைகளை ஒழுங் குறுத்துப் புனைந்துரைக்கும் பாங்கிலும் நம்பியின் கற்பனைத் திறம் மேலோங்கி நிற்றல் அறியத்தக்கது.

இதுகாறும் பதினோராம் திருமுறையாசிரியர்கள் சிலர் படைத்துள்ள பயன் மிக்கனவும் சுவைமிக்கனவுமாகிய கற் பனைகள் சிலவற்றைக் கண்டோம். இனி, திருமுறைகளின் தெளிவாகத் தொண்டர்களின் வரலாற்றைக் காப்பியமாகப் பாடிய தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமான் படைத் துள்ள கற்பனைக் காட்சிகள் சிலவற்றைக் காண்போம்,

**சேக்கிழார் கற்பனைத்திறம்**

சோழநாட்டின் வளத்தைக் கண்ணாரக் கண்டு சுவைத்தவர் சேக்கிழார். பொன்னியாற்றின் அருட்பெருக்கினால் செந்நெலும்

கன்னலும் செழித்துப் பொழிலும் சோலையும் தழைத்து நீர்நாடு செஞ்சைக்கவரும். உழவர்மகளிர் உழைப்பின் உருவமாய் ஒளிர்வர், புனல்பரந்த பெருவயலில் பயிர்கள் செழித்து வளர்ந்துள்ளன. இடையே விரவிய களைகளைப் பறிக்கவரும் கடைசியர் ஆகிய வேளாண் பெண்கள் தரளம், பணிலம் என்ற முத்துவகைகள் காலை இடறுவதால் தளர்ந்து அசைவுற்று வரப்பிற் சென்று அமர்வர் (1.2.13). வயலோரத்தில் பூத்திருக்கும் செங்குவளை மலர்களைப் பறித்துத் தம் அரிய கூந்தலில் சூடிக் கொள்வர். குவளை மலரின் வண்ணமும் மணமும் கவர்வதால் அதில் பிலிற்றும் தேனைப் பருகும் பொருட்டு மணிவண்டுகள் குழல்மேல் மொய்க்க, அவற்றைக் கைவிரலால் விரட்டுவர். அவர்தம் கைகள் காந்தள் மலர்போல் இருத்தலின், அவற்றிலும் தேன் இருக்கும் என்று எண்ணி, வேறு வண்டுகள் கையை மொய்க்கத் தொடங்கும். அவர்தம் பிறைபோன்ற நெற்றியில் வியர்வை அரும்பவும் சிறுபற்கள் முல்லைமலர் போல் அரும்பவும் செந்தாமரை மலரில் பொங்கித் ததும்பும் புதுத்தேனைப் பருகி அமர்ந்திருப்பர். இப்படி ஒரு கற்பனைக் காட்சியைப் படைத்துள்ளார் சேக்கிழார்:

''செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேல்
சிறைவண்டை
அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும்
வரவழைப்பார்
திங்கள்நுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல்
தளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய்
மடுத்தயர்வார்'' (1-2-14)

சேக்கிழார் வேளாண்குலச் செல்வராதலின் உழவப் பெண்களின் இயல்பினை உணர்ந்து பாடியுள்ளார் எனலாம். குவளை மலர் பறித்தணிதல் அவர்தம் இயல்பு. அம்மலர்த் தேனைப் பருக வண்டுகள் வரும் என்பதுகூட இயல்புதான். எனின், அவற்றை விலக்கும் அப்பெண்களின் கைகளைக் காந்தள் மலராகக் கருதித் தேன் பருக வண்டுகள் வரும் நிலை கற்பனையின் உச்சியாகத் தோன்றுகிறது.

முதிர் பெண்களின் நிலையினை வருணித்த சேக்கிழார் சிறுமகளிர் செயலையும் கற்பனைச் சுவைபடப் பாடியுள்ளார்.

வயல்வேலையில் மகளிர் ஈடுபட்டிருக்கும் வேளையில் அவர்தம் பிள்ளைகள் வயலோரத்தில் அடுப்புவைத்து அடிசிலாக்கி விளையாடி மகிழும் காட்சியையும் சித்திரித்துள்ளார் :

''கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி
உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பால் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்
பெல்லாம்'' (1-2-16)

ஆமையினை அடுப்பாக வைத்து நத்தையைப் பானையாக ஏற்றி முல்லை மலர்த்தேனை உலையில் பெய்து முத்துக்களை அரிசியாக இட்டு அரக்கு நிறமுடைய செவ்வாம்பல் காம்பினால் நெருப்பு மூட்டிச் சோறு சமைத்து விளையாடுவர். சமையலுக்குத் தேவையான அடுப்பு, பானை, நீர், அரிசி, விறகு என்பனவற்றைச் சிறிதும் சிரமப்படாது வயலிலும் அதனைச் சார்ந்த இடங்களிலும் இச்சிறுமியர் பெறுகின்றனர். ஆமை, நத்தை, தேன், முத்து, ஆம்பல் என்ற பண்ணைப் பொருள்கள் யாவும் சிறுமியர் கற்பனையில் முறையே அடுப்பு, பானை, உலைநீர், அரிசி, நெருப்பு முதலியனவாகக் காட்சி தருதலின், அவற்றை ஒருங்கே தொகுத்துச் சமையல் பணியை மேற்கொள்கின்றனர். இயைபுக் கற்பனையாக இக்காட்சி தோன்றுகிறது.

கண்ணப்பரை ஆட்கொண்ட காளத்தியப்பரின் திருமலையில் இரவு என்பதே இல்லை. எக்காலமும் ஒளிமயமாகவே உள்ளது. பகலில் கதிரவனின் ஒளி. இரவில் மின்விளக்குச் சாதனம் இல்லாத காலத்தில் எங்ஙனம் ஒளிமயமாக விளங்கியது என்ற ஐயம் நம்மைப் போன்றவர்க்கு எழுவது இயற்கையே. சேக்கிழார் மூன்று காரணங்களைக் கண்டறிந்து கற்பித்துக் கூறுகின்றார்.

காளத்தி மலையில் எம்மருங்கும் சோதி விருட்சங்கள் உள்ளன. இவற்றைத் **'தீப மாமரங்கள்'** என்றார். இம்மரங்களின் மலர்கள் இயல்பாகவே சுடர்வண்ணமாக இருக்கும். மலையில் உள்ள முழைகளில் நவமணிகளையும் குரங்குகள் கொண்டுபோய் வைத்திருக்கும். இவற்றின் ஒளி இருளைத் துரத்தி எங்கும் பாயும். இவ்விரண்டும் புறத்தே காணப்படும் இருள்நீக்கும் சாதனங்கள். மூன்றாவதாக ஒருபெரும் ஒளியைச்

சேக்கிழார் சுட்டுகிறார். ஐம்பொறிகளையும் நன்னெறியில் நிறுத்தி மனத்தூய்மை பெற்ற யோகியர்களின் அகத்தும் புறத்தும் புறப்படும் அரியபெரிய சுடர், தடைகளை ஊடுருவி மலையெங்கும் ஒளிவெள்ளத்தைப் பாய்ச்சும். இம்மூவகைக் காரணங்களும் கற்பனை கலந்தனவாக இருப்பினும், இயற்கையின் பெற்றியையும் உள்ளொளியின் மாண்பினையும் உணர்த்துவன. காளத்திமலையின் ஒளிக்காட்சியை அற்புதக் கவிதையாகப் படைத்துள்ளார் சேக்கிழார் :

''செந்தழல் ஒளியிற் பொங்கும் தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார் அரும்பெரும் சோதியாலும்
எந்தையார் திருக்காளத்தி மலையினில் இரவொன் றில்லை'' (3-10-131)

யோகியரின் ஆற்றலை இப்பாடல் நன்றாகப் புலப்படுத்து கிறது. புத்தர்பிரான் பெற்ற ஞானஒளி எங்கும் பரவிக் குன்றுகளையும் குடைந்து சென்றது என்பர். கற்பனை கலந் திருப்பினும் உண்மையொடு பொருந்தியிருத்தலை உணர்ந்து மகிழ்தல் வேண்டும்.

ஆனாய நாயனார் வரலாற்றைப் பாடும் சேக்கிழார் அருங்கற்பனைகள் பலவற்றைப் படைத்துள்ளார். அவற்றுள் ஒன்றின் சிறப்பினை உற்று நோக்குவோம். பெரும்பாலும் முல்லைநிலத்து ஆயர் திருமாலைப் போற்றும் கொள்கையர். எனின், அவரின் வேறுபட்டு ஆனாயர் சிவனடிச்செல்வராக விளங்கினார். ஈசன்பொருள்சேர் புகழைக் குழலோசையாகப் பாடி மகிழ்ந்தவர். ஆநிரை காக்கும் அவர், அரன்பணி மறவாதவர். அவர் வாழ்ந்த முல்லை நிலத்தின் சிறப்பினைச் சேக்கிழார் கற்பனைவளம் சிறக்கப் பாடினார்.

காரும் மாலையும் முல்லைத் திணைக்குரிய பெரும் பொழுதும் சிறுபொழுதும் ஆகும். தொல்காப்பியர்,

''காரும் மாலையும் முல்லை''
(தொல். பொருள். நூ. 6)

என்று இலக்கணம் செய்துள்ளார். கார்ப்பருவம் மழைக்காலத் தின் தொடக்கம். மலர்ப்பொழில்களில் மயில், புறா முதலிய

பறவைகள் மகிழ்ந்திருக்கும் காலம். கற்பனைத் தூரிகையினால் கார்ப்பருவத்தைக் காரிகையாகப் படைத்து மகிழ்கிறார் சேக்கிழார். கார் என்னும் பருவமங்கை உலகம் என்ற நீண்ட அரங்கத்தில் ஆடல்புரிய அசைந்து வருகிறாள். இப்பெண்ணிற்கு முல்லை முகைகளே அழகிய பற்கள். இந்திர கோபப்பூவே செவ் வாய். மின்னலின் மாலைப்பொழுதே மேகலை ஆபரணத்துடன் கூடிய இடைவயிறு (பயோதரம்). ஒரு நங்கை ஆடல்புரிதற்குப் பின்னணியிசை தேவையன்றோ? கருநீல மயில்கள் குரலெடுத்துக் கூவுதலும், மலர்கொடிகளில் இருக்கும் புறாக்கள் பாடுதலும் பக்க இசையாக அசைந்தன. இங்ஙனம் ஓர் அறிய இசையரங் கினைக் கற்பனைத் திறத்தினால் சேக்கிழார் படைக்கின்றார் :

''நீலமா மஞ்ஞை ஏங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை கோபம்வாய்
முறுவல்காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதரம் அசைய
வந்தாள்
ஞாலநீ டரங்கில் ஆடக் காரெனும் பருவ நல்லாள்''
(3-14-19)

இத்தகைய கற்பனைக் காட்சியைக் கம்பர் காவியத்திலும் காண்கிறோம். இராமபிரானுக்கு உரிய கோசல நாட்டின் வளத் தினைப் பல பாடல்களில் விரித்துச் சுவைபடக் கம்பர் பாடினார். மருதத்தின் மாண்பினைப் புனைந்துரைக்கும் கவிஞர்,

''தண்டலை மயில்கள் ஆடத்தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகள் விழித்து
நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்வீற்றிருக்கும் மாதோ''
(1.2.4)

என்று அணிநயம் தோன்ற இசையரங்குக் காட்சியை இனிமை யுறப் படைத்துள்ளார், இக்காட்சியில் ஆடல் பயில்வன குளிர்ந்த சோலையில் உள்ள மயில்கள்- செந்தாமரை மலர்கள் விளக்காகத் திகழ்வன. மேகங்களின் முழக்கம் முழவோசையாக வும், வண்டுகளின் இனிய ஒலி மகரயாழிலிசையாகவும் அமைவன. ஆடலரங்கிற்குத் திரைச்சீலையாக அமைவன சரயு

நதியின் தெளிந்த அலைகள். பார்வையாளர்கள் குவளை மலர்கள் ஆகும். இந்நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்று வீற்றிருக்கும் வேந்தன் மருதம் ஆகும். இங்ஙனம் இயற்கையினிடையே எழில் பெற நடைபெறும் கலைநிகழ்ச்சியில் பங்கு பெறும் யாவும் இயற்கையாகவே அமைதல் எண்ணி இன்புறத் தக்கது.

கம்பர் சேக்கிழாரைப்பார்த்தோ, சேக்கிழார் கம்பரைப் பார்த்தோ கற்பனைகளைப் படைத்தனர் என்று கருதுதல் கூடாது. பெருங்கவிஞர்களின் படைப்புக்களில் இயல்பாகவே ஒத்த பண்புகள் அமைதல் உண்டு எனக்கருதுதல் ஏற்புடையது.

இதுகாறும் எழுதியவாற்றால் திருமுறையாசிரியர்கள் பத்தி நெறியைப் பாடியவர்களாயினும், கவிஞர்கள் என்ற முறையில் கற்பனைவளம் தோன்ற இனிய காட்சிகளைப் புனைந்துபாடும் திறம்படைத்த இலக்கியச் செல்வர்கள் என்பது புலனாகும். இவர்கள் புனைந்துரைக்கும் இயற்கைக்காட்சிகள், கற்பனைப் படைப்புக்கள் யாவும் இன்பம் பயத்தலுடன் விழுமிய கருத்துக் களை விளக்குவனவாக அமைந்து நின்று திருமுறைகளின் இலக் கியத் திறனைப் பயில்வார்க்கு உணர்த்தும் பாங்கின எனலாம்.

பண்சுமந்த பைந்தமிழ்த் திருமுறைகள் இன்புறுத்தும் நோக்கின மட்டும் அல்ல. வாழ்வியலுக்குத் தேவையான அறங் களையும் நீதிகளையும் புகட்டும் நோக்கம் கொண்டவை. எனவே, திருமுறைகள் உணர்த்தும் வாழ்வியல் குறிக்கோள்கள் பற்றி அடுத்த இயலில் ஆராய்ந்து காண்போம்.

# திருமுறைக் குறிக்கோள்

திருமுறை குறிக்கோளினைக் கற்பிப்பது. முழுமுதற் கொள்கையினை நிலைநாட்டுவது. மனிதப் பிறவியை மதிப்பது. பெருமிதப் பொலிவினைப் பேசுவது. நல்லவண்ணம் வாழ வழி காட்டுவது. என்றும் இன்பம்தழைக்க நெறி உரைப்பது. மக்கள் தொண்டே மகேசன் தொண்டென மொழிவது. அறங்களை வலியுறுத்துவது. இத்திறங்கள் பற்றி இங்கு நோக்குவோம்.

**முழுமுதற் கொள்கை**

திருமுறைகளை அருளிச்செய்த ஞான ஆசிரியர்கள் பல காலத்தவர். பல நிலையினர். குலத்தாலும் நிலத்தாலும் ஒன்றுபட்டவரும் வேறுபட்டவரும் உண்டு- ஆயினும், குறிக்கோளினால் இச்சான்றோர்கள் ஒன்றுபட்டவர்களே. வாழ்க்கைக்கு ஓர் இலட்சியமும் அதனைப் பெறுவதற்குரிய நெறியில் ஊன்றி நிற்றலும் வேண்டப் பெறும். அப்பரடிகள், ''குறிக்கோளிலாது கெட்டேன்'' என்று பிறர் நிலையில் வைத்துப்பாடியிருப்பினும் உயரிய குறிக்கோளுடன் வாழ்ந்தவர் என்பதில் ஐயமில்லை. உலகு, உயிர் அனைத்திற்கும் பரம்பொருளாக விளங்கும், முழுமுதற் கடவுள் சிவபெருமானே என்ற கொள்கை திருமுறைகளின் சாரம் ஆகும். எவ்விடத்தும் எக்காலத்தும் நீக்கமற நிறைந்து நிற்கும் உண்மை, அறிவு, இன்பமயமான இறைவன் இருப்பு நிலையில் (Static aspect) சிவன் என்றும்; உயிர்களின் பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐவகைத் தொழில்களைச் சங்கற்ப மாத்திரையான் புரியும் இயக்க நிலையில் (Dynamic Aspect) சக்தி என்றும் போற்றப்பெறுதலின் பரம்பொருளை அம்மையப்பராகவே திருமுறை ஆசிரியர்கள் பரவிப் பணிந்தனர். தீய சக்திகளினின்று உயிர்களைக் காத்தற் பொருட்டுத் தம் ஆற்றலின் வடிவமாக வெளிப்பட்ட விநாயகர், முருகன் ஆகிய மூர்த்தங்களையும் வைப்புத் தலங்களைப் பாடுதல்போல் திருப்பதிகங்களில் போற்றியுள்ளனர். ஒன்பதாம்

திருமுறையில் திருவிடைக்கழி முருகனைப்போற்றும் சேந்தனார் திருவிசைப்பாவும், பதினோராம் திருமுறையில் கபிலதேவர் அருளிய மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலையும், அதிரா வடிகள் பாடிய மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவையும், நம்பியாண்டார் நம்பி அருளிய திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலையும் நோக்கத்தக்கவை. சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையும் பதினோராம் திருமுறையில் தொகுக்கப் பெற்றுள்ளது. எனவே, அம்பிகை, விநாயகர், முருகன் ஆகிய அருள் வடிவங்கள் யாவும் பரம்பொருளின் வடிவமே என்பது திருமுறையாசிரியர்களின் திருவுள்ளம்.

திருஞானசம்பந்தர்,

''தனதடி வழிபடும் அவரிடர்கடி கணபதிவர
அருளினன்'' (1.123.5)

என்றும், திருநாவுக்கரசர்,

''நஞ்செந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை
கண்டாய்'' (6.23.4)

''நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்'' (5.19-9)

என்றும் முறையே விநாயகரையும் முருகவேளையும் பரவுதல் நோக்கத்தக்கது. பரம்பொருளாகிய ஈசனின் அருள் வடிவங்களே இவர்கள், எனவே அவரின் வேறல்லர் என்று சைவ நன்மக்கள் எண்ணிப் போற்றுவர், ஆதலின் திருமுறையாசிரியர்கள், ''மன்னியசீர்ச் சங்கரன்தான் மறவாமையே பொருள்'' எனக் கொண்டவர்கள் என்பது முடிந்த கொள்கையாகும்.

இயற்கையின் பல்வேறு ஆற்றல்களை வேறு வேறு பெயரிட்டுத் தெய்வமாக வழிபடுதலும், சிறுதேவதைகளை வணங்குவதும் திருமுறை ஆசிரியர்கட்கு உடன்பாடல்ல.

திருநாவுக்கரசர்,

''சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்''
(6.98.5)

என்றும், மாணிக்கவாசகர்,

''எச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே'' (8.38.4)
''அத்தேவர் தேவர் அவர் தேவர் என்றிங்ஙன்
பொய்த்தேவுப் பேசிப் புலம்புகின்ற பூதலத்தே

பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ''
(8.10.5)

என்றும், சேந்தனார்,

சில்லாண்டிற் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே''
(9.29.4)

என்றும் சிறுதெய்வ வழிபாட்டினைப் புறக்கணித்தல் நோக்கத் தக்கது. இக்கொள்கை நாயன்மார்கள் பின்பற்றி ஒழுகிய சமய வாழ்க்கையின் மையப் பண்பாக எண்ணுதற்கு உரியது.

**தொண்டரைப் பரவுதல்**

இறைவனுக்கு ஆற்றும் பணியினும் அடியவர்க்குப் புரியும் தொண்டே சமய வாழ்க்கையின் முதன்மைக் கடமையாகக் கொள்ளப்பெற்றது. இறைவனைப் பாடுவதற்கென்றே எழுந்த திருமுறைப் பாடல்களில் அடியார்களையும் பரவும் பாடல்கள் விரவி வருதல் காணத்தக்கது. சமய குரவர்கள் அனைவரும் அடியார் சீரினைப் பரவியிருப்பினும், அவருள்ளும் சுந்தரர் தனித்து விளங்குகின்றார். இவர் அருளிச்செய்துள்ள 'திருத்தொண்டத் தொகை' அடியார் சிறப்புக்கு மூல நூலாகப் போற்றப்பெறுவது. நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த **திருத்தொண்டர்திருவந்தாதி,** ஆளுடைய பிள்ளையார் பெயரிற் பாடிய திருவந்தாதி, திருச் சண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்ற பிரபந்தங்களும் அப்பரைப் பொருண்மையாகக் கொண்டு போற்றிய திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலையும் சுந்தரர் வழிநின்று அடியார் பெருமையினை மேலும் விரித்துப்பரவும் பான்மையின. பன்னிரண்டாம் திருமுறையாக அமையும் பெரியபுராணம் திருத்தொண்டர் புராணமாக விரிவுபெற்றுத் தொண்டின் பெருமையினையும் தொண்டர்களின் சிறப்பினையும் பரம்பொருளின் அருட்செயலையும் போற்றிப்பரவும் இனிய இலக்கியமாகத் திகழ்தல் காணலாம். சேக்கிழார் பெருமான்,

''அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன்''

''பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்

ஒருமையால் உலகை வெல்வார்
ஊனமேல் ஒன்றும் இல்வார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்
இவரைநீ அடையலாம் என்று''

என்று திருத்தொண்டர் மாண்பினைப் புகழ்ந்து பாடுதல் நோக்கத்தக்கது. திருஞானசம்பந்தரை உள்ளிட்ட அருளாளர் பலரின் கொள்கையினையே சேக்கிழார் விரித்துப் பாடியுள்ளார் என்பது திருமுறைகளை முழுமையாகப் பயில்வார்க்குத் தெள்ளிதிற் புலனாகும்.

இறைவனுக்கு ஒப்பாக அடியார்களுக்குச் சிறப்பு வழங்குதற்குத் தக்க காரணம் உண்டு. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தலின் அடியார்கள் வினை மாசினின்றும் விடுபட்டவர்கள். அடியவர் திருக்கூட்டத்தில் இணங்கியிருக்கும்பொழுது வாசனை மலம் வந்து வாதியாது. திருவருள் ஞானம் வாய்க்கப் பெற்றவர்கள் கூட, திருத்தொண்டர்களையும் சிவசின்னங்களையும் எண்ணி ஏத்துதல் வேண்டும் என்பது மெய்கண்ட சாத்திரங்களில் முடிமணியாக விளங்கும் சிவஞான போதத்தின் முடிந்த கருத்தாகும், இந்நூலின் பன்னிரண்டாம் சூத்திரம் பன்னிரண்டாம் திருமுறையின் சாரமாகத் திகழ்வது-

''செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே''

எனவே, திருமுறைகள் மெய்கண்ட சாத்திரம் ஆகிய சைவப் பனுவல்கள் யாவும் தொண்டரைப் பரவுதலைக் குறிக்கோளாகக் கொண்டவை என்பது தெளிவு.

பிறவியை நொந்து பேசும் சமயங்கள் பல உள்ளன. எனில், எடுத்த பிறவியை மதித்து வாழ்வாங்கு வாழ்ந்து மாந்தர் பயன் பெறும் குறிக்கோள் வாழ்வினைத் திருமுறைகள் வலியுறுத்துதல் சிறப்பாகச் சுட்டுதற்கு உரியது.

**பிறவிமாண்பு**

உலகில் பல்வகை உயிரினங்களைப் பார்க்கிறோம், தொல்காப்பியர் ஓரறிவு உயிர்முதல் ஆறறிவு படைத்த மனிதர்வரை பல்வகை உயிர் இனங்களை மரபியலில் சுட்டியுள்ளார், மணிவாசகப் பெருமான்,

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'' (8-1-26-31)

என்று தாம் புகுந்துவந்த நீண்ட பிறவிப் பயணத்தைச் சிவபுராணப் பகுதியில் சுட்டியுள்ளார். எனினும், மனிதப்பிறவியே பரப்பொருளை உணர்ந்து வழிபட்டு உய்திபெறுதற்கு வாய்ப்புடையது என்ற கருத்து அருளாசிரியர்கள் பாடல்களில் இடம் பெற்றுள்ளது: எனவேதான் அப்பர் பெருமான்,

''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்''
(4-81-5)

''மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே''
(4-81-4)

என்று கிடைத்தற்கரிய மனிதப் பிறவியை எண்ணி மதித்துப் பயன்வாய்ந்ததாக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும் என்று அறிவுறுத்தினார். கி.மு. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்க ஞானி புரோடோகோரசு (Protogoras) என்பார். ''Man is the measure of all things'' என்ற கருத்தினை வெளியிட்டனர். எனவே நாகரிகம் படைத்த உலக நாடுகளில் மனிதப் பிறவியின் மாண்பு போற்றப் பெற்றமை புலனாகும்.

பல்வகைச் சாதனைகளுக்கும் உலக வளர்ச்சிக்கும் மனிதப் பிறவி காரணமாக அமைகிறது. பயன்மிக்க வாழ்வினை மேற்கொள்வதற்கே இப்பிறவியைப் பெற்றுள்ளோம் என்று திருமுறையாசிரியர்கள் கருதியுள்ளனர்.

நமக்கு இறைவனால் வழங்கப்பெற்ற உடம்பையும் நுகர்ச்சிப் பொருள்களையும் வெறுத்து ஒதுக்கும் சமணத்தன்மையைத்

திருமுறைகள் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. மலபரிபாகத்தின் பொருட்டே இப்பிறவி கிடைத்துள்ளது. அதனை அறிந்து ஈடேறுவதற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே அருளாளர்களின் குறிக்கோளாகும், திருஞானசம்பந்தர்.

''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்
பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே''
(3-4-24)

என்று திருவருள் நெறிநின்று மாந்தர் நல்லவண்ணம் வாழ்தற்கு ஆற்றுப்படுத்தியுள்ளார். இறைவனை எண்ணிக் கடமைகளை ஆற்றும்பொழுது ஆற்றலும் ஊக்கமும் பெறுகிறோம், இறைவனைப் பரவும் நாள்கள் எல்லாம் பிறந்த நாளைப் போலச் சிறந்த நாள்கள்; தொழாத நாள்கள் பிறவாத நாளைப் போலச் சிறவா நாள்கள் என்பது அப்பர் பெருமானின் கொள்கையாகும். இத்திறத்தினை,

''பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாள்எல்லாம் பிறவா நாளே'' (6-1-1)

''துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை ஏத்தும் நாள்கள் என்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்''

எனவரும் தேவாரப் பகுதிகள் தெளிவுறுத்தும்.

பணிசெய்வதே வாழ்க்கையின் குறிக்கோள். இறைபணியாளர் மக்கள் தொண்டராகவும் விளங்குதல் வேண்டும் என்பது திருமுறை வழங்கும் செய்தியாகும். திருநாவுக்கரசர்,

''என்கடன் பணிசெய்து கிடப்பதே'' (5-19-9)

என்று அடக்கமாகக் கூறும் அருள்மொழி அனைவரையும் கவர்வது. ஒன்றையும் எதிர்பார்க்காமல் திருத்தொண்டர்கள் பணிபுரிதல்வே வண்டும் என்பதே இத்தொடரின் குறிப்புப் பொருளாகும், இவைவனே பணிபுரிவதையே வேண்டினார். சேக்கிழார் பெருமான்,

''வித்தகம் பேச வேண்டாம் பணிசெய வேண்டும்
என்றார்'' (1-5-41)

என்று தடுத்தாட்கொண்ட புராணத்தில் குறிப்பிடுதல் கூர்ந்து நோக்கத்தக்கது.

வாழ்நாளை நல்ல முறையில் பயன்படுத்துதல் வேண்டும். பயனற்ற வெறும் நாளாகப் பொழுதைப் போக்குதல் பிறவி நோக்கத்தை அறியாதவரின் பேதைமைச் செயலாம். இறைவனை முன்னிலைப்படுத்தியே நாட்கடமைகளைச் செய்யத் தொடங்குதல் தமிழர் பண்பாடு. புலர்காலையில் நீராடி மலர்பறித்து ஈசனுக்குச் சூட்டிக் கைகளினால் கூப்பித் தொழுது அன்புற்று வாயாரப் பாடிக் கசிந்துருகி நிற்கும் அடியார்களின் கணக்கினை ஆண்டவன் எழுதிவைத்திருக்கின்றான் என்பது அப்பர் பெருமானின் திடமான கருத்தாகும். இறையுணர்வின்றி வெறும்பொழுது போக்கும் வெற்றரையும் சிற்றேட்டில் பெருமான் குறித்துக்கொள்பவர் என்ற குறிப்பில்,

''தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்றுகின் றோரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் போரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே'' (5-21-8)

எனவரும் பாடலை அருளிச் செய்துள்ளார். கணக்கு என்ற சொல் ஏடு, நூல் என்ற பொருளில் வழங்குவது. கீழ்க்கணக்கு என்பது சிற்றேடு என்ற பொருளைத் தருவது. அளவினாற் சிறிய பாடல்கள் அடங்கிய தொகையினைக் கீழ்க்கணக்கு என்று கூறும் மரபு நோக்கத்தக்கது. அப்பர் பெருமான் சுட்டிய இறைவனின் ஏட்டினைப் பின்னர்த் தோன்றிய திருவெண்காட்டடிகள் ஆகிய பட்டினத்தார் மேலும் விரித்துரைத்தல் காணலாம். கோயில் நான்மணிமாலையில்,

''நின்தமர் பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன்''
(11.26.4. 21-23)

என்று பணிவுடன் விண்ணப்பிக்கும் பகுதி நோக்கத்தக்கது. இறைவனுக்குத் தொண்டுசெய்தவர் என்பதிலும் மக்கட்குத் தொண்டு செய்தவர் என்று கூறிக்கொள்வதில் ஒரு தனிச் சிறப்பும் மனநிறைவும் இருத்தல் காணலாம். இறைவன் வசம் உள்ள பொத்தகம் திருத்தொண்டர்களின் பெயர் நிரலைக்

கொண்டிருக்கும் என்றும், அப்பட்டியலில் தன் பெயரையும் சேர்த்துக் கொள்ளுவதையே பெறுதற்கரிய பெரும் பேறாகப் பட்டினத்து அடிகள் கருதினர் என்பதும் எண்ணுதற்கு உரியன. இத்தகைய விழுமிய வேண்டுகோளினை ஆங்கிலக் கவிஞர் லே ஹண்ட் (Leigh Hunt) என்பவரின் பாடலிலும் அமைந்திருத்தல் சிறப்பாக நோக்கத்தக்கது. அபு பென் ஆதம் என்னும் மக்கள் தொண்டன் வரலாற்றினைக் கூறும் வகையில் அப்பாடல் அமைந்துள்ளது. ஓரிரவில் ஆழ்ந்த உறக்கத்தினின்றும் விழித்தெழுந்து பார்க்கும்பொழுது தன் அறையில் சன்னல் வழி வரும் நிலாவொளியில் பொன்னேட்டில் தேவதூதன் எழுதிக்கொண்டிருப்பதை அபுபென் ஆதம் கண்ணுற்றான். "என்ன எழுதுகிறாய்?" என்று கேட்டான், கடவுள் அன்பர்களின் பெயர்களை எழுதுவதாகத் தேவதூதன் கூறினான். தன் பெயர் அப்பட்டியலில் உண்டா?என்ற அபுவின் கேள்விக்குத் தூதன் இல்லை என்று விடையிறுத்தான். தாழ்ந்த குரலில், எனின் திடமான முறையில் தேவதூதனைப் பார்த்து, "இறைவனால் படைக்கப்பட்ட சகமக்களை நேசிப்பவர் பட்டியலில் தன்பெயரைக் குறித்துக் கொள்ளும்படி பணிவுடன் வேண்டிக் கொண்டான். அங்ஙனமே தேவதூதன் அபுவின் பெயரைப் பொறித்துக் கொண்டு மறைந்தான். அடுத்த நாள் இரவே பேரொளி சூழ காட்சித்தந்தான் தேவதூதன் இறைவனால் அருள்பாலிக்கப் பெற்றவர்களின் பெயர்ப் பட்டியலைக் காண்பித்தான். அபுவின் பெயரே ஏனையோர் பெயர்களை முந்திச் சென்றது (முதலில் அமைந்திருந்தது. என்பதே அக்கவிதையின் பொருண்மை. அப்பாடலை இங்கே காண்போம்.

"Abou Ben Adham — M·y his tribe increase !
Awoke one night from a deep dream of peace,
And saw within the moonlighf in his room
Making it rich and like a lily in bloom
An Angel writing in a book of Gold.
Exceeding peace has made Ben Aham bold
And to the presence in the room he said :
"What writest thou?" the vision raises its head
And, with a look made of all sweet accord
Answered : "the names of those who love the Lord"

"And is mine one"? said Abou,
"Nay, not so"
Replied the Angel. Abou spoke more low
But cheerly Still ; and said, "I pray thee then,
Write me as one that loves his fellow men"
The angel wrote and vanished. The next night
It came again with a great wakening light
And showed the names whom love of God
had blessed
And Lo ! Ben Adham's name led all the rest".

இவ்வினிய கவிதையில் இடம்பெறும் மக்கள் தொண்டனாகிய அபுவும், பணிசெய்வதே வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்ட அப்பர்பெருமான், பட்டினத்தார் முதலிய அருளாளர் களும் மனிதநேயத்தின் முடிமணிகளாகப் போற்றத் தக்கவர்கள் என்பது தெளிவு.

அப்பரடிகளுக்குப் பின்னர் வாழ்ந்த மணிவாசகப் பெருமான்,

"எது எமைப் பணிகொளு மாறுஅது கேட்போம்"
என்றும் (8-20-7)

"அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும்" (8-11-3)

என்றும் பணிபுரிதலை முதன்மைநிலையில் வைத்துப் போற்றுதல் காணலாம்.

திருமூலர் மக்களுக்குச் செய்யும் தொண்டே மகேசனுக்குப் புரியும் வழிபாடு என்று எண்ணினார். கல்லினால் உருவம் அமைத்து இறைவனை வழிபடுவதற்குப் பல காலங்களுக்கு முன்னர் சுவரில் படம் எழுதிப் பரமனைப் பத்தியால் பணிந்து பரவினர். எனவே இறைவனைப் 'படமாடும் கோயில் பகவன்' என்று குறித்துள்ளார். மனிதநேயம் மிக்க திருமூலர் மாந்தரை, 'நடமாடும் கோயில் நம்பர்' என்று போற்றுகிறார். நடமாடும் நூல்நிலையம், அஞ்சல் நிலையம், மருத்துவ நிலையம் போல மாந்தரை 'நடமாடும் கோயில்' (Moving Temple) என்று மதித்துப் பரவுகிறார். 'நம்பர்' என்ற சொல்

நம்மவர் என்ற பொருளைத் தரும். எனவே, இயங்கும் கோயிலாக விளங்கும் மானிடர்க்குச் செய்யும் தொண்டு பரம்பொருளாகிய பகவனுக்குப் போய்ச் சேரும். ஆயின், பகவனுக்குப் புரியும் தொண்டு மாந்தரைப் போய்ச் சேர்வ தில்லை. எனவே, மக்களுக்குப் பணிபுரிதல் வேண்டும் என்று விழுமிய கொள்கையினை,

''படமாடும் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடும் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடும் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடும் கோயில் பகவற்க தாமே'' (1857)

எனவரும் திருமந்திரச் செய்யுள் தெளிவுறுத்துகிறது. எனவே, திருமுறைகளின் மற்றொரு மையக் கருத்தாக மக்கட்பணி மதிக்கப் பெறுகிறது என்பது தெளிவு.

### பெருமிதப் பொலிவு

இறைபணி நிற்பவர் அச்சம் இலராய் அவலம் இலராய்ப் பெருமிதப் பொலிவுடன் ஒளிவீசுவர். உண்மையில் உறைத்து நிற்பவர் பொய்ம்மையைக் கண்டு கலங்க வேண்டியதில்லை. இத்தகைய மனத்திட்பத்தினைத் திருமுறை நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. முடியாட்சியை எதிர்த்து உரிமைக்குரல் எழுப்பும் நெஞ்சுரத்தினைத் திருவருள் வழங்கியது. அப்பரடிகள்,

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை''
(6-98-1)

''உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை
அஞ்ச வருவதும் இல்லை'' (4-2-1-10)

என்று பெருமிதப் பொலிவு தோன்றப் பேசுதல் கருதத்தக்கது. மாணிக்கவாசகர்,

''யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்''
(8-5-30)

''எங்கெழில்என் ஞாயிறு எமக்கு'' (8-7-10)

என்று பெருமிதம் தோன்றப் பேசுதல் ஆன்மபலத்தின் விளைவாகும். அப்பர் அடிகள், ''வானம் துளங்கிலென் மண்கம்பம் ஆகிலென்'' (4.112.8) என்று நெஞ்சுறுதியுடன் முழங்குதற்கும் அருள்மறமே காரணம் எனலாம். உண்மையான அடியவர்கள் உலகியல் நிலைக்கு ஆட்படமாட்டார்கள். அஞ்சாமை என்பது அஞ்சத் தேவையில்லாதவற்றிற்கு அஞ்சாமல் இருப்பதைச் சுட்டுவதாகும். திருவள்ளுவா, 'அச்சமே கீழ்களது ஆசாரம்' என்று கீழோர் இயல்பினைக் குறித்துள்ளார். ஆதலின், மேலோரின் ஆசாரம் அஞ்சாமை என்பதும் அது அருள்உள்ளத்தில் சுரப்பது என்பதும் அப்பர் வாழ்வியலால் அறியலாகும்.

நாள், கோள் முதலியவற்றிற்கு அஞ்சுகின்ற மாந்தரும் உள்ளனர். மதுரை மாநகரில் சமண் மாசறுத்தற் பொருட்டுப் பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியார் அனுப்பிய தூதுவர்கள் திருமறைக்காட்டில் இருந்த திருஞானசம்பந்தரை அழைக்க வந்தபோது உடனிருந்த திருநாவுக்கரசர் நாளும் கோளும் சரியில்லாதநிலையில் கூடல்நகர்க்குப் போதல் சரியன்று என்று கூறியபொழுது ஈசனடியார்களை அவை ஒன்றும் செய்யா; நலமே விளையும் என்று நம்பிக்கையூட்டும் ''**கோளறு பதிகத்தை**'' சம்பந்தர் பாடியருளினார். இங்ஙனமே திருநீற்றுப்பதிகம், நமச்சிவாயத் திருப்பதிகங்கள் யாவும் வாழ்க்கையில் எதிர்ப்படும் தடைகளை விலக்கி நல்வாழ்வு புரிதற்கு ஆற்றல் அளிக்கும் மந்திரமொழிகளாகச் சைவ நன்மக்களால் போற்றப் பெறுவன. சம்பந்தர்,

''தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல் மாலை'' (4-85-11)

''காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம் நமச்சி வாயமே'' (3-49-1)

என்று மனதிற்கு உறுதிபயக்கும் மார்க்கம் காட்டினார். திருக்கடைக்காப்புப் பாடியறியாத திருநாவுக்கரசர்கூட நமச்சிவாயத் திருப்பதிகத்தில்,

''மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப் பத்து
ஏத்தவல் வார்தமக்கு இடுக்கண் இல்லையே''

(4-11-10)

என்று பயன்கூறிப் பாடுதல் எண்ணத்தக்கது.

அவரவர் அன்பிற்குத்தக இறைவன் ஒருநிகராகவே அருள்பாலிக்கும் கருணைக்கடல் என்ற பேருண்மையினைத் திருமுறைப் பாசுரங்கள் தெளிவுறுத்துவன. பதினோராம் திருமுறையில்,

''வல்லான் ஒருவன் கைம்முயன்று எறியினும்
மாட்டா ஒருவன் வாளா எறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லே போல
நலத்தின் வழாஅர்நின் நாமம் நவின்றோரே''

(11-28-19)

என்று பட்டினத்துப்பிள்ளையார் பத்திநெறியின் பாங்கினைச் சுவைபடச் சொல்லுதல் காணலாம். பெருமுயற்சி எடுத்து ஒருவன் வானை நோக்கி வீசிஎறியும் கல்லும், எளிய வகையில் வீசுவோன் கல்லும் தரையை நோக்கி வந்து வீழ்தல் கண்கூடு. அதுபோல இறைவனாகிய வான்பொருளை நோக்கி விரைந்து செல்லும் பூரண ஞானிகளாயினும், மெல்லச் செல்லும் எளிய அன்பராயினும் அப்பெருமானின் திருப் பெயரைச் சொல்லி வழிபடுதலின் ஒரே நிகரான நலத்தைப் பெறுவர். இங்ஙனம் இறைவனின் எளிவந்த தன்மையினை எடுத்துச் சொல்லுவதன் வாயிலாகத் திருமுறை தெய்வ நாட்டம் கொள்ளச் செய்கிறது. எச்சமயத்தவர்க்கும் ஏதாவதொரு வகையில் இறைக்கொள்கை இருக்கத்தான் வேண்டும். அவர்கள் யாவர்க்கும் பரம்பொருளே குறிக் கோளாக இருப்பவன். இவ்வுண்மையினை,

''எத்தவத்தோர்க்கும் இலக்காய் நின்றஎம் பெருமான்''

(1-4-10)

எனவரும் திருமுறைப்பாடல் உணர்த்துகின்றது.

இறைவனைக் குறிப்பிட்ட வேளைகளில் ஆகமவிதிப்படி வழிபடுதல் வேண்டும் என்பது சைவசமய நெறியாகும். எனின், பேரறிவாளனாகிய இறைவன் இவ்விதிமுறைகளைக்

கடந்து அன்பு ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு வழிபாடு புரியும் அடியவர்க்கு எளியனாய் இறங்கிவந்து அருள்புரிந்த வரலாறுகளைப் பெரிய புராணம் உள்ளிட்ட பல இலக்கியங் களின்வழி அறிகிறோம். திருவெண்காடர் ஆகிய பட்டினத்தார்,

''இயன்ற பொழுதின் இட்டது மலராய்ச்
சொன்னது மந்திர மாக என்னையும்
இடர்ப்பிறப்பு இறப்பெனும் இரண்டின்
கடற்படாஅ வகை காத்தல்நின் கடனே''

என்று பதினோராம் திருமுறையில் பகர்ந்திருத்தல் பத்திநெறி யின் மாட்சியைத் தெளிவுறுத்துதல் காணலாம்.

இனி, வழிபாட்டினால் விளையும் பயன்கள் பற்றித் திருமுறை உணர்த்தும் செய்திகள் சிலவற்றைக் காண்போம்.

**வினை நீக்கம்**

உழைப்பிலும் தொண்டிலும் இறையுணர்விலும் அழுந்தி யிருக்கும் அன்பர்களை வினைகள் வந்து நலியா என்று திருமுறையாசிரியர்கள் அறுதியிட்டுப் பாடியுள்ளனர். ஈசனடி யார்கள் மாசற்றவர்கள். ''பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்''. பழவினைப் பயனை மெய்த்தொண்டர்கள் வென்று வீறுபெறுதல் முடியும் என்பதே அருளாளர்களின் முடிந்த கருத்து.

வினைப்பயனை வெல்லமுடியாது என்றும், ஊழ்வினை உருளடுத்து வந்து தன்பயனை உண்பிக்கும் என்றும் சமண சமயமும் சாக்கிய சமயமும் அச்சுறுத்திய காலத்தில், மக்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையும் எடுக்கும் முயற்சிகளில் தளர்ச்சி யில்லா ஊக்கமும் கொடுக்கும் வகையில் அருளாளர்கள் வழங்கிய திருவருட் செய்தி பேருதவியாகப் பிறங்கியது. திருவருளினால் வினையினின்றும் விடுபடமுடியும் என்று பாடியதுடன் வாழ்ந்தும் காட்டினர். ஒருசில சான்றுகளை இங்குச் சுட்டுதல் சாலும். திருஞானசம்பந்தப் பெருமான்,

''திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல்
எளிதாமே'' (1-1-11)

''பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை இலரே''
(1-10-2)

''பாதம் தொழுவார் பாவம் தீர்ப்பார் பழனநகரரே''
(1-67-1)

''நினைத்துத் தொழுவார் பாவம்தீர்க்கும் நிமலர்
உறைகோயில்'' (1-69-6)

''அல்லலோ டருவினை அறுதல் ஆணையே'' (273-11)

என்று பாடும் பதிகப் பகுதிகள் இங்கு எண்ணத்தக்கவை. பாவ மன்னிப்பு என்பது அயற்சமயத்தார் சிலர்க்கே உரிய அருட் கொள்கை என்று எண்ணுதல் வேண்டா. திருமுறையாசிரியர்கள் வாழ்ந்து காட்டிய சமயவாழ்வின் அருள்வெளிப்பாடாகப் பாவ மன்னிப்பு என்ற கருணைக் கொள்கை விளங்குகின்றது. எனவே கழிந்ததை எண்ணி மனம் அழிந்து சோம்பித் திரியாமல் திருவரு ளினைப் பெரிதும் பற்றி உய்தல் வேண்டும் என்பது திருமுறை நெறியின் நோக்கம் ஆகும்.

வரையறுக்கப்பட்ட நாளின் எல்லையை யாரும் கடந்து வாழ்தல் இயலாது என்பதும் புறச்சமயத்தார் கருத்தாகும். எனின் சமணநெறியில் பல்லாண்டுகள் நின்று பின்னர்த் திருவரு ளினால் சைவம் சார்ந்தத திருநாவுக்கரசர்.

''இழைத்தநாள் எல்லை கடப்ப தென்றால்
இரவினொடு நண்பகலும் ஏத்தி வாழ்த்திப்
பிழைத்ததெலாம் பொறுத்தருள்செய் பெரியோய்
என்றும்
பிஞ்ஞகனே மைஞ்ஞவிலும கண்டா என்றும்
அழைத்தலறி அடியேன்உன் அரணம் கண்டாய்
அணியாரூர் இடங்கொண்ட அழகா என்றும்
குழற்சடைஎன் கோன்என்றும் கூறு நெஞ்சே
குற்றமில்லை என்மேல்யான் கூறி னேனே''(6-31-5)

என்று வாழ்க்கையில் நம்பிக்கை கொள்ளுதற்குத் திருவருள் நெறிநிற்க ஆற்றுப்படுத்துதல் அறியத்தக்கது. மேலும், ''நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்'' (6.14.1). ''எம் பந்த வல்வினைநோய் தீர்த்திட்டான் காண்'' (6.30.1) என்று சுட்டுமிடங்களும் காணத்தக்கவை.

எனவே, அடியார் கூட்டத்தில் இணங்கிநின்று ஈசன்பணியும் மக்கட்பணியும் செய்தொழுகும் சீலர்கள் வினையை வென்று விளங்குவச் என்பது திருமுறைத் தெளிவு. பன்னிரு

திருமுறைகளின் சாரத்தையே பன்னிரு சூத்திரங்கள் அடங்கிய சிவஞான போதமாகச் சாத்திரம் செய்த மெய்கண்டார்,

''மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தம்திறத்துச் சேர்வை-அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரன்உணர்வி னால்உணரும்
மெய்த்தவரை மேவா வினை''(சிவ. போதம் வெ.75)

என்று தெளிவுறுத்துதல் சிந்திக்கத்தக்கது. இப்பாடலில், இறையுணர்வும் நல்லொழுக்கமும் இல்லாதவர் சிறப்பில்லார் எனக் குறிக்கப் பெற்றனர். அவரோடு சேர்ந்து பழகுதல் வினைக்கு ஏதுவாகிய மலக்குற்றங்களை உண்டாக்கும். இதனைச் ''சிற்றினம் சேராமை'' என்று திருவள்ளுவர் குறித்தலால் தெளியலாம். உத்தம குணங்களும் சீலமும் நன்னெறியும் பொருந்திய சிவபத்தர்களுடன் சேர்ந்தொழுகுதல் வினைநீக்கத்திற்கு வழிகாட்டும். இச்செயலும் பரன் உணர்வினால் ஒருவர்க்கு அமைதல் வேண்டும். அங்ஙனம் ஒழுகும் ஞானிகளே மெய்த்தவர்கள் என்பதும் அவர்களைப் பழவினைகள் வாதிக்கமாட்டா என்றும் திருமுறை நெறிநின்று மெய்கண்டார் விளங்கவுரைத்தல் நோக்கத்தக்கது. நன்னெறி நிற்பவர்க்கு நாயன்மார்களின் வாழ்க்கை நம்பிக்கை தரும் என்பது தெளிவு.

**இன்ப ஆக்கம்**

வழிபாட்டின் ஒருபயன் வினைநீக்கம். மற்றொரு பயன் இன்ப ஆக்கம் ஆகும். திருமுறைகள் இக்கருத்தையும் வலியுறுத்தியுள்ளன, ஒருசில சான்றுகள் சுட்டத்தகும். திருஞானசம்பந்தர்,

''குற்றம் அறுத்தார் குணத்தின் உள்ளார்
கும்பிடுவார் தமக்கு அன்பு செய்வார்'' (1-8-6)

''சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம்
நேர்ந்தவன்'' (1-113-5)

''தம் திருவடி தொழுவார்,
''ஊன்நயந் துருக உவமைகள் தருவார்'' (1-77-2)

''புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே'' (275-11)

என்று இன்ப பேற்றினை வழிபாட்டின் பயனாகக் குறித்துள்ளார் அப்பர் பெருமான்,

''குலமில ராகிலும் குலத்துக் கேற்றதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே'' (4-11-6)

''என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்'' (4-42-1)

''சலங்கெடுத்துத் **தயாமூல தன்மம்** என்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே''
(6-20-6)

''**தயாமூல தன்ம வழி** எனக்கு நல்கி
மனந்திருத்தும் மழபாடி வயிரத் தூணே'' (6-40-6)
''தொண்டர் குழாம் தொழுதேத்த அருள்செய்
வானை'' (6-90-3)

என்று இசைத்தல் எண்ணத்தக்கது. தயா மூலதன்மம் என்பது அப்பரடிகள் அறிமுகம் செய்துள்ள அருட்பெருங்கொள்கை. அறங்கள் அனைத்திற்கும் அடியாக அமைவது தயவு எனப் படும் அருள். அன்பின் பெருக்கமாகிய அருள் உள்ளம் வாய்ந்த வர்களே அறங்களைக் குறைவற ஆற்றுதற்கு உரியர். அருள் உள்ளம் பெற்ற அந்தணர்க்குச் சிவபேதம் இல்லை. இத்தகைய கருணைக் கொள்கையின்வழி மனந்திருந்தி இறைவன் நலம் கொடுத்தார் என்று பாடியுள்ளனர். மற்றுமொரு பாடலில், ''வேண்டுவோர் வேண்டுவதே ஈவன் கண்டாய்'' (6.23.1) என்று குறித்துள்ளார். மணிவாசகப் பெருமான்,

''வேண்டத் தக்க தறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ'' (8-33-6)

என்று இறைவனின் பேரருள் திறத்தினைப் பொறித்துள்ளார். சுந்தரர்,

''பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானை'' (7-59-1)

என்று இயம்புதலினால், இறையருளினால் துன்ப நீக்கமே யன்றி இன்ப ஆக்கமும் அன்பர்கள் எய்தப் பெற்றனர் என்பது புலனாகும்.

மேலும் ஞானிகள் அருள் உணர்வினால் உள்ளம் விரிவு பெற்ற நிலையில் இறைவனைப் பணிதல் ஒன்றே புரிதற்கு

உரியது என்றும் இன்பப்பேறு, மறுமை, வீடு என்பன கூட அவர்களுக்குக் குறிக்கோள் அல்ல என்றும் திருமுறைகள் தெளிவுறுத்துகின்றன. திருஞானசம்பந்தப் பெருமான்,

''கொன்றைத்,
தொங்கலான் அடியார்க்குச் சொர்க்கங்கள் பொருள் அலவே'' (2-177-7)

என்று தெளிவாகச் சுட்டுதல் சித்திக்கத் தக்கது. இதன் விளக்கமே,

''கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டாவிறலின் விளங்கினார் (1-4-8)

எனவரும் சேக்கிழார் பெருமானின் திருப்பாடலாகும். இறைவனை எண்ணி ஏத்தி வழிபடுதலலேயன்றிக் குறியெதிர்ப்பினை நோக்காமையே அருளாவரின் வாழ்க்கைக் குறிக்கோள் என்பது தெளிவு.

திருமுறை ஆசிரியர்கள் சிறந்த சமுதாயத் தொண்டர்கள். புலனழுக்கற்றவர்கள், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய அந்தணாளர்கள். ஆதலின், அவர்தம் பாடல்களில் சமுதாயத் தரப்பிரிவுகளால் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வுகளைக் களைந்து சமதரும சமுதாயத்தை அமைக்க முற்பட்ட சீர்திருத்தச் சிந்தனைகளைக் காண்கிறோம்.

**சமுதாயச் சீர்திருத்தம்**

வடமொழிவாணர்கள் ஏற்படுத்திய வருணப்பாகுபாடு திருமுறை ஆசிரியர்கள் காலத்திலும் காணப்பட்டது. என்றாலும். சிவபரம்பொருளைச் சிந்தனை செய்து வந்தனை புரியும் சமுதாய நிலையில் இனப்பாகுபாடு கடியப்பட்டது. எவ்வுயிரையும் ஒப்பநோக்கும் அருள் உணர்வும் மனிதநேயமுமே திருமுறை ஆசிரியர்களிடம் சிறந்தோங்கிப் பொலிதல் சுட்டத் தக்கது. கவுணியர் குலத்தில் தோன்றிய வைதிக அந்தணராகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசரை 'அப்பரே' என்று அழைத்தனர். திங்களூரில் சிறந்த வைதிகராக விளங்கிய அப்பூதி அடிகள் என்னும் அந்தணப் பெரியார் தன் பிள்ளைகளுக்கெல்லாம் வேளாளராகிய திருநாவுக்கரசரின் திருப்பெயரையே

சூட்டியதுடன் அறச்சாலைகளுக்கும் அவர் பெயரையே சூட்டி உய்திபெற்றார்.

நம்பியாண்டார் நம்பி ஆகிய சிவப்பிராமணர் **திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலை** என்னும் பிரபந்தம் பாடிப் பரவினார். இப்பனுவலில் அப்பரடிகளை,

''பதிகமேழ் எழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்'' (7)

என்றுபோற்றுதல் காணத்தக்கது.

ஆதிசைவராகிய சுந்தரர் பரத்தையர் குலத்தில் தோன்றிய பரவையாரையும் வேளாண் குலத்தில் உதித்த சங்கிலியாரையும் மணந்து இல்லறம் புரிந்தனர்.

திருமூலர்,

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின்'' (2104)

என்று மனிதகுலத்தின் ஒருமைப்பாட்டினையும் ஓரிறைக் கோட்பாட்டினையும் அருமையாக உணர்த்தியுள்ளார். இத்தகைய வரையறுத்த தெளிந்த சிந்தனை ஞானிகள் உள்ளத்தில் மட்டுமே தோன்றுவது. மன்பதைக்கு நெறிகாட்டுவது.

அப்பர் பெருமான் சாதிபேதங்களை வன்மையாகச் சாடியவர். ஈசனுக்கு அன்பில்லாதவர்கள் இனவேறுபாடு பேசுபவர்கள். யாவராயினும் சிவசின்னம் பூண்டவரைக் கண்ட மாத்திரையில் உள்ளம் அன்பினால் உருகி உவந்து உபசரித்து தொண்டுபுரிய வேண்டும் என்று திருக்கன்றாப்பூர் பதிகத்தில் குறித்துள்ளார். ஐந்தாம் திருமுறையில்,

''சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்!
கோத்திர மும்குலமும் கொண்டு என்செய்வீர்?
பாத்தி ரம்சிவம் என்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளுமாற் பேறரே'' (5-60-3)

என்று அறஞ்சான்ற சினத்துடன் கொதித்துரைத்தல் கூர்ந்து நோக்கத்தக்கது. இதே கருத்தினை வேறு வாய்பாட்டினால் மாணிக்கவாசகர்,

''சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு'':
(8-3-15)

என்று கசிந்துரைத்தல் காணலாம்.

சேக்கிழார் பெருமான் நாயன்மார்களுக்கு ஒப்பான நயத்தக்க அருள் உள்ளமும் ஒப்பநோக்கும் உணர்வும் சீர்திருத்தச் சிந்தனையும் ஒருங்கே வாய்ந்தவர். பிறப்பினால் அந்தணர் அல்லாதாரை அவ்வந்தணர்கள் 'ஐயரே' என்று போற்றும் மூன்று நிகழ்ச்சிக்குறிப்புக்களைப் பெரியபுராணத்தில் அமைத்துள்ளார். தாழ்த்தப்பட்ட பாணர் மரபில் பிறந்தாலும் சம்பந்தருடன் தலயாத்திரை சென்று அவர் பதிகப்பாடல்களை எல்லாம் யாழிலிட்டுப் பண்ணுடன் பாடிப் பணிபுரிந்த திரு நீலகண்ட யாழ்ப்பாணரைக் கவுணியராகிய சம்பந்தர் 'ஐயரே' என்று அழைத்தல் குறிப்பிடத் தக்கது. வேடராகிய கண்ணப்பரை ஆதி சைவ அந்தணராகிய சிவகோசரியார் 'ஐயரே' என்று போற்றுதல் சுட்டுதற்கு உரியது. திருநாளைப் போவாராகிய நந்தனாரைத் தில்லைத் தீட்சிதர்கள், ''ஐயரே'' என்று வரவேற்றுப் போற்றுதல் மற்றொரு நிகழ்ச்சியாகும். இத்தகைய குறிப்புக்களை நுணுகி நோக்கின் சோழப் பேரரசில் தலைமை அமைச்சராய்ப் பணியாற்றி ஆன்மீகத் துறைக்குத் திரும்பிய சேக்கிழார் பத்தி அடிப்படையில் பாகுபாடற்ற சமுதாய ஒருமைப்பாட்டினைத் திருமுறை ஆசிரியர்கள் வழி நின்று காணவிழைந்தனர் என்பது புலனாகும். மற்றும் நமிநந்தி அடிகள் புராணத்தில்,

''தேவர் பெருமான் எழுச்சிதிரு
மணலிக் கொருநாள் எழுந்தருள
யாவர் என்னா துடன்சேவித்
தெல்லாக் குலத்தில் உள்ளோரும்
மேவ அன்பர் தாமும்உடன்
சேவித் தணைந்து விண்ணவர்தம்
காவ லாளர் ஓலக்கம்
அங்கே கண்டு களிப்புற்றார்'' (12-27-22)

என்று சேக்கிழார் பாடியிருத்தல் நோக்கத்தக்கது. இத்தகைய கூட்டுவழிபாடு சமுதாய ஒருமைப்பாட்டிற்குப் பெரிதும் உதவியது எனலாம்.

பொருள் புரிந்து கொள்ளாமல் செய்யப்படும் சடங்குகள், போலி வழிபாடு, நடிப்புப் பத்தி முதலியவற்றையும் திருமுறை ஆசிரியர்கள் உடன்படவில்லை. புனித ஆறுகளிலும் கடல் தீர்த்தங்களிலும் முழுகிவிட்டால் பாவம் கழுவப்பெறும் என்ற நம்பிக்கை அப்பர் காலத்தில் இருந்தது. சிவத்தியானம் இன்றி நீராடுவதால் ஒருபயனும் இல்லை. பாவநாசத் திருக்குறுந் தொகையில்,

''கங்கை ஆடிலென் காவிரி ஆடிலென்
கொங்குதண் குமரித்துறை ஆடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே'' (5-99-2)

எனவரும் பாடல் சுட்டுகிறது. இத்தகைய மூடப்பழக்கம் யூதர் களிடமும் நிலவியது. ஜோர்டான் நதியில் குளித்தெழுந்தால் பாபம் போய்விடும் என்று நம்பிய யூதர்களைத் திருத்தும் பாங்கில்,

''யூதர்களே! பரலோகத்தில் இருக்கிற பரமபிதாவின் கருணை உங்களுக்குக் கிட்ட வேண்டுமென்றால் ஜோர்டான் நதியில் குளித்தெழுந்தால் போதாது, நீங்கள் செய்த பாவங்களை எண்ணி நைந்துருகிக் கண்ணீரை ஆறாகப் பெருக்கிஅதில் குளித்தெழுந்தால் பாவமன்னிப்பு கிடைக்கும்''

என்று ஏசுபிரான் கூறிய வாசகம் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.[1]

மேற்சுட்டிய அப்பரின் பதிகத்தில்,

''பட்ட ராகிலென்சாற்றிரங் கேட்கில் என்'' (5-99-3)

''வேதம் ஓதிலென் வேள்விகள் செய்யிலென்'' (5-99-4)

''சாலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தொறும் விதிவழி நிற்கிலென்'' (5-99-5)

''கான நாடு கலந்து திரியிலென்
ஈனம் இன்றி இருந்தவம் செய்யிலென்'' (5 99-6)

''கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்'' (5-99-7)

1. புரட்சிக்காப்பியம் ப. 49-50

''நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவம் செய்யிலென்'' (5-99-8)

என்று போலி மதவாதிகளை இடிந்துரைத்தல் காணலாம். மற்றுமொரு பதிகத்தில்,

''பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே'' (5-99-9)

என்று கபடவேடம் தாங்கியவர்களால் இறைவன் அறியப்படாதவன் என்று அப்பர் அடிகள் குறித்துள்ளார்.

பிறப்பினால் வேறுபாடற்ற சமுதாயத்தைக் காண விழைந்த திருமுறையாசிரியர்கள் பொருளாதார ஏற்றத்தாழ்வினையும் போக்க எண்ணினர். அறவழியில் அவர்கள் போதனை அமைந்தது. இருப்பவர்கள் இல்லாதவர்களுக்கு இயன்ற மட்டிலாவது ஈகை புரிதல் வேண்டும் என்றும் அதுவே இறைவனுக்கு உகப்பானது என்றும் அறிவுறுத்தினர். பசி போக்கும் பேரறத்தை இவர்களும் பேசினர். திருமூலர்,

''ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே'' (250)

ன்று அறம் கூறினார். தன் இனத்தைக் கூவி அழைத்துக் கூடி உண்ணும் காக்கையைப் போல் மாந்தர்கள் பகிர்ந்து உண்ணுதல்வேண்டும் என்ற திருக்குறள் கருத்தினைத் திருமூலரும் வலியுறுத்தினார். இன்னார் இனியார் என்று பேதம் விசாரியாது பிறருக்குக் கொடுத்துப் பின்னரே உண்ணுதல் வேண்டும் என்பது நல்லறம். இரப்பவர்க்கு இல்லை என்னாது ஈதல் வேண்டும் என்பதற்காகவே இறைவன் பொருளை வழங்குகிறான். அதனை நன்னெறியில் செலவிடாது மறைத்து வைக்கும் பாவிகளுக்கென்றே கொடிய நரகங்களை உண்டாக்கியிருக்கிறான் என்று அப்பர் பெருமான் மக்களுக்கு அறிவுரை பகரும் பாங்கில் ஈதலறத்தை வலியுறுத்திக் கூறியுள்ளார். (4-38-10)

யாக்கை நிலையாது, இளமை நிலையாது என்று உடலைப் பேணாமல் இருப்பதைத் திருமூலர் ஒத்துக் கொள்ளவில்லை. அவர் சிறந்த சிவயோகி. ஆதலின், உடல்வளமாக இருந்தால்

தான் யோகம் சித்திக்கும் என்பது அவர் கருத்து. எனவே தான்

''உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே (725)

என்று உடல்நலம் பேணுதற்கு உபாயம் சொல்லிவைத்தார். இதனால் நிலையாமை என்னும் உண்மையினை அவர் உணர வில்லை என்றோ மறுத்துவிட்டார் என்றோ எண்ணுதல் கூடாது. நிலையாமை என்பது ஓர் உண்மை. அதற்காக மனம் மடிந்து அயர்ந்து தளர்ந்து விடுதல் கூடாது என்பதே திருமுறை ஆசிரியர்கள் திருவுள்ளம். திருமந்திரம் உள்ளிட்ட திருமுறை களில் நிலையாமை பற்றிய குறிப்புடைய பாடல்கள் யாவும் மாந்தரை விழிப்படையச் செய்து, இருப்பதற்குள் எய்துதற்குரிய இலக்கினைப் பெறுதற்குரிய முயற்சிகளை மேற்கொள்ளுதற்கு இடித்துரைத்து நெறிப்படுத்துவன என்று கருதுதல் வேண்டும்.

எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படை அறியாமையும் கல்லா மையும் ஆதலின் கல்வியையும் அறிவினையும் ஒருவன் கட்டாயம் பெறுதல் வேண்டும் என்பது திருக்குறளை உள்ளிட்ட அறநூல் களின் முடிபாகும். திருமுறைகளில்,

''கல்லா நெஞ்சில்
நில்லான் ஈசன்'' (3-40-3)

''கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர்'' (4-43-8)

''கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக்
கற்றோர்கள் உற்றோரும் காத வானை'' (6-84-8)

''கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்'' (8-4-38)

''கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை'' (9-5-2)

என்றுவரும் பகுதிகள் கல்வியின் முதன்மையினை நன்கு உணர்த் துவன. திருமந்திரத்தில்,

''ஞானம் உண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே''
(242)

என்று நாட்டின் வளத்திற்கும் நலத்திற்கும் அறிவை எங்கும் பரவச்செய்தலின் இன்றியமையாமையினை நன்கு அறிவுறுத்தி யுள்ளார் திருமூலர்.

இங்ஙனம் பொதுவான விழுமிய கருத்துக்களை மாந்தர் மேம்பாட்டிற்கு வரையறுத்து வழங்கும் திருமுறைகள் அறங்களைக் கூடுதலாக வலியுறுத்துதல் கூர்ந்து நோக்கத்தக்கது. ஒருசில அறக்கருத்துக்களை இங்குத் தொகுத்து நோக்குவோம்.

**அறக்கருத்துக்கள்**

பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தின் பல அதிகாரத் தலைப்புக்கள் திருக்குறள் அதிகாரத் தலைப்புக்களுடன் ஒத்துள்ளன. திருவள்ளுவர்போல் திருமூலரும் சிறந்த அறவோராகக் காட்சி தருகிறார். வாழ்வியலுக்குப் பயன்தரும் சீரிய அறங்கள் பலவற்றைப் பகர்ந்துள்ளார். முதலில் அடக்கத்தினைக் குறித்து அவர்கூறும் கருத்தினைக் காண்போம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகள் புறப் பொருள்களை நோக்கிச் சென்று உலகியல் அறிவினைப் பெறுதற்கு உதவுகின்றன. எனின், பொருந்தாத பொருள்களில் அழுந்திவிடின் அப்பொறிகள் தீநெறிக்கு மனிதனை இழுத்துச் சென்றுவிடும். எனவே, ஐம்பொறிகளையும் மனிதன் தன் ஆட்சிக்கீழ் அடக்கி வைத்திருத்தல் வேண்டும். இக்கருத்தினை வலியுறுத்தற் பொருட்டு ஓர் உவமையினைத் திருமூலர் எடுத்துக்காட்டுகிறார். நான்கு கால்கள், ஒருதலை ஆகிய ஐந்துறுப்புக்களை உடைய ஆமை இடர்வரும்வழி உள்ளிழுத்துக் கொள்ளுதல்போல் அறிவுடைய ஒருவன், தீநெறியில் செல்லும் ஐம்பொறிகளையும் தனக்குள் இழுத்துக் கொள்ளுதல் (Withdrawal senses) கட்டாயம் வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

''ஒருமையுள் ஆமைபோல் உள்ஐந் தடக்கி'' (133)

என்பது திருமந்திரம். புறஉலகில் சஞ்சரிக்கும் பொறிகளைப் புறத்தே போக ஒட்டாது உள்ளிழுத்து உள்முகமாகச் செலுத்தப் பழகுதல் யோகநெறி நிற்பார் மேற்கொள்ளுதற்குரிய சாதனங்களில் ஒன்றாகும். இப்பழக்கத்தினை ''பிரத்தியாகாரம்'' என்று யோகசூத்திரம் செய்துள்ள பதஞ்சலி முனிவர் கூறியுள்ளார். திருமூலர்.

''நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி

மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோடு எண்மரும் ஆமே'' (67)

என்று பதஞ்சலிமுனிவரைத் தன் ஒருசாலை மாணாக்கராகக் குறிப்பிடுதல் இங்கு நோக்கத்தக்கது. யோகநெறி சிந்துவெளி நாகரிக காலத்தின் அளவிற்குத் தொன்மை வாய்ந்தது. தமிழகத்திலிருந்த பதஞ்சலி முனிவர் வடமொழியில் யோக சூத்திரம் செய்தமையின் நோக்கம் அந்நூலின் கருத்து இந்திய நாடெங்கும் பரவுதல் வேண்டும் என்பதேயாகும். வடமொழியில் பாணினியின் இலக்கண நூலிற்குப் பாடியம் செய்தவரும், யோக சூத்திரம் இயற்றியவரும், மருத்துவ நூலுக்கு உரைகண்டவரும் எனப் பதஞ்சலி மூவர் சுட்டப்பெறுகின்றனர். சொல்லின் தூய்மையினைக் காத்தல் இலக்கண உரைநூலின் நோக்கம் என்றும் உள்ளத்தின் தூய்மையினைக் காத்தல் யோகநூலின் நோக்கம் என்றும் உடலின் நலத்தைப் பேணுதல் மருந்துநூலின் நோக்கம் என்றும் எண்ணுதற்கு இடம் உண்டு. இம் மூவரும் ஒருவரே என்றும், வேறுவேறானவர் என்றும் வடமொழி இலக்கிய வரலாற்றாசிரியர்கள் கருதுவர். எனின், யோக சூத்திரம் செய்தவர் கி.பி. 4, 5-ஆம் நூற்றாண்டவராக இருத்தல் கூடும். நீண்ட காலம் வாழ்ந்த திருமூலர் இவர் காலத்தவராதல் வேண்டும்.

மேற்சுட்டிய ஆமைபோல் ஐந்தடக்கும் பயிற்சியைத் திருவள்ளுவரும் சுட்டியுள்ளார். பகவத்கீதையிலும் அக்கருத்து காணப்படுதலின், பொறி அடக்கமே சிறந்தஅறமாகச் சான்றோர் களால் வகுத்துரைக்கப் பெற்றுள்ள உண்மை தெளிவாகும்.

உள்ளத்தைப் பற்றி இருக்கும் தீய உணர்வுகளையும் அறியாமை இருளையும் அதுவே விலக்கி, சிறந்த சிந்தனைகளாலும் நல்லறிவு சார்ந்த எண்ணங்களாலும் மனத்தை நிறைத்தல் வேண்டும் என்பது திருமூலர் வழங்கும் மற்றொரு அறிவுரை யாகும். ''அழுக்கினை ஓட்டி அறிவை நிறைமீர்'' (254) என்பது அவர்தம் அருள்மொழி. அங்ஙனம் அறிவினைப் பெருக்கிக் கொள்வதற்குரிய வழிமுறைகளையும் குறித்துள்ளார். நாள் தோறும் நல்ல நூல்களைப் படித்தல் வேண்டும். நல்லுரை களையும் அரிய சிந்தனைகளையும் சான்றோர் வாய்க் கேட்டல் வேண்டும். கேட்டவற்றைத் தெளிந்து உணர்ந்து நெறிநிற்றல் வேண்டும் என்பது திருமூலரின் எண்ணம். இவ்வுண்மையினை,

''ஓதுமின் கேள்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே'' (301)

எனவரும் திருமந்திரப் பாடல் தெளிவுறுத்துகிறது.

கிரேக்கஞானி 'Know Thyself' என்று கூறியதைப் பெரிதாகப் பேசுவர். எனின், திருமூலரும், **''தன்னை அறிவது அறிவாம்''** (23.8) என்று அதே கருத்தினை இன்னும் அழுத்தத்துடனும் தெளிவுடனும் கூறியிருத்தலை அன்னார் பார்த்திருப்பின் தமிழகத்திலும் அத்தகைய ஞானி தோன்றியுள்ளார் என்ற உண்மையினை உணர்ந்து மகிழ்வார்.

நல்லாரிணக்கத்தை வலியுறுத்தும் திருமூலர், ''பெரியாருடன் கூடல் பேரின்பமாமே'' (545) என்று அறிவுறுத்துகின்றார். அன்புருவமாக இறைவனைக் காண்கிறார் சிவயோகியராகிய திருமூலர். எனவேதான், ''அன்பே சிவம்'' (270) என்று கூறுகிறார். புறமதத்தவர் ''God is Love'' என்று கூறுவர். எனின் திருமூலர் அன்புக்கு முதன்மைதந்து 'Love is God' என்ற பொருண்மையில் மொழிந்திருத்தல் எண்ணி இன்புறத்தக்கது. எல்லா உயிர்களுக்கும் அன்பு செலுத்துவதன் வாயிலாக ஒருவன் அன்புருவமான இறைவனை உணர்ந்து இன்புறுதல் இயலும் என்று எண்ணினார்.

யோகநெறி நின்ற திருமூலர் எட்டுறுப்புக்களை உடைய அந்நெறியில் முதற்கண் சுட்டப்பெறும் இயமம், நியமம் என்ற உறுப்புக்களை விளக்கும் பொழுது விழுமிய நடைமுறை அறங்களை வலியுறுத்திக் கூறியுள்ளார். முதலில் இயமத்தினைச் சுட்டுமிடத்து,

''கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய
வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கள்காமம்
இல்லான் இயமத் திடையில்நின் றானே'' (554)

என வரையறுத்துக் கூறியுள்ளார். இமயம் என்ற சொல் பொதுவாக விலக்கத்தக்கவற்றையும் எதிர்மறை அறங்களையும் உணர்த்தும் ஒரு யோகக் குறியீடு, கொல்லாமை, பொய் கூறாமை, கள்ளாமை, மாசின்மை, கள்ளுண்ணாமை, காமமின்மை என்பன ஆறும் எதிர்மறை வாசகத்தால், உணர்த்தப் பெற்ற அறங்களாகும். எனின், அடக்கமுடைமை, நடுவுநிலைமை, பகுத்துண்ணுதல் என்பன உடன்பாட்டு அறங்கள் ஆகும். பெரும்பாலும் நியமம் என்ற இரண்டாவது படிநிலையில்தான் விதிமுறைகள் அறங்கள் விளம்பப்பெறுதல் உண்டு. எனின், திருமூலர் இருவகை அறங்களையும் இயமம், நியமம் ஆகிய இருவகை உறுப்புக்களை விளக்கும் பாடல்களில்

விரவியே கூறியுள்ளார் என்பது நோக்கத்தக்கது. நியமத்தை விளக்கும்பாங்கில்,

> ''தூய்மை அருள்ஊண் சுருக்கம் பொறை செவ்வை
> வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை......''
> (555)

> ''தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
> சிவன்தன் விரதமே சித்தாந்தக் கேள்வி
> மகம்சிய பூசைஒண்மதி சொல்லீரைந்து
> நிவம்பல செய்யின் நியமத்தன் ஆமே'' (555)

என்ற பாடல்களைத் திருமூலர் வழங்கியுள்ளார். சிறந்த சைவசித்தாந்தியாகிய திருமூலர் சிவநெறியாளர் மேற்கொள்ள வேண்டிய நியமங்களையும் உடன் ஓதியுள்ளார். இப்பாடல்களில் இடம்பெறும் திரிகரணத் தூய்மை, மட்டுப்பட்ட உணவுப் பழக்கம், பொறையுடைமை, செம்மை, வாய்மை, நன்னிலை காத்தல் முதலியவற்றை யாவரும் பின்பற்றுதற்குரிய அறங்களாகக் கொண்டொழுகுதல் பயன் விளைக்கும்.

எனவே, திருமூலர் தெளிவுறுத்தியுள்ள அறங்கள் யாவும் மன்பதைப் பொதுநோக்கில் யாவர்க்கும் என்றும் பின்பற்றி நடத்தற்குரியவை என்பதும் உடல், உள்ளம், உணர்வு, உயிர் அனைத்திற்கும் ஆற்றல் அளிப்பன என்பதும் அறிதற்குரியன.

திருமுறைகள் அனைத்திலும் பொறிக்கப் பெற்றுள்ள நீதிகளையும் அறக்கருத்துக்களையும் சீலங்களையும் தொகுப்பின் தனிப்பெரும் நூலாகவே உருப்பெறும். ஆதலின் ஓரிரு திருமுறைகளில் பொதிந்துள்ள ஓரிரு அறக்கருத்துக்களையே இங்குச் சுட்டுதல் பொருத்தமாக அமைகிறது. திருநாவுக்கரசர் நீண்டகாலம் வாழ்ந்த மெய்ஞ்ஞானி. சமண சமயம் சார்ந்து அந்நெறிக்குரிய ஆகமங்களையும் நூல்களையும் பயின்று அறிவு பெற்றுத் தலைவராகத் திகழ்ந்தவர். பின்னர் இறைவன் அருளினால் சிவநெறிக்குத் திரும்பியவர். ஆதலின். சமணநெறி சைவநெறி ஆகிய இருபெரும் நெறிகளிலும் அவர்க்குப் பெரும்புலமையும் நன்னெறி காணும் கூர்த்த மதிநுட்பமும் அமைந்திருத்தல் இயல்பே. அவர் அருளிய பதிகங்களில் முன்னை நிலைக்கு இரங்கிப் பேழ்கணித்துக் கசிந்துருகிப் பாடிய பாடல்கள் நமக்குச் சிறந்த நீதிகளைப் புகட்டுவன. திருவாரூரில் பாடிய பழமொழிப் பதிகத்தில் (4-5-1-10),

''ஆருரைக்,
கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக் காய்
கவர்ந்த கள்வ னேனே''

''ஆரூரர்தம்,
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்
பின் முயன்ற வாறே''

''ஆரூரர்தம்,
அருகியிருக்கும் விதியின்றி அறம்இருக்க மறம்
விலைக்குக் கொண்ட வாறே''

''ஆரூரரைப்
பண்டெலாம் அறியாதே பனிநீராற் பாவைசெயப்
பாணித் தேனே''

''ஆரூரரை
என்னாகத் திருத்தாதே ஏதன்போர்க் காதனாய்
அகப்பட் டேனே''

''ஆரூரரை,
எப்போதும் நினையாதே இருட்டறையின்
மலடுகறந்து எய்த்த வாறே''

''.........விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே''

''.........பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்த வாறே''

''.........தவமிருக்க அவம்செய்து தருக்கி னேனே''

''கண்டம்,
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்புகடித்
தெய்த்த வாறே''

எனவரும் பகுதிகள் ஊன்றி நோக்கத்தக்கவை. இவற்றில் இடம்பெறும் முதுமொழிகள் அப்பரடிகளுக்கும் பல நூற்றாண்டு களுக்கு முன்பிருந்தே தமிழ்ச் சமுதாயத்தில் வழங்கி வந்துள்ளவை. நல்லதைக் கைவிடுத்து அல்லதைச் சார்தல் அறம் அன்று என்ற பேருண்மையினைத் தன்னனுபவத்தின் பயனாய்ப், பழமொழிகளின் வாயிலாகப் பழுத்த ஞானியும் தொண்டரும் ஆகிய அப்பர் பெருமான் அறிவுறுத்துதல்

எண்ணி இன்புறத்தக்கது. யாவராலும் மேற்கொண் டொழுகுதற்குரிய அறவுரை இவை எனலாம்.

அப்பர் பெருமான் வேளாண்குடியில் தோன்றியவர். ஆதலின் அவர் குடிப்பெருமைக்கு ஏற்ற அனுபவப் பாடல் ஒன்றினைத் தந்துள்ளார். அதன் பொருண்மையினை இவண் காண்போம்.

வயலில் நன்றாக உழுது நிலத்தைப் பண்படுத்தி விதைத்துப் பயிரை வளர்க்கிறான் வேளாளன். பயிர் வளரும்பொழுது உடன் வளரும் களைகளைத் தெரிந்து அவற்றைக் களைந்து, உரிய காலத்தில் தவறாது நீர்பாய்ச்சி, வேலி கோலிக் காத்துவரின் நல்ல விளையுளைப் பெறுவான். அங்ஙனமே சிவகதி என்னும் விளைவினைப் பெறுதற்கு ஒருவர் மேற் கொள்ளுதற்குரிய முயற்சிகளையும் பணிகளையும் எண்ணிப் பார்க்கிறார்" வாகீசர். அதன்பயனாக,

> ''மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும்
> வித்தை வித்திப்
> பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறை
> யெனும் நீரைப் பாய்ச்சித்
> தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்
> செம்மையுள் நிற்ப ராகில் சிவகதி விளையு மன்றே''
> (4-76-2)

என்றபாடல் எழுகிறது. உண்மையான அருளாளர்க்கு உகந்த பண்புகள் ஆகிய அறஉணர்வுகள் இப்பாடலில் அணிநலம் தோன்றப் புலப்படுத்தப் பெற்றுள்ளன. சிந்தையும் சொல்லும் செயலும் முரண்படாத செவ்விய நிலையாகிய மெய்ம்மை என்ற உழவினை மனிதன் என்ற வயலில் உழுது பண்படுத்து தல்வேண்டும். ஈசன்பால் காட்டும் விருப்பு என்னும் வித்தினை விதைத்தல் வேண்டும். உண்மை அன்பாகிய பத்திப் பயிர்க் கிடையே தலைதூக்கி முற்படும் பொய் என்கிற களையை வேரோடு பிடுங்கி எறிதல் வேண்டும். பொறையுடைமை ஆகிய புலனடக்கம் என்ற நீரைப்பாய்ச்சுதல் வேண்டும். தகவு என்னும் சால்பு வேலியை அமைத்துத் தன்னைத்தானே கண் காணித்துச் செம்மையுற ஒழுகுதல் வேண்டும். இங்ஙனம் சீரிய செவ்விய ஒழுக்கம் மேற்கொள்ளின் மனிதவயலில் பேரின்பம் ஆகிய சிவகதி என்னும் விளைச்சலை ஒருவன் அடைய முடியும் என்று அறிவுறுத்துகிறார் அப்பரடிகள்.

ஒருவனுக்குள் இருக்கும் தவிரத்தக்க பொல்லாத குணங்களைப் போக்கி நல்லியல்புகளை முறையாக வளர்த்து வருவதன் வாயிலாகப் பேரின்பப்பேறு கிடைக்கும் என்பதே அவர்தம் திருவுள்ளம். ஆதலின் இன்பம் புறத்தே இருப்பதாக எண்ணி அலைய வேண்டாம். ஒருவன் உள்ளத்தில் நிறைந்திருப்பது, அதனைப் பெறுதல் என்பது உணர்ந்து திளைத்தலே ஆகும்.

இப்பாடலில், தம்மையும் நோக்கிக் காணுதல் என்பது பொறி, புலன்கள், அந்தக்கரணங்கள் ஆகிய கருவிகளினின் றும் ஆன்மாவாகிய தான் வேறு என்னும் காட்சியைத் தரிசித்தல் ஆகும். செம்மையுள் நிற்றல் என்பது கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, இரக்கம், அறிவு, மெய்ம்மை, தவம், அன்பு என்னும் எண்வகை மலர்களினால் உள்முகமாக மனத்தவிசில் வீற்றிருக்கும் ஈசனை வழிபட்டுச் செம்மையுற ஒன்றுதல் ஆகும். இங்ஙனம் ஒருவர் ஆற்றும் அகவழிபாடு சரியை நெறியில் ஞானமாக அமைந்து சிவகதியெனப்படும் பேரின்பப் பேற்றினைப் பயக்கும் என மெய்கண்ட சாத்திர வழி நின்று விளக்கம் கூறுதலும் பொருத்தமுடையதே.

அப்பரடிகள் அருளிச் செய்த இப்பாடலின் பொருண்மையும் கி. மு. 6ஆம் நூற்றாண்டில் ஞான ஒளி வீசிய புத்தர் பெருமானின் பொன்மொழிச்சாரமும் பெரிதும் ஒத்திருத்தல் காணத்தக்கது. திரிபிடகங்களில் நடுவண் நின்ற சுத்தபிடகத்தில் சுத்தநிபாதம் என்றபகுதியில் காசி பாரத்துவாசச் சுத்தம் என்ற இயலில் இடம்பெறும் புத்தரின் பொருளுரையினை **மோனியர் வில்லியம்சு** என்னும் அறிஞர் பின்வருமாறு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார் :

"I do plough and sow and immortal fruit (Amata-(Amrta); my plough is wisdom (panna); my shaft is modesty; my draught - ox, exertion; my goad, earnest meditatien (sati); my mind, the rein,

Faith (saddha) in the doctrine is the sead I sow; claaning to life is the weed I root up; truth is the destroyer of the weed; Nirvana and deliverance from misery are my harvest."[2]

இத்தகைய அனுபவ மொழிகள், ஞானிகளிடையே வேறுபாடு காணப்படுதல் அரிது என்ற உண்மையினை உணர்த்துதல்

---

2. Buddhism In relation to Brahmanism and Hinduism p. 144

உறுதி. பௌத்த நெறியில் சிவகதியாகிய வீடுபேறு நிப்பாணம் என்று பாலிமொழியிலும், நிர்வாணம் என்று வடமொழியிலும் குறிக்கப்பெறும். தம்மபதம் 'நிப்பாணம் பரமம் சுகம்' என்றும் மணிமேகலை, ''பிறவார் உறவது பெரும்பேரின்பம்'' என்றும் சுட்டும் பகுதிகள் இங்கு எண்ணுதற்குரியவை. அப்பர் பெருமான் சுட்டியுள்ள ''சிவகதி'' என்ற குறியீடு சமண நூல்களிலும் காணப்படுவது. பாகத மொழியில் எழுதப்பட்ட சமண ஆகமங்களிலும் மோசைம் 'சிவம்' என்று குறிக்கப் பெற்றது.[3] சிலப்பதிகாரத்தில்,

> ''சினவரன் தேவன் **சிவகதி நாயகன்**
> சங்கரன் ஈசன்'' (10 : 180-186)

என்று அருக தேவனைச் சிவகதிநாயகன், என்றும் சங்கரன் ஈசன் என்றும் சாரணர் போற்றினர். சிவகசிந்தாமணி முதலிய தமிழ்ச் சமண நூல்களிலும் சிவகதி வீடுபேற்றினைச் சுட்டுதல் காணலாம். இன்னோரன்ன காரணங்களினால் சைவம் சமணம் என்பன தொடக்கக்காலத்தில் ஒரு மூலத்தினின்றும் கிளைத்திருத்தல் கூடும் என்று கருதுதற்கு இடம் தருகிறது.

இலக்கண நூல்கள், அணிநூல்கள், காப்பியங்கள், யாவும் வலியுறுத்திக்கூறும் உறுதிப் பொருட்கோட்பாடினைத் திருமுறை ஆசிரியர்கள் நன்றாக அறிந்தவர்கள். வாழ்வியல் முழுமை பெறுதற்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளையும் ஒருவர் எய்துதல் வேண்டும் என்ற குறிக்கோளினைத் தம் பாடல்களில் அருளாளர்கள் குறித்துள்ள பாங்கினைச் சற்று உற்றுநோக்குதல் சாலும்.

### உறுதிப் பொருள்

திருஞானசம்பந்தர் வாழ்க்கைக்கு உறுதி பயக்கும் நாற்பால் கருத்துக்களையும் முக்கட் செல்வராகிய சிவபிரானே மக்கட்குப்போய்ச் சேரும் பொருட்டு அந்தணர்கட்குப் போதித் தருளினான் என்று குறித்துள்ளார். திருமுதுகுன்றப் பதிகத்தில்,

> ''சுழிந்த கங்கை தோய்ந்த திங்கள் தொல்லரா நல்லிதழி
> சழிந்த சென்னிச் சைவவேடந் தாளிணைத்து ஐம்புலனும்

---

3. **தமிழும் தத்துவமும்** ப. 91

அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம், பொருள்,
இன்பம், வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேய முதுகுன்றே''
(1-53-6)

எனவரும் பாடல் காணத்தக்கது. அறம் முதலாக எண்ணப் பெறும் நாற்பொருளையும் விரித்துக் கூறுவதே தமிழ்நான்மறை என்ற கருத்தும் அறிஞர்களிடையே உண்டு. இப்பாடலில் கூட்டப்பெறும் அந்தணர்கள் சிறந்த தவமுனிவர்கள். சைவ வேடம் தரித்தவர்கள். தமது தாள்களைப் பதுமம் முதலிய ஆசனங்களில் இருத்திப் பிராணாயாமம் முதலிய யோகப் பயிற்சியினால் புலன்களின் சேட்டைகளை நீக்கியவர்கள். இளகிய சிந்தையினர். எவ்வுயிர்க்கும் இரக்கம் காட்டுபவர். இத் தகைய பக்குவ ஆன்மாக்களுக்கு ஈசன் உறுதிப்பொருள் நான்கினையும் உபதேசித்ததன் நோக்கம், அப்பொருள் அவர்கள் வாயிலாக மக்களிடையே பரவுதல் வேண்டும் என்பதேயாகும். சிவயோகியராகிய அந்தணர்க்கு மெய்ப் பொருளைப் புகட்டும் ஈசனும் யோக மூர்த்தம் கொண்டு தென்முகக் கடவுளாய் ஆலின் கீழிருந்து அறம் முதலிய உறுதிப் பொருளை உயிர்களின் ஈடேற்றத்தின் பொருட்டு உபதேசித் தருளினார் என்பது சைவத்திருமுறைகளின் சாரம் ஆகும். மாணிக்கவாசகப் பெருமான்,

''அருந்தவருக் காலின்கீழ் அறம் முதலாய் நான்கினையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ!
அருந்தவருக்கு அறம்முதல்நான் கன்றருளிச்
செய்திலனேல்
திருந்தவருக்கு உலகியற்கை தெரியாகாண் சாழலோ''
(8-12-20)

என்று இசைத்தல் மேலும் ஊன்றி நோக்கத்தக்கது. உலகி யற்கை என்பது உலக மக்களின் இயல்பாகிய ஒழுக்க நெறி யினைக் குறிப்பது. அவ்வியற்கை அறவொழுக்கம், பொரு ளொழுக்கம், இன்பவொழுக்கம், வீட்டொழுக்கம் என்று

ஒன்றற்கொன்று தொடர்புடைய நால்வகைப்படும். இந் நான்கையும் ஆசிரியக் கோலம்பூண்டு தவத்தோர்களாகிய அந்தணர்கட்கு ஈசன் போதிக்கவில்லையெனில், உலகியல் செம்மையுறாது நிலைகுலைதல் உண்டு. ஆதலின், நால்வகை உறுதிபயக்கும் ஒழுக்கங்களையும் உயிர்கள் பின்பற்றி ஒழுகி முழுமையுற்று முடிவில் இன்பமும் எய்துதற்குரிய நெறிகளாக இவற்றை இறைவன் வழங்கியருளினான் என்பது மாணிக்க வாசகர் திருவுள்ளம்.

நம்பியாண்டார் நம்பி ஆளுடைய பிள்ளையார் திரு வந்தாதியில்,

''நிதியுறு வார்அறன் இன்பம்வீ
டெய்துவர் என்னவேதம்
துதியுறு நீள்வயல் காழியர் கோனை'' (11-34-69)

என்று பரவுதல் பார்க்கத்தக்கது. செய்யுளாதலின் உறுதிப் பொருள்களை நிரலே கூறாது முதலில் பொருளினையும் பின்னர் அறம், இன்பம், வீட்டினையும் சுட்டினார். காழியர்கோன் ஆகிய திருஞானசம்பந்தப் பெருமானைச் சிறப்பித்துப் பாடும் நம்பியாண்டார் நம்பி, அவரைப் போற்றுவார் நால்வகைப் பொருளையும் பெறுவர் என்று இசைத்துள்ளார்.

பன்னிரண்டாம் திருமுறையில்,

''அறம்பொருள் இன்ப மான
அறநெறி வழாமல் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற
வையகம் காக்கும் நாளில்'' (1-3-17)

என்று சேக்கிழார் செப்புதல் காணத்தக்கது. அனபாய குலோத்துங்கனின் வழி முதல்வனாக மதிக்கப்பெறும் மனுவேந் தனின் ஆட்சியின் சிறப்பினை இப்பாடல் சுட்டுகிறது. அறமேயன்றிப் பொருள். இன்பம்கூட அறநெறியினின்றும் வழுவாமல் ஈட்டப்பெறுதல் வேண்டும் என்ற தொன்னெறியைக் கடைபிடித்துத் தீமைகளைக் களைந்து மற்ற மன்னர்கள் யாவரும் மதித்துப் போற்றும் வகையில் தனக்குரிய நிலத்தைப் பரிபாலனம் செய்தான் மனுச்சோழன். இப்பாடலில் முப்பால் மட்டுமே மொழியப் பெற்றுள்ளது. இது சங்ககால மரபினை

நினைவூட்டுவது. தொல்காப்பியர், ''அற முதலாகிய மும்முதற் பொருள்'. (பொருள். நூ.) எனக் கூறுதல் இங்கு எண்ணத் தக்கது.

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் ஆகிய பண்டைத்தமிழ்ப் பனுவல்களில் அறம், பொருள், இன்பம் ஆகிய உறுதிப்பொருள் மூன்று மட்டுமே உணர்த்தப் பெற்றன. எனின், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், நம்பியாண்டார் நம்பி பாடல்களில் இம்மூன்றுடன் வீடும் சேர்த்து நாற்பொருள் உணர்த்தப் பெற்றமை சிந்திக்கத்தக்கது. வாழ்க்கையில் பூரணத்துவம் (Perfection) பெறுதல் என்பதே மனிதனின் இறுதிக் குறிக்கோள். மனிதன் பூரணத்துவம் அல்லது முழுமை பெறும் முறையினை விளக்குவதே தமிழ்ச் சான்றோர்கள் வகுத்துக் காட்டிய முப்பால், நாற்பால் கொள்கையில் நோக்கம் ஆகும். வடமொழி நூல்களில் கூறப்படும் திரிவர்க்கம், சதுர்வர்க்கம் என்ற கோட்பாடு தமிழ்நூல்களில் இடம்பெறும் கோட்பாட்டுடன் அடிப்படையின் வேறுபாடு கொண்டது என்ற உண்மை **திருக்குறள் கூறும் உறுதிப்பொருள்** என்ற நம் நூலில் சுட்டப் பெற்றது. அங்குச் சுட்டப்பெறாத ஒரு கருத்தினை இங்குக் கூறுதற்கு முற்படுகிறேன்.

மனிதனுக்குப் பலவகையான தேவைகள் உள்ளன. தேவைகள் எல்லாம் நிறைவு செய்யப் பெற்றுவிட்டால் ஆசைக்கு இடம் இல்லை. ஆசை, அவா, வேட்கை என்பனவே பிறவிக்கு வித்தாகப் பல்வகைச் சமயங்களிலும் பேசப்படுவன. இவை யனைத்தும் தேவைகள் யாவும் பூர்த்தி செய்யப்பெற்ற நிலையில் தாமே மறைந்தொழிவன. இவை நீங்கிய நிலையில் மனிதன் உணரும் மனநிறைவே பேரின்பமாகக் காட்சிதரும். மனிதனுக்கு ஏற்படும் தேவைகள் நான்காகும், அவற்றை நிரப்பும் வாயில் களும் நான்காகும். அந்நான்கனையும் ஒவ்வொன்றாக நிரலே காண்போம்.

முதலில் மனிதனின் உடலைப் பற்றிய தேவைகள் உள்ளன. உடலைப் பேணுதற்கும் நல்லுணவு கொள்ளுதற்கும் நன்கு உடுத்திக் கொள்ளுதற்கும் சுகாதாரச் சூழலில் வாழ்வதற்கும் பல இடங்களுக்குப் போய்வருதற்கும் பொருள் தேவைப்படுகிறது. எனவே, உடல்தேவைகளாகிய (Physical requirements) உணவு, உடை, உறையுள், ஊர்தி என்பன நிறைவு பெறுவதற்குப் பொருள் என்ற உறுதிப்பொருளை ஒருவன் பெற்றாக வேண்டும். அறநெறியில் வழுவாது ஈட்டப்படும் பொருளையே நீதி நூலாசிரி

யரும் திருமுறையாசிரியரும் பொருளாகப் போற்றினர். எனவே, முறையோடு ஈட்டும் பொருளினைப் போதிய அளவு பெறுவதால் உடலியல் நிறைவு அல்லது பௌதிகப் பூரணத்துவம் (Physical perfection) ஒருவன் அடைய முடிகிறது.

இரண்டாவது தேவை உணர்வைப் பற்றியது. மனிதன் உணர்வுள்ளவன்; உணர்வு இல்லாத சடம் அல்லன், உணர்வுகள் ஒழுங்குறுத்தப் பெறுதற்கு இன்பம் என்ற உறுதிப்பொருள் தேவைப்படுகிறது. இன்பம் என்பது முதன்மைத் தேவை. நால்வகை உறுதிப் பொருள்களினிலும் இன்பம் ஒன்றே மனிதர்க்கு மட்டுமன்றி எல்லா உயிர்களுக்கும் பொதுவாக அமைவது. மற்ற உயிரினங்கள் அறம், பொருள், வீடு என்ற மூன்றிலும் முயலா விடினும் இன்ப முயற்சியை உடையவை. எனவேதான் தொல்காப்பியர்,

''எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்''

(தொல். பொருள் நூ. 219)

என்று இலக்கணம் வகுத்தனர், உணர்ச்சித் தேவைகளை (Emotional needs) அறநெறி வழுவாமல் ஒருவன் நிறைவுசெய்து கொள்ளுதல் வேண்டும். இன்பத்திற்கு உரிய வாயில்களாகத் தன்மனை. பிறன்மனை, பரத்தை என்ற மூன்றிடங்கள் கூறப் பெறினும், பிறன்மனை நோக்காமையினைப் பேராண்மைமிக்க அறம் என்றும், பொருட்பெண்டிர் தொடர்பினால் மிடியும் நோயும் வருதலின் தள்ளத்தகுவது என்றும், தன்மனையாளை மருவிப் பெறுவதே இன்பம் என்றும் தமிழ்ச் சான்றோர்கள் வரையறை செய்தனர். எனவே, இன்பம் என்ற உறுதிப் பொருளை எய்துவதன் வாயிலாக உணர்வுத்தேவை முழுமை பெறுகிறது (Emotional perfection) எனலாம்.

மூன்றாவது தேவை உள்ளத்தைப் பற்றியது. உள்ளம் என்பதை மனம் என்றும் கூறுவர். அகக்கருவியாக எண்ணப் பெறும் மனம் படைத்த காரணத்தினால்தான் மனிதன் என்று அழைக்கப்படுகிறான். செடி, கொடிகள், மரங்கள் என்பன வற்றிற்கு வேர் இருப்பதுபோல், மனிதனுக்கும் மனம் உள்ளது. வேர் கெட்டுவிட்டால் தாவரங்கள் கெட்டுவிடுதல் போல், மனம் கெட்டுவிடின் மனிதன் கெட்டுவிடுவான். மனிதன் வீணாகாமல் இருத்தற்கு மனத்தைக் காத்துக் கொள்ளுதல் முதன்மையாகும்.

இதுநல்லது, இது கெட்டது: இது தக்கது. இது தகாது என்று பகுத்தறிந்து நல்லதையும் தக்கதையும் சார்ந்து நடப்பதன்மூலம் ஒருவன் மனத்தைக் காத்துக் கொள்ளுதல் இயலும். திருவள்ளு வர், ''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'' என்று அறம் என்ற பண்பிற்கு இலக்கணம் கூறியுள்ளார். மாசற்ற மனம்தான் அறப்பயிர் தழைப்பதற்குரிய வயலாகும். அறத்தகுதிப்பாடு (Ethical preparation) ஒருவரின் ஆன்மீக வாழ்க்கைக்கு நிலைக் களன் ஆகும். மனந்திருந்துதல், செம்மை பெறுதலினால் புதுப் பொலிவு பெறும். மாணிக்கவாசகர் அங்ஙனம் பொலிவு பெற்ற வரைச் ''சித்தம் அழகியார்'' என்று சுட்டுதல் காணலாம். உள்ளத்தைப் பண்படுத்துதற்கு, பூரணத்துவம் பெறச் செய்தற்கு (Mental perfection) அறம் என்ற உறுதிப்பொருள் தேவைப் படுகிறது. அறக்கருத்துக்கள் யாவும் திருக்குறள், திருமுறை முதலிய பெரியோர்களின் பனுவல்களில் போதிய அளவில் பொறிக்கப் பெற்றுள்ளன. அவற்றைப் பின்பற்றி ஒழுகுதல் வாயிலாக மனப்பக்குவம் பெறுதல் முடியும்.

உள்ளத்தின் தேவை நிரம்பிய பின்னர் உயிர்க்குரிய தேவை யினையும் எண்ணிப் பார்த்தல் வேண்டும். உடல், உணர்வு, உள்ளம், உயிர் என்பன நான்கும் தொடர்பு கொண்டுள்ள நிலையினைப் புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்ற இலக்கணக் குறியீட்டினால் சுட்டுதல் பொருந்தும். பல்வேறு சமயங்களைச் சுட்டுதற்கும் இத்தகைய பாகுபாடு கூறப்பெறுதல் உண்டு. எனவே உடல், உணர்வு, உள்ளம் ஆகிய மூன்றின் பூரணத்துவத்திற்கு முறையே பொருள், இன்பம், அறம் என்பன தேவைப்படுதல் போல், இம்மூன்றையும் இயக்கும் உயிர்க்குப் பேரின்பம் என்ற உறுதிப்பொருள் தேவை ஏற்படுகிறது. உலக அனுபவங்களில் அழுந்தித் துய்த்து ஒதுக்கிய நிலையில் இதுகாறும் பெற்றிராத ஒரு பெருநிலை வாய்க்கும்பொழுது திருவருள் துணையினால் ஞானநிலையில் சிந்திப்பதாகிய பேரின்பம் உயிரின் பூரணத்துவத்தை (Spiritual perfection) உணர்த்துவதாக அமைகிறது. இதனை இறுதிக் குறிக்கோள் (பரமபுருஷார்த்தம்) என்று ஆன்றோர் எண்ணினர். திருமுறை ஆசிரியர்கள் யாவரும் இக்குறிகோளினைப் பூரணமாகப் பெற்றவர்கள். இலக்கண நூலில், ''அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே'' என்று சுட்டப்பெறும் பயனைத் திருமுறைகளும் தெளிவாக உணர்த்தியுள்ள திறத்தினைக் கண்டோம்.

**திருமுறைப்பயன்**

சைவநன்மக்கள் திருமுறைகளை நாள்தோறும் ஓதுவதைக் கடமையாகக் கொண்டவர்கள். அன்றாட வழிபாட்டில் ஒருசில பதிகங்கள் அல்லது பாடல்களை ஓதி இறைவனைப் பணிந்து பரவுவர். திருக்கோயில்களில் ஆகம முறைப்படி பூசை நிகழுங்கால் பஞ்சபுராணம் ஓதுதல் ஒரு மரபாக உள்ளது. தேவாரத்தில் ஒரு பாடல், திருவாசகத்தில் ஒருபாடல், திருவிசைப்பாவில் ஒருபாடல், திருப்பல்லாண்டில் ஒருபாடல், திருத்தொண்டர் புராணத்தில் ஒருபாடல் என்று ஐந்து பாடல்களை ஓதுதல் இன்றும் ஆலயங்களில் காணலாம்.

அருளாசிரியர்கள் மொழிந்துள்ள திருப்பதிகங்கள் ஆற்றல் வாய்ந்தவை. சேக்கிழார் பெருமான் பதிகங்களின் பாங்கினை உரிய முறையில் பெரியபுராணத்தில் பொறித்துள்ளார். திருஞானசம்பந்தர் அம்மையின் ஞானப்பாலினைப் பருகியதும் பாடிய முதற்பாடல், ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்குவது. இப்பாடலின் தொடக்கம் குறித்துச் சேக்கிழார்.

''எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த
எழுதுமறை
மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க்
குரைசிறப்பப்
பல்லுயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பால்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச்
சிறப்பித்து'' (12-28-75)

என்று எழிலுறப் புலப்படுத்தியுள்ளார். 'தோடு' என்ற முதற்சொல்லில் உள்ள ஓகாரம் மூலமந்திரமாகிய பிரணவ ஓசை. அதனை ஊர்ந்துவரும் தகரம் தமிழைக் குறிப்பது, திருஞான சம்பந்தர் பாடுவது எழுதுமறை. வடமொழி மறை எழுதா மறை, எனவே, அதற்கு நிகராக விளங்கும் எழுதுமறை தமிழில் மலர்ந்து உலகுயிர்கள் இன்புற்றுச் சிறக்கப் பாடிவார். அன்றியும் 'தோடுடைய செவி' என்று சிறப்பித்தமை, அப்பாடல்கள் பரம்பொருளாகிய ஈசனின் திருச்செவியில் செல்லும் முறைமையினை உணர்த்துதற்கு என்று அருமையான விளக்கம் தந்தனர். சிறந்த அருளாளரும் வரலாற்றாசிரியரும் கவிஞரும் ஆகிய சேக்கிழார் இத்தகைய பாடல்களில் மேதக்க உரையாசிரிய

ராகவும் காட்சி தருகிறார் என்பது எண்ணி இன்புறத்தக்கது. 'ஓ' என்று தமிழ் தழுவிய ஓசையுடன் தொடங்கும் முதல் திருமுறை முதற்பாடலுடன் பன்னிரண்டாம் திருமுறையின் இறுதிப்பாடலின் இறுதி ஓசையினையும் இணைத்துப் பார்த்தல் சைவப் பெருமக்களின் இயல்பாகும். பெரியபுராணத்தில் இறுதிப்பாடல் இதுவே.

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி **உலகெலாம்**'' (12-42-86)

எனவே தமிழோடு தொடர்புடைய ஓம் எனத் திருமுறை நிறைவு பெறுதல் இயல்பாக அமைந்துள்ள தனிச்சிறப்பாகப் போற்றப் பெறுவது. ஓம் என்ற மூலமந்திரத்திற்குப் பொருளாகிய இறைவனின் பொருள்சேர் புகழினைத் திருமுறைகள் தெளி வுறுத்திப் பரவின என்பது புலனாகும்.

இங்ஙனம் மந்திர ஆற்றல் மிக்க திருமுறைப் பாடல்கள் வாழ்க்கைக் குறிக்கோள்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் உறுதற்குப் பெருந்துணையாவன; நல்லாற்றுப்படுத்துவன; நன்னெறி நிறுத்துவன. திருமுறைகளை நாள்தோறும் ஓதுவதன் வாயிலாக உய்திபெற முடியும் என்ற உண்மையினைச் சிவபோக சாரத்தில்

''ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்-சீசி
சினமே தவிராய் **திருமுறைக ளோதாய்**
மனமே உனக்கென்ன வாய்''

என்று தருமையாதீனக் குருமுதல்வர் குருஞானசம்பந்தர் மனத்தை நோக்கிப் போதிப்பதால் உணரமுடியும். தன்னல மாகிய ஆசைகளைத் துறத்தல் வேண்டும். தன்னிலும் தற்சார்ந்தாரிடத்தும் கொண்டுள்ள பாசம் அகல வேண்டும்

இவ்விரண்டும் அகன்றுவிடின் எல்லோரையும் ஒப்பமதிக்கும் அருள் உள்ளம் தோன்றும். அவ்வுள்ளம் எழுதற்கு ஐந்தெழுத்தோதிச் சிவபூசை செய்து வருதல் வேண்டும். சினம் என்னும் தீயை அன்பென்னும் நீரினால் அணைத்தல் வேண்டும். திருமுறைகளின் பொருள் உணர்ந்து ஓதி நன்னெறி நின்றொழுகுதல் வேண்டும். அதனால் உலகுயிர்கள் நலம்பெறும்,

ஆதலின், ''நலம்வளர்க'', ''இன்பமே எந்நாளும்'' ''என்றும் இன்பம் தழைக்க'', ''யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்'' ''உலகம் வாழ்க'' என்று திருமுறை வழங்கும் நற்செய்தி (Message) யாவர்க்கும் இன்பம் பயத்தல் உறுதி.

# மேற்கோள் நூல்கள்

## முதன்மை ஆதாரம்

1. முதலாம் திருமுறை (மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு. தருமபுரம், 1953.

2. இரண்டாம் திருமுறை (சித்தாந்த ரத்னாகரம் முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1954.

3. மூன்றாம் திருமுறை (பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1955.

4. நான்காம் திருமுறை (சித்தாந்தரத்னாகரம் முத்து, சு. மாணிக்கவாசக முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1957.

5. ஐந்தாம் திருமுறை (திருநெறிச்செம்மல் வி.சா. குருசாமி தேசிகர், செஞ்சொற் கொண்டல் சொ.சிங்காரவேலன், சிரோமணி வித்வான் வி. சபேசன் உரைகளுடன்), தருமை ஆதீன வெளியீடு, 1963.

6. ஆறாம் திருமுறை (சித்தாந்தக் கலைமணி மகாவித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1967.

7. ஏழாம் திருமுறை (சித்தாந்தக் கலைமணி மகா வித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1964.

8. அ) **எட்டாம் திருமுறை** (சித்தாந்தக் கலைமணி மகா வித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1966.

ஆ) **திருவாசகம்**, சைவசித்தாந்த மகாசமாசப் பதிப்பு, சென்னை, 1941,

9. அ) **ஒன்பதாம் திருமுறை** (சித்தாந்தக் கலைமணி மகா வித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார் குறிப்புரையுடன்) தருமை ஆதீன வெளியீடு, 1969.

ஆ) **ஒன்பதாம் திருமுறை** (திருமுறைக் கலைஞர் வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் உரையுடன்) காசிமடம் வெளியீடு, திருப்பனந்தாள், 1974.

10. **பத்தாம் திருமுறை** காசிமடம் வெளியீடு, திருபனந்தாள் 1968.

11. **பதினோராம் திருமுறை** (வாகீசகலாநிதி சி.வ.ஜ. குறிப்புரையுடன்) காசிமடம் வெளியீடு, திருப்பனந்தாள், 1972.

12. **பன்னிரண்டாம் திருமுறை** காசிமடம் வெளியிடு, திருப்பனந்தாள், 1970.

**துணைமை ஆதாரம்**

1. **அகத்தியர் தேவாரத்திரட்டு** சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியிடு, சென்னை, 1976.

2. அருணாசலம். மு. **ஒன்பதாம் திருமுறை** (திருமதி சொருணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு நூல்). சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1974,

3. இராமலிங்க அடிகள், **திருவருட்பா I & II**, ஊரன் அடிகள் பதிப்பு, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1981.

4. இளங்கோவடிகள், **சிலப்பதிகாரம்**, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1950.

5. **இறையனார் களவியலுரை**, சைவசித்தாந்த நூற் பதிப்புக்கழக வெளியீடு, சென்னை, 1976.

6. எல்லப்ப நாவலர்,
   1. **திருவருணைக் கலம்பகம்**, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு சென்னை, 1976.
   2. **நால்வர் நான்மணி மாலை** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1963.

7. கடவுள்மாமுனிவர், **திருவாதவூரடிகள் புராணம்** (ம. க. வேற்பிள்ளை உரையுடன்) ஆறுமுக நாவலர் பதிப்பு, வித்தியானுபாலன அச்சகம், சென்னை, 1957.

8. கந்தசாமி, சோ. ந.
   1. **காப்பியக் குறிக்கோள்**, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1981.
   2. **தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும்**, முதற்பாகம், இரண்டாம் பகுதி, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, தஞ்சாவூர், 1989.

3. **தமிழும் தத்துவமும்**, *மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1976.*

4. **திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்,** *மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1977.*

5. **தெய்வச்சிலையார் உரைத் திறம்,** *மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1981.*

6. **பரிபாடலின் காலம்,** *அபிராமி பதிப்பகம், அண்ணாமலை நகர், 1972.*

7. **புரட்சிக்காப்பியம்'** *அபிராமி பதிப்பகம், அண்ணாமலை நகர், 1972.*

9. *கம்பர்,* **இராமாவதாரம்,** *கம்பன் கழக வெளியீடு, சென்னை, 1976.*

10. *குருஞானசம்பந்தர்,* **சிவபோகசாரம்,** *தருமை ஆதீன வெளியீடு.*

11. **சங்க இலக்கியம்** I & II *சமாசப் பதிப்பு, பாரி நிலையம், சென்னை, 1967.*

12. சதாசிவப்பண்டாரத்தார், தி. வை. இலக்கியமும் கல்வெட்டுகளும், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1977.

13. சாத்தனார், **மணிமேகலை**, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1949.

14. சுவாமிநாத தேசிகர், **இலக்கணக்கொத்து**, ஆறுமுக நாவலர் பதிப்பு, வித்தியானுபாலன அச்சகம், சென்னை, 1911.

15. **தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு**, ஆறுமுக நாவலர் பதிப்பு, வித்தியானுபாலன அச்சகம், சென்னை, துர்மதி ஆண்டு.

16. திருஞானசம்பந்தக் கண்ணுடைய வள்ளலார், **சிவானந்த மாலை'** தருமையாதீன வெளியீடு.

17. திருத்தக்கதேவர், **சீவகசிந்தாமணி**, உ.வே.சா, பதிப்பு, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.

18. துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு. **சைவத்தமிழிலக்கிய வரலாறு** (கி. பி. 7ஆம் நூற்றாண்டுவரை) அண்ணா மலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1958.

19. **தேவார அருண்முறைத் திரட்டு**, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1961.

20. **தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீடு, சென்னை, 1953.

21. **பதினெண்கீழ்க்கணக்கு**, மர்ரே பதிப்பு, சென்னை, 1981.

22. பரஞ்சோதி முனிவர், **திருவிளையாடற்புராணம்**, அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, அண்ணாமலைநகர், 1991.

23. பிங்கல முனிவர், **பிங்கல நிகண்டு**, வீ. தி. சிவன் பிள்ளை பதிப்பு, சென்னை, 1890.

24. மறைமலை அடிகள், **மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்**, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1967.

25. **மெய்கண்ட சாத்திரம் பதினான்கு** (மூலமும் உரையும்) I & II சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1975.

26. விபுலானந்த அடிகள், **யாழ்நூல் என்னும் இசைத் தமிழ் நூல்**, கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சை, 1947.

27. வெள்ளைவாரணனார், க. 1. **பன்னிரு திருமுறை வரலாறு முதற்பகுதி**, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, அண்ணாமலை நகர், 1962.

2. **பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம்பகுதி** அண்ணாமலை நகர், 1969.

ஆங்கில நூல்கள்

1. **Collected Lectures on Saiva Siddhanta,** Annamalai University, Publication, Annamalai Nagar, 1978.

2. **Devasenapathi V. A. Saiva Siddanta as Expounded in the Sivajnana Siddhiyar and Its Six Commantaries,** University of Madras, 1974.

3. **Dorai RangasWamy, M. A. The Religion and Philosophy of Tevaram** University of Madras, 1958.

4. **English Critical Texts,** Edited by **D. J. Enright and Ernst De Chickera,** Oxford University Press, Madras, 1975.

5. **Kandaswamy, S. N.**

   i. **Buddism as Expounded in Manimekalai,** Annamalai University Publication, Annamalai nagar, 1978.

   ii. **The concept of God in SaivaSiddhanta.** pp. 75-106, Journal of Indian Studies, University of Malaya, Kuala Lumpur, Malaysia, 1984.

6. **Monier Williams, Sir. Buddhism - In its connectiou with Bramaniam and Hinduism,** London.

7. **Narayana Ayyar, C. V. Origin and Early History of Saivism in South India,** University of Madras, Madras, 1974.

8. **Paul Wheatley, The Kings of the Mountain - An Indian Contribution to Statecraft in Southeast Asia,** Universty of Malaya, Kuala Lampur, Malaysia, 1980.

9. **Proccedings of the First Intererrnational Conference Seminar of Tamil Studies,** Vol. I, Department of Indian Studies, University of Malaya, Kuala Lumpur, Malaysiya' 1966.

10. **South Indian Inscriptions, Vol. IV** Edited by **E. Hult z sh.** (Reprint) Naurang, New Delhi—1987.

11. **Vanmikanathan, G. Pathway to God through the Thiruvachakam,** Sri kasi Mutt Publication, Thirupanandal, 1980.



# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை-600113

## புதிய வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | Mysticism of Love in Saiva Tirumurais | ... | 50 00 |
| 2. | தொல்காப்பியம்—பொருள்—களவியல் | ... | 85 00 |
| 3. | The Contributions of the Tamils to Indian Culture | | |
| | Vol, 1. Language & Literature | ... | 18 00 |
| | Vol. 2 Art & Architecture | ... | 30 00 |
| | Vol. 3 Socio Cultural Aspects | ... | 90 00 |
| | Vol. 4 Religion & Philosophy | ... | 80 00 |
| 4. | எண்பத்து மூன்றில் தமிழ், பகுதி-1 | ... | 47 00 |
| 5. | எண்பத்து மூன்றில் தமிழ் பகுதி-2 | ... | 30 00 |
| 6. | சிவகிரி குமர சதகம் | ... | 39 00 |
| 7. | புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை | ... | 27 00 |
| 8. | தேரையர் அந்தாதி | ... | 33 00 |
| 9. | குசலவர் சுவாமி கதை | ... | 36 00 |
| 10. | குணவாகடம் | ... | 40 00 |
| 11. | தோட்டுக்காரி கதை | ... | 28 00 |
| 12. | சங்கத் தமிழரின் மனிதநேய மணி நெறிகள் | ... | 22 00 |
| 13. | உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரைகள் அடைவு | ... | 35 00 |
| 14. | Selected Poems of Bharadhidasan Translation—Tamil—English | ... | 60 00 |
| 15. | ,, ,, ,, —Tamil—Malayalam | ... | 60 00 |
| 16. | ,, ,, ,, —Tamil—Kannada | ... | 60 00 |
| 17. | ,, ,, ,, —Tamil—Telugu | ... | 60 00 |
| 18. | பாரெலாம் பரந்த தமிழர் | ... | 25 00 |
| 19. | காண்டேகரும் கா. ஸ்ரீ.ஸ்ரீ.யும் | ... | 18 00 |
| 20. | Chieftains of the Sangam Age | ... | 20 00 |
| 21. | A Comparative Study of Tamil and Japanese | ... | 15 00 |
| 22. | தமிழும் பிற துறைகளும் | ... | 35 00 |
| 23. | பெண்ணியம் | ... | 25 00 |
| 24. | விலங்கியலும் தமிழியலும் | ... | 10 00 |
| 25. | தமிழும் தெலுங்கும் | ... | 15 00 |
| 26. | தமிழ் ஆய்வுக் களங்கள் | ... | 70 00 |
| 27. | வ. உ. சி.யும் தமிழும் | ... | 18 00 |
| 28. | தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புக்கள் | ... | 14 00 |
| 29. | புதுமைப்பித்தன் கதைகளில் சமுதாய விமரிசனம் | ... | 20 00 |
| 30. | கனகாபிஷேக மாலை—திறனாய்வு | ... | 16 00 |
| 31. | இருபதின் கவிதைகளில் சமூக நீதிக்கோட்பாடு | ... | 20 00 |
| 32. | பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம் | ... | 60 00 |
| 33. | தொல்காப்பியம்—பொருள்—பொருளியல் | ... | 32 00 |